உ

சிவமயம்.

முக்களாலிங்க முனிவர்

அருளிச்செய்த

# பாவநாசத்தலபுராணம்

மூலமும்,

சேற்றூர் சமஸ்தான வித்துவான்

## மு. ரா. அருணாசலக்கவிராயர்

இயற்றிய

வசனச் சுருக்கமும்.



இவை

திருவாவடுதுறை யாதீனம்

தக்ஷிணம் காறுபாறு

ஸ்ரீலஸ்ரீ வயித்தியலிங்க சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

மேற்படி

அருணாசலக்கவிராயரால்

பல பிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து,

சென்னை:

அல்பீனியன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

சார்வரிஸு சித்திரைமீ

இதன் விலை, ரூபா. க.

# சிறப்புப்பாயிரம்.

சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான்

## மு. ரா. அருணாசலக்கவிராயர் செய்தது.

உலகின்முத்தி தருந்தலங்கட் கரசாகி யிருத்தலினு முய ர்கோ முத்தித், தலமெனவான் றோரெவருங் கைகுவிக்கு மான் மியஞ்சூர் தருஞ்சீ ரோங்கு, மலகில்புகழ்த் துறைசையினி லபரசிவ மென்னுநந்தி யடிகளாதி, யிலகுகுரு பரம்பரைவான் பிறைபோல வளர்ந்தோங்க வினிதி னெண்ணி. (க)

பரசிவஞ்செஞ் சடையாதி யொருவியரு ளுருவெடுத்துப் பாரின் வந்து, கரவனலும் விழியனலும் வேற்றுருக்கொண் டமைந்தவொரு காட்சி போல, விரவியசெங் காவியுடை யரை புனைந்தம் பலவாண மெய்ப்பேர் பூண்டு, புரவியலு மின்ன ருட்செங் கோல்செலுத்தி யுயிரனைத்தும் புரக்கு நாளில். (உ)

பொன்னிமய மலையரசன் மகளைமணந் தான்மணக்கும் போது தென்பார், தன்னில்வர விடுத்தமுனி யென்போல்வா ர்க் கதிரிசியர் தானுயுற்ற, துன்னியே யழைத்தினிமேற் றிரிசி யமாய் நம்பணிசெய் துறைதி யென்னத், துன்னியவன் பொ திகைமலைச் சாரலிலவ் வாறிருந்த தோற்றம் போல. (ங)

சிவந்திபுரந் தனிற்காறு பாறெனும்பே ரதிகாரஞ் சிறப்ப வாய்ந்து, தவந்திகழ விருந்தவயித் தியலிங்க முனிவர்பிரான் றரும மேயுள், ளுவந்தினிய நல்லொழுக்கங் கல்வியறி வுபசார முதார சீல, நவந்திகழுங் குருலிங்க சங்கமபத் தியிற்சிறந்த நயக்பெற் றுள்ளோன். (ச)

ஓங்குபிர ணவத்தொடைந்து முச்சரித்தெம் மான்பூசை யுஞற்றுங் காலைப், பாங்குபெறு மார்க்கண்டன் போற்சிவவே டப்பொலிவு பயிலு மெய்யான், றாங்குபொரு நாகதிநீ ரத்தின் மறை யொருமூன் றுங் தண்களாவா, யாங்குசிற்ப வதனிழற்கீழ் ருளோத்தபிரான் றிருவடிக்கீ ழன்பு மிக்கோன். (௫)

அக்களா வமர்பாவ நாசமெனுந் தலமகிமை யாம்புரா ணம், புக்களா வியகல்வி யறிவினாற் சிறந்தநீ புவன மோங்குந், இக்களா வுறவச்சிற் பதிக்கும்வகை சோதித்தல் செய்தனன் றென், றிக்களா வியமொழியா லருளிவேண் டியசெம்பொ னீந்தான் மன்னே. (௬)

இந்தவருட் பணியெனக்குக் கிடைத்ததெனப் பேருவகை யெய்தி யன்பாற், செந்தமிழேட் டுப்பிரதி வரவழைத்தொப் புமைநோக்கித் திருத்தஞ் செய்து, வந்தவிதம் பிறவிக்கோர் மருந்திதென மெய்யடியார் மனத்துட் கொள்ள, வந்தமுள வச்சினிலிட் டாயிரம்புத் தகமாக வமைத்த தாமால். (௭)

# முகவுரை.

முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானார், 'ஆன்மாக்கள் நெறியறிந்து முத்திநிலைக்கூடுக' என்று தமதுள்ளத்தெழுந்த அவ்வியாஜ பெருங்கருணையினாலே வேதாகமமென்னு முதனூல்களை யருளிச்செய்தார். அவைகள் தோத்திரரூபமாகவும் விதிபோதமாகவு மிருத்தலின் தாழ்ந்தபக்குவர்களை வழிப்படுத்தற்கட் பெரும்பயன் றராவாயின. ஆகலின், வேதவியாசமகாமுனிவர் பதினெண் புராணங்களையுங் கதாரூப ஞானபோதமாகத் திருவாய் மலர்ந்தருளினர். இப்புராணங்களுள்ளே பல்வகைப்பட்ட நீதிகளும் பல்வகைப்பட்ட நெறிகளும் சரித்திரங்களோடு புணர்த்து அலங்காரமிக்க செய்யுட்களான் அறிவிக்கப்படும். இவ்வாறு புராணங்கள் ஒருதலையின்றியமையாதனவும் மற்றொருதலை இன்பாகரங்களுமாய் நிலவுகின்றன.

இனியிப்புராணங்களுக்குள்ளே பத்தியோகஞான நெறிகளிற் றலைநின்ற அடியார்களை யாட்கொள்ளும் பொருட்டுச் சிவபெருமான் எழுந்தருளிய தலங்களின் மான்மியங்கள் விரவிக்கூறப்பட்டுக் கிடக்கும். பிற்காலத்துப்பெரியோர், ஆண்டுச் சுருக்கிக் கூறப்பட்டனவற்றை விரித்து வழிநூல்செய்தாரும் கூறப்படாதொழிந்தன வற்றிற்குப் புராணமுறையறிந்து வேறுமான்மியங் கற்பித்தாருமெனப் பலவகையினராவர். இந்நூல்களெல்லாம் வடமொழியிலேயே யிருத்தல்பற்றித் தமிழ்மொழியே வல்லமாக்கட்குப் பெரும்பயன் றராமையின் அவற்றினைத்தமிழ்மொழியில் மொழிபெயர்த்தாரும் கருணைமிக்க பெரியோரினத்துட் படுபவரே.

மற்றுத்தலங்களெல்லாம் அவ்வவற்றின் முற்கால சரித்தி ரப்பெருமை பற்றியே சிறப்படையு நெறியினவாம். பல்லா யிர வருடங்கட்குமுன் ஒருதல மிருந்தது எனில் அது முனி புங்கவர் ஆட்சிக்குள்ளிருந்ததாம். நிறைமொழிமாந்தர் வழி பட்டபெற்றிமை அதுபெற்றமையின் மூர்த்தி தலந் தீர்த்தம் மூன்றுமொப்பச் சிறந்தனவாம். அகத்தியமாமுனிவர் ஆட்சி யுட்பட்ட பொதியமலைச்சாரலில் விளங்கும் பாவநாசமும் அ ன்னதலமே, அதனையடைந்து சிவபெருமானை வழிபட்டவர் களும் விராட்டு முதலிய பெரியோர்கள் பலரே. அஃதுண் டான காலமும் பல்யுகங்கட்கு முந்தியகாலமே. இத்தலமான் மியம் பதினெண்புராணங்களுளொன்றாகிய பிரமாண்டபுரா ணத்தி னோர்பகுதியிற் கூறப்பட்டது. அதனைத்தமிழ்க்கவி வு றுத்தினார் ஸ்ரீமுக்களாலிங்க முனிவர் என்பது கன்னபரம்ப ரையாற்றெரியப்படும். இந்நூலாசிரியரைப்பற்றிப் புராணத்து ளாதல் புறத்தேயாதல் யாண்டும் எட்டுணையும் எழுதப்பட்டி லது. ஆயினும் இப்பெரியோர் திராவிட மாபாடியகர்த்தாவா கிய திருக்கயிலாச பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து மாதவச்சிவஞான முனிவர் குலத்தைச்சேர்ந்தவரோ வென் றையுறுதற்கிடமுண்டு. சிவஞானமுனிவரது பிள்ளைத்திருநா மமும் முக்களாலிங்கப் பெயராதல் பற்றியும் அவரது குலத் துள் முனிவரென்னும் பட்டமும் வழக்காறாயிருந்தமை பற்றி யும் அவரது முன்னோரும் தமிழ்க்கல்விசான்ற பெரியோராயி ருந்தன ரென்னும் ஐதீகமுண்மைபற்றியும் சிவஞானமுனிவர து முன்னோருளொருவரென்பதில் ஐயப்பாடிலதென்பதும் உறுதிமொழியாம். சிவஞானமுனிவர்க்கு முன்னர்த்தான் இவ் வாசிரியரிருந்திருப்பாரோ வென்னில் சொற்பிரயோகம் செய் யுணடை முதலியன அதனையே குறித்தலின் அவ்வாறுரைக் கப்பட்டது என்க. மற்று நூலுட்காணப்படும்,

அம்பொன் மாளிகை யாறைவாழ் மயிலப்ப னருள்குமா ரசுவாமி
தம்பி யாமுகில் புகழ்ச்சிவ சயிலநா தனுக்குமுன் னவஞானேன்

கம்ப மாகரி காத்தரு ளழகப்பன் கனிந்தவன் பொடுங்கேட்ப
வும்பர் நாயகர் சந்நிதா னத்தினி லுரைத்ததிக் கதையாமால்.

என்னுஞ் செய்யுளால் நூலாசியரை யாதரித்தார் அக்காலத்துச் செல்வவந்தராயிருந்த அழகப்ப முதலியாரென்பது அறியப்படுகின்றது.

இனி யிப்புராணம் முப்பத்தைந்து சருக்கங்களும் ஆயிரத்து முப்பத்தொன்பது செய்யுட்களும் பொருந்தச்செய்யப் பெற்றது. ஏனையபுராணங்களுட் போலாது நாட்டுச்சருக்கமும் நகரச்சருக்கமும் இடையிடையே கூறப்பட்டது. அதற்குக்காரணம் ஆதியில் நாடுநகரமும் இருந்தன வல்லவென்பதேபோலும். சிவபூசைச்சருக்கம் தத்துவவுபதேசச்சருக்கமென்பனவற்றுள் அவ்விரண்டுங் கிரமமாக விரித்துக்கூறப்பட்டன. சிவபூசையது மகிமையும் பயனும் முறையும் தத்துவங்களின்து வகையுஞ் செயலும் ஆண்டுத்தெளிவாகக்காணலாம். வாக்கினது செம்மையோ இத்தன்மைய வென்றெடுத்துச் சொல்லவேண்டா; நூலைநோக்குவோர்க்குத் தானேபுலப்படும். இழுமென்மொழியான் விழுமியது நுவலப் பட்டநூலென்றே யிதனையுரைத்தல் வேண்டும். இந்நூலாசிரியர் பாட்டுச்செய்யச் சிறிதும் வருந்தினாரல்லர் நுண்மாணுழைபுலமும் நுவலருங்கல்வித்திறனும் உடையார் ஒருவர் செய்ததே இந்நூலென்பது வேறுகரியின்றி நூலேகாட்டாநிற்கும். நூலாசிரியர் செய்யுங் கற்பனைகளெல்லாம் பிற்காலத்துப் புராணத்தனபோலன்றிச் சாத்திரக்கருத்தும் பத்திரசமும் மேவிட்டு மனத்துக்கின்பமிடையறுதளிக்குந் தன்மையவாயின.

இத்துணைச் சிறப்புக்களையுடைய இந்நூலினை வெளிப்படுத்தாதிருத்தல் தமிழ் நாட்டிற்கு ஒருபெருங்குறையென்னும் எண்ணம் மிகத்தூண்டப் பலபிரதிகள் தேடியடைந்து நூலையொருவாறுபரிசோதித்தேன். பிரதிகளுமுற்குறித்த காரணங்களோடு நூல் சுமார் முந்நூறு யாண்டுகட்கு முந்தியதென்

றே காட்டாகின்றன. பரிசோதித்து வைத்துக்கொண்டிருந் தால் எனக்கும் என்னண்பருட் சிலருக்குமேபயன்படும். உலக மதனுலாயபயனையடைதல் எப்படி யென்றிருக்கும்பொழுது சைவசமயாசார்யஸ்தானமும் சைவசமயபரிபாலன ஸ்தானமுமாகிய திருவாவடுதுறை யாதீனத்துத் தக்ஷிணங் காறுபாறு ஸ்ரீ வயித்தியலிங்க சுவாமிகளுடைய தரிசனமெனக்குச் சித்தித்தது. அப்பொழுது, எனதுள்ளக்கருத்தை வெளிப்படுத்தக் கேள்வியுற்றுத் தாமெடுத்துக்கொண்ட துறவாச்சிரம வொழுக்கத்தை வழுவாதநுட்டிப்பவர்களும் தாம் பிரதிநிதியாயிருக்கும் ஸ்ரீ@ஸ்ரீ மகா சந்நிதானத்தின துள்ளக்கருத்தறிந்து மடாலயநெறியை நடாத்துபவர்களும் கல்விகற்றோரை யாதரித்தல் வாய்மை முதலிய நற்குண நற்செய்கைகளை மேற்கொண்டவர்களுமாகிய ஷை வயித்தியலிங்க சுவாமிகள் நூலினைப்பலவாறுகப் புகழ்ந்து நூல்செய்புணைடைத்தாயிருத்தல் பற்றிக் கல்வியுணர்வில்லாத சாமானியர்க்கு எளிதின் விளங்காமையின் ஒவ்வொரு சருக்கத்தினிறுதியிலுஞ் சருக்கத்துட்கண்ட பொருளினைச்சுருக்கி வசனத்திலெழுதவேண்டுமெனக் கட்டளையிட்டதோடும் அச்சிடுதற்கு வேண்டிய திரவியசகாயமுந் தருவதாக அருளிச்செய்தனர். அவ்வாறே வசனநடையெழுதித் திரவிய சகாயம் பெற்றுச் சிவபிரானது திருவருட்பாங்கினுலும் ஷை சுவாமிக ளாசீர்வாதத்தினுலும் அச்சிட்டு வெளிப்படுத்தினேன். இந்நூல் நெடுநாணின்று உலகத்துக்குத் தக்கபயனை யளிக்கக்கடவது. சுபம்! சுபம்! சுபம்!

இங்ஙனம்:

சேற்றூர்ச்சமஸ்தான வித்துவான்,

மு. ரா. அருணாசலக் கவிராயன்.

சிவமயம்.

# பாவநாசத் தலபுராணம்.

## விநாயகர் வணக்கம்.

சீதளப்புண் டரிகவெள்ளை யோதிமமென் னுவிருந்து செழிப்பச் செய்யுஞ், சாதனத்தி லெடுத்துரைக்குந் தந்திமுக னெனவொருபேர் தரித்ததல்லாற், பூதலத்து மானளித்த பூங்குழைகாங் கேயன்மணம் புணரும் வண்ணங், காதலிப்ப வனத்துமுற்றுங் களிற்றுருவம் படைத்துவந்த கருணை வாழ்வே.

## பாயிரம்.

### வாழ்த்து.

பூமாது சிங்கைசெய்ய பூங்கமல மெனவாழ்க புவனியோங்க, மாமாரி பொழிகவென்று மறையவரா னினம்வாழ்க வான ளாவித், தேமாரி நதிபெருகச் செழித்ததிரு முக்களவிற் சிறந்து வாழுங், கோமானின் னருள்பெருக கொற்றவர்செந் தமிழ்ப்புலவோர் கொழித்து வாழ்க. (க)

### சிவபெருமான்.

கலியாண லிங்கர்திரு முக்களா லிங்கர்சந்தக் கானங் கான, மலிவாகும் பொதியவரை வயிராச லிங்கரன்பர் வணங்கிப் போற்றப், பலனுநங் கொடுத்தருளும் பழமறைநா யகர்கருணைப் பாவ நாச, ருலகாளுக் கிடங்கொடுத்தா ருபயபத மபயமெனக் குதவு மாதோ. (உ)

### உமாதேவி.

பூங்கமலத் தோதிமமுஞ் சிங்கமுஞ்சக் கரவாளப் புள்ளுஞ் சங்கு, மாங்குயிலு மதுகரமு மழையும்பா தாதிபெற்ற மயி

லா மென்னத், தேங்கரும்பு மொழிமேனை திருமுலைப்பான்மை டியில்வைத்துத் தெவிட்ட வூட்ட, வோங்கலர சிடத்துதித்த வுலகனா யகிசரண முளத்துள் வைப்பாம். (ங)

பூதலவிநாயகர்.

தழைத்தருள்பா வவிநாசத் தலபுரா ணஞ்சிறந்து தரைமே லோங்க, வுழைத்தவள வொருமருப்பு முலவைதரு செவியுமூ ந்நூ லுரக மார்புங், குழைத்தமத சலிதியுங்கும் போதாமுஞ் சிவந்தகுறுஞ் சரணும் வாய்ந்த, புழைத்தடக்கைப் போதகமா ம் பூதலவி நாயகனைப் போற்றல் செய்வாம். (ச)

முருகக்கடவுள்.

வாரணமாங் கொடியிரண்டும் வனத்துவள்ளி மென்கொ டியு மருவித் தாங்கிப், பூரணகும் போதயனுக் கருந்தமிழாஞ் சொன்மலர்கள் பூத்துக் காய்க்க, வாரணனூர் முடிதகர்த்து முக்கணுறுங் கனிதரவாய்த் தமரர் போற்றக், காரணகா ரியங் கடந்த வேங்கையுருக் கொளுமரசைக் கருத்துள் வைப்பாம்.()

சமயாசாரியர் நால்வர்.

குடத்தின்வடி விடத்தினிறை குளத்தினின்முன் பிறந் தவரைக் கொணர்ந்து பார்மேற், படைத்திடச்செந் தமிழ்ப்ப திகம் பாடியருண் மூவர்துணைப் பாதப்போது, மடக்கொடி கண் டகமகிழ நடித்தபிரா னெழுதவன்று மதுரக் கோவை, விடப்படுமோ கத்துரைத்தார் மலர்ச்சரணு மென்னகத்து வி ளக்கென் றுமால். (கூ)

குரு வணக்கம்.

கங்கைகரு ணாநதியாக் காளகண்ட மமுதகண்ட மாகத் தேய்ந்த, திங்கணிறை மதியாகத் தினம்பரசு மான்மலர்க்கை வசமாச் சேர்த்துப், பங்கமற வருளேக்க மூன்றுவிழி யாகநரர் படிவந் தாங்கி, மங்கலவே ளையில்வருசத் தியஞான குருபர னை வணக்கஞ் செய்வாம். (எ)

### புராண வரலாறு.

ஆதிபுரா ணங்கள்பதி னெட்டினுள்ளும் பிரமாண்ட மாம்பு ராணத், தோதியவுத் தரபாகக் கேத்திரவை பவகண்டத் து ணர்ந்தோர்க் கெய்தும், போதசிவ ரகசியத்தில் விரித்தபா வ விநாசப் புராணந் தன்னைச், சூதமுனி யுரைத்தபடி வடமொ ழியைத் தென்மொழியாச் சொல்ல லுற்றேன். (அ)

### அவையடக்கம்.

வேதனுக்கு மளப்பரிய விழுப்பொருளின் சிவகதையை மேலாங் கல்வி, மாதவர்க்குக் களிப்புவரச் சிறியேனு முரைப்ப னென வந்த வேட்கை, தீதகற்றி யுலகோங்கத் திமிரமகற் றி யவிரவி தேர்போற் பொன்னம், பூதரத்தைத் தினஞ்சூழப் பேய்த்தேரு கினைத்தெழுந்து போதல் போலும். (௯)

வேறு.

மீனோசை வலமோவேல் விழியளக மெனுங்கொடிபால் விருப்பி னோர்க்குத், தேனோசை யெனவிசைக்குந் தும்புருநா ரதர்கீதஞ் சிறந்த காது, வானோசை கெடவொலிக்கு மானோ சை தனைப்பொறுத்த வாறு போல, நானோசை திரிந்துரைக்கு ம் புன்கவியு நன்கவியா நயப்பர் நல்லோர். (௧0)

### புராண நிகழிடம்.

கொன்றைமுடிக் கணிந்துவிடைக் கொடியுயர்த்தோர் கொடியிடப்பால் கொண்டு நிமான், கன்றையெடுத் தருள் பரன்வாழ் பாவநா சத்தலத்தின் காதை மேனு, ணன்றுபடை த் துயர்கதியி னுளும்வியப் புறவாழ நாடி யோர்கா, னின் றுதவத் துறைபயில்வோர் நிறைதவச்சீ பருப்பதத்தி னிகழ்ந்த தம்மா. (௧௧)

பாயிரம் முற்றிற்று.

---

## முதலாவது: சீபருப்பதச் சருக்கம்.

குழவிமதி யெதிர்கொளப்போங் கொள்கையென மேனோ க்கிக் கோடு தோன்றப், பழகுமதந் தழைசெவிமேற் பரந்தொ ழுகும் படிபகடு பனைக்கை நீட்டி, மழைமதர்க்க ணரம்பையர் வாழ் வானகத்துச் சந்தானம் வளைய வாங்கித், தழையொடித் து வண்டோச்சிக் கவுளொழுக்கு நிலைக்குலடு தயங்கக் காட்டி.

கம்புதா விருளழிக்குங் குறுந்தாள் நெடுஞ்சரளங் கவினத் தோய்ந்து, தம்பெருமை தாமறியாத் தவமுனிவ ரவமுனியுஞ் சாலை வாய்ந்து, பம்புசுனை மீன்குதிக்கத் தேன்குதிக்கும் பிர சவிருல் பலவுந் தாங்கி, யம்புலிமா னுளங்கவல வெம்புலிவா ய ங்காக்கு மறைபெற்றோங்கி. (௨)

பறவாது விண்ணளவும் படருமெகி னமுங்கோடு பற்றி னூலு, மறமீறி யெதிராடிப் பாயாத சேவுமடி வைத்து வாங் கா, தறவோர்தம் முறைபோல நிலைதவறு வாணும்வளை யக லாப் புற்றி, னுறையாத நாகமுமுண் டிங்காகத் தெனநாக முவ ப்பக் காட்டி. (௩)

குருச்செறியு மணித்தொகுதி கோடிகு ரியருதயங் கொ ழித்துக் காட்டக், கருச்செறியு மழைத்தொகுதி யிருள்காட் டப் பகலிரவு காட்டா தோங்கி, மருச்செறியு மலர்ச்சோலை வரிச்சிறைத்தும் பிகள்பாடும் வளத்தால் வாய்ந்த, திருச்சயி லச் சிவக்கொழுந்தைச் சிவநிசியிற் பரவுவது சிறப்பென் றெ ண்ணி. (௪)

அத்திரிமாற் கண்டேயன் கபிலனங்கி ராவசிட்டன் பிருகு யாச, னித்துருவன் சுகனசிதன் சத்திசய மினிகவுண்டி னிய ஞானீதன், சத்தியன்கா சிபன்வேத வியாதன்கோ தமன்சூதன் சவுன காதி, யுத்தமவித் தகமுனிவ ரங்காளி லச்சயிலத் துவக் துற் றூரால். (௫)

வந்துசிவ நிசியாம நாலினும்பூ சனைபுரிந்து வணங்கி வா ழ்த்திச், சிந்தைமகிழ் வொடும்பிறிதோர் சிறந்தவிடத் தினிதி ருந்து திருந்து கேள்வி, யந்தமினுன் மறைபதினெட் டாதிபுரா ணமுமெவரு மறியு மாற்றாற், பந்தமற வுரைத்தருளும் வேத வியா தனைநோக்கிப் பகா லுற்றூர். (௬)

காலமுன் றையுமுணர்ந்து மூன்றுலகத் தியல்புமுற்றுங்
கணித்தா ராய்ந்து, பாலலோ சனர்சரணம் பரவுபரா சரமுனி
வன் பாலனான, சீலமா தவவுனது திருவாக்கான் முன்கேட்ட
சிவபுராணத், தேலுமதி சயஞ்சிறிது கேட்டறிய வேண்டுமெஃ
தியம்புங் காலே. (எ)

வே று.

முடிவிலா வியாபி யான சிவனட்ட மூர்த்த மாகும்
வடிவமெய் தினனப் பாலும் பற்பல சுயம்பு வாகி
யடியவர் பிறவி நோய்வே ரறுத்திட முளைத்தா னந்த
வடிவினின் மூல மாய வடிவமும் வந்த வாறும. (அ)

பெருமைபெற் றுயர்ந்தோர் கேண்மை பெற்றிடு முறையும் பெ
வருபலந் தானு நல்லோர் வாஞ்சிக்குந் தலமு முள்ளந் [ற்றால்
தெரிதரச் செய்த பாவந் தெரியாது செய்த பாவம்
பிரிவதும் பிரியா மாயப் பிறவிவே ரறுக்கு நோன்பும். (௯)

சிந்தையி லைய நீங்கத் தெரிந்தெமக் குரைத்தி யென்ன
வந்தமா முனிவன் சூத முனிவனை யருளி னோக்கி
யிந்தமெய்க் காதை யாவு மிருந்தவர்க் குரைப்பா யென்னப்
புந்தியின் மகிழ்ச்சி கூரப் புகன்றருள் புரிந்து போனான். (௧௦)

போதரு முனியைப் பின்போய் விடைகொடு வணங்கிப்பூத்த
சீதள வனத்தி னெய்தித் தீயோம்பித் தீமை தீர்க்கு
மாதவர் பலருஞ் சூழ்ந்து மனங்களி கூர்ந்து நல்கு
மாதனத் திருந்து சிந்தை யசஞ்சல மாகித் தோன்ற. (௧௧)

சிறந்தமுக் களவில் வாழுஞ் செல்வனைப் போற்றி மெய்யிற்
பிறந்தெழு புளகம் போர்ப்பப் பிறப்பிறப் பான தீநோய்
புறந்தர விருந்து கேண்மி னெம்பிரான் புராண மென்று [வான்.
நிறைந்தமெய்த் தவத்தோர் கேட்ப நிறைமதிச் சூதன் சொல்

வே று.

வியந்த பொன்மலைத் தக்கண திக்கினின் மேலோர்
நயந்த வாசக பேதமாம் பதினெட்டு நாட்டி
னியைந்த வேங்கடங் குமரியா மெல்லையி னுப்ப
னுயர்ந்த செந்தமிழ் நாடுள தொப்பிலா நாடு. (௧௩)

அனைய செந்தமிழ் நாடெனு மாயிழை தனக்குப்
புனையு மாமுடி யாமென யாவரும் புகழக்

கனைக டற்கலை யுடுத்தபார் முழுவதுங் கண்டு
தனைவி யப்புற வளர்ந்தது சந்தனச் சயிலம். (கசு)

சுயம்பு லிங்கங்கள் பலவினு மாதியாய்த் தொல்லோ
ரியம்ப வாய்ந்தது பாவநா சப்பெய ரிலிங்கம்
வியந்தி ருப்பது தமிழ்வரைச் சாரவில் வெங்கட்
கயந்தி ரைக்காத் தலைத்தெழும் பொருநைமேல் கரையில். ()

அளவி லண்டங்க டாங்கிய விராட்டுவென் பவனுந்
தெளியு ஞானமெய்ப் பொருடருந் திருமறை நான்கு
மொளிகொள் செந்தமிழ் வரைமுத லுயர்வரை மூன்றுங்
களிசி றந்துபூ சனைபுரிந் தார்கண்முற் காலம். (கசு)

தழைத்த காசிப னகத்திய னாதிமா தவருங்
கொழித்த மாமறை வேதிய னொருவனுங் குன்றாச்
செழித்த மாநிதி வணிகனும் பரவிவெந் தீநோய்
சுழித்த வாரிதிப் பிறவியுங் கடந்தனர் தொன்னாள். (கள)

சினந்த லைக்கொண்ட தீவினை புரிந்தவ ரேனு
மினந்து ரத்திட விழிதொழில் புரிந்தவ ரேனு
மனந்த ழைத்திடக் கணப்பொழு தாயினும் வணங்கி
னனந்த மாயைபெற் றகன்றிடாப் பிறவிவே ரறுக்கும். (கஅ)

நெறித்த மாமக நிகழ்த்திடும் பலத்தினு நிரந்து
செறித்த காவிடைச் செய்தவப் பலத்தினுஞ் சிறந்து
பறித்த பச்சிலை யிட்டுமுன் பணிந்துபோற் றினரேற்
குறித்து வேட்டன வேட்டவா றெளிதினிற் கொடுக்கும். ()

மின்பி றப்பெனத் தோன்றியக் கணத்தினில் வீயும்
வன்பி றப்புமுன் பலவினும் வரும்வினை மாய
வன்பி றப்புறு தடிபிணை வழிபடு மடியார்
புன்பி றப்பெனுங் கோடைக்கண் டருண்மழை பொழியும். ()

காலம் யாவையுங் கடக்கின்ற விராட்டுவுக் காகச்
சூல பாணிசெஞ் சுடர்ப்பரஞ் சோதியாய்த் தோன்று
மூல லிங்கத்தின் பெருமையை யறிந்தவா மொழிவாஞ்
சாலு நான்மறை முறைநெறி யறிந்தமெய்த் தவத்தீர். (உக)

முதலாவது சிறப்புப்பதச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கஉ)

## சீபருப்பதச்சருக்கச் சுருக்க வசனம்.

வாசனை நிறைந்த மலர்களெங்கும் வண்டுகளிசைபாடுகின்ற பூஞ்சோலை வளங்களும், பிற வளங்களுமிருந்த சீபருப்பதமென்னும் மலையின்கண்ணே எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானைச் சிவராத்திரியிற் பூசனைபுரிந்து தெரிசனஞ் செய்வது விசேடமென்று, சவுனகராதிய முனிவரெல்லாரும் வந்தார்கள். அங்ஙனம் வந்து சிவராத்திரி நான்கு சாமமுஞ் சிவலிங்கப்பெருமானை ஆராதித்துத் தரிசித்த பின்பு, பதினெண் புராணங்களையும், அருளிச்செய்த வேத வியாச முனிவரைப்பார்த்து, "சுவாமீ! நீர் முன்பு அருளிச்செய்த சிவபுராணங்களில் சிலவிஷயம் இன்னும் கேட்கவேண்டும்; அவை யாவையெனில், சருவ வியாபகரான சிவபெருமான் எட்டுவித மூர்த்தங் கொண்டருளினர், அப்பாலும் பலபல சுயம்புலிங்க வடிவமாகியும் எழுந்தருளி யிருந்தனர். இவ்விலிங்கங்கட்கெல்லாம் மூலமாகிய இலிங்கமும், அது தோன்றிய வரலாறும், அந்த இலிங்கத்தை வழிபாடு செய்யுங் கிரமமும், அங்ஙனஞ் செய்தால் வரும் பிரயோசனமும், உயர்ந்தோரால் இச்சிக்கும் தலமும், அறிந்துசெய்தபாவத்தையும் அறியாதுசெய்தபாவத்தையும் நீக்கும் பிராயச்சித்தமும், பிறவிநோயை நீக்கும் மருந்தாகிய விரதமும் யாதொரு சந்தேகமுமறக் கட்டளை யிட்டருளுக" என்று பிரார்த்தித்தனர். உடனே வேத வியாசமுனிவர் தமது மாணாக்கராகிய சூதமுனிவரைநோக்கி, இவையனைத்தையுந் தெரிந்து சொல்வாயெனக் கட்டளையிட்டுத் தமதிடத்துக்குச் சென்றனர். பின்பு சூதமுனிவர், சவுனகராதி முனிவரை நோக்கிச் சொல்லுகின்றார். மகாமேருமலைக்குத் தெக்ஷண திக்கின்கணுள்ள செந்தமிழ் நாட்டிலே சந்தனச்சைலமென்னும் பொதியமலையின் சாரலிற்றோன்றிய தாமிரபருணிநதியினது மேல்கரையிற் றோன்றிய பாவநாசப் பெயரிலிங்கம் உலகத்திலுள்ள சுயம்புலிங்கம் எல்லாவற்றினும் முன்னருள்ளது, அந்த இலிங்கத்தை விராட் புருடனும், நான்கு வேதங்களும், பொதியமலையும், கைலமலையும், தருத்தரமலையும் ஆதிகாலத்திலே பூசனை செய்தார்கள். ஆதலால் அந்த இலிங்கத்தை எவர் தரிசித்தாலும், அவருடைய சகல பாபங்களையும் போக்கிப் பிறவி நோயையும் அவ்விலிங்கம் நீக்கியருளும். இன்னும் இச்சித்தவரங்களையுங் கொடுத்தருளும். இன்னமும் அந்த மூல இலிங்கத்தின் பெருமையை அறிந்தவாறு சொல்லுவோமென்றனர்.



# இரண்டாவது: விராட்டுச்சருக்கம்.

கைம்மலை யுரித்துப் போர்த்த கடவுள்பே ரருள்பெற்றோருங்குஞ், செம்மைபெற் றுயர்ந்தோர் யார்க்குஞ் செப்பரும் பெருமை பூண்டோ, னிம்மையோ டும்மை யம்மை யறிந்திறை வனுந்தா னானோன், மெய்ம்மயிர் தோறு மண்டந் தோற்றிடும் விராட்டு வென்பான். (க)

ஆங்கவன் முகத்தில் வந்தா ரந்தணர் மார்பில் வந்தா
ரோங்கிய வரச ரன்ன னூருவில் வணிகர் வந்தார்
பூங்கழ லிடத்தில் வந்தார் சூத்திரர் புவனத் துள்ள
பாங்குறு தோற்ற மன்னன் படிவத்தி லுதித்த தாமால். (உ)

அளவறு கால மிவ்வா றண்டங்க ளளித்துக் காத்தா
னிளிவருந் தொழில தாகு மித்தொழி லென்று நீப்பா
னுளம்வல மிடமா மெய்யின் மூவரை யுதிப்பித் தன்றோர்
வளருமுத் தொழிலு நாளு நடத்திட வகுத்து நீத்தான். (ந)

நீத்தவ னுலகம் யாவு நிறைந்தவன் பதத்தை நாடிப்
பூத்தவன் போடு நிட்டை புரிந்தன னந்நாள் யார்க்கு
மூத்தவன் முக்களாவின் முளைத்தவன் விண்டு வாளி
கோத்தவன் விசுவ ரூபங் கொண்டெதிர் தோன்றி னானால். ()

கண்டனன் கண்ணீர் மாரி கவிழ்த்தனன் புளக மெய்யிற் [தை
கொண்டனன் கமலச் செங்கை குவித்தனன் குழறி வார்த்
விண்டனன் படியின் மீது வீழ்ந்துதாழ்ந் தெழுந்தான்வேறு
மண்டமுங் குலுங்கப் பாடி யாடின னினைய சொல்வான். (ரு)

அடியனே னெமாய வாழ்வி லாசைவிட் டொழிந்தே னானு
முடிவிலா வின்ப நல்கு முத்திவீ டளிப்பா யென்னப்
பொடியணிக் தரவம் பூண்டு புலியத ளுடுத்துச் சூடுங் [வான்.
கடிகமழ் பசும்பொற் கொன்றைக் கண்ணியா னருளிச் செய்

விரிதரு மண்டந் தாங்கும் விராட்டுநீ தோற்றி யின்ன
மொருதினஞ் சென்ற தில்லை யுள்ளத்தி லொழிவு மில்லை
மருவுநின் னதிகா ரத்தில் வைகுதி தருது மப்பா
லரியவீ டென்று னின்று னதனைக்கேட் டிதனைக் கூறும். (சா)

எத்தனை காலஞ் சென்ற வொருதின மில்லை யென்றாய்
முத்திவந் தடைதல் கால முடிவினின் முடியு மென்று
யத்தனே யடியேன்காலத் தளவையை யருள்வா யென்னப்
பைத்தமா நாகம் பூண்ட பரம்பொரு ளருளிச் செய்யும். (அ)

ஓய்வின்றிச் சுழலு நான்கு யுகமுமொன் றாகக் கூட்டி
யாயிரத் திரட்டிகொண்ட தயன்றனக் கொருநா ளாகு
மாய்விலா வந்நாண் மூந்நூற் றறுபதோர் வருடமாக
வேயுநூ றகன்று லந்தப் பிரமனுக் கிறுதி யெய்தும். (கூ)

அவ்விதி யிருவர் நீங்கி லரிக்கொரு தினமா மன்னன்
செவ்விய வாயுக் கெல்லை யாயிரம் வருடஞ் செல்லு
மிவ்வகை காலங் கொண்ட நாரண ரிருவர் காலம்
வெவ்விய வுருத்தி ரேசற் கொருதினம் விளம்ப லாமால். (க0)

அத்தினம் வருட மோர்நூ றாயிர மவனுக் காயுண்
முத்தலைச் சூலங் கொண்டோ ரிருவர்தங் கால முற்றில்
வித்தக வுனக்கோர் நாளாம் வருடமும் விளம்பிற் கோடி
வைத்தனமென விராட்டு வணங்கின் றுரைக்க லுற்றான். ()

அவிர்சடைக் கடவு ளேகின் னருளிது வானு விந்தப் [டுந்
புவியிடைச் சிறியே னுன்னைப் பூசைசெய் திருத்தல் வேண்
திவளும்விச் சுவரூ பத்தி லருச்சனை செய்ப மாட்டே [ன்.
னுவமையில் பூசைக் கேற்ற வுருவங்கொண் டுறைதி யென்று

துலங்குவெண் மதியும் பாம்புஞ் சூடினோன் மறைந்து பின்ன
ரிலங்கிய சோதி ஞான விலிங்கததின் வடிவு கொண்டான்
விலங்கலந் தோள்வி ராட்டு விழியிணை குளிரக் கண்டு
புலன்களைந் தொடுக்கி வீடு தருசிவ பூசை செய்தான். (கந)

நெறிப்படு பூசை செய்து நிரம்பிடா வாசை யாலே
மறித்துமோர் தரம்பூ சித்து வாழ்த்தினன் வாழ்த்துங் காலைக்
கறைப்பிறை முடியோ ரைந்துங் கரங்களீ ரைந்து மாக
மறப்புலி யுரியா னந்த விலிங்கத்தில் வந்து தோன்ற. (கச)

புணையெனும் பதத்தாற் றீயேன் புன்பிறப் பாழி நீக்கி
யிணையிலாக் கருணை வாரி யிடத்தெனை மடுத்தா யென்று

துணைவிழி குளிரக் கண்டு தொழுதடி போற்றி நிற்பப் [லும்.
பிணைவிழி யுமையோர் பாகப் பிணைக்கரப் பெம்மான் சொல்

இங்கெமைப் பூசை செய்த வித்தின மாக மான
திங்களிற் பதினான் கான சிவநிசி யென்ன லாகுந்
துங்கமா மாக பேதஞ் சுரர்மாக முனிவர் மாக
மங்கண்மா ஞாலத் துள்ள நரர்மாக மெனமூன் றாகும். (௧௬)

இளவேனில் கூதிர் மற்றைப் பின்பனி யெனனுங் காலத்
துளவாமம் மூன்றி லிங்கா னுரைக்கும்பின் பனிக் காலத்துத்
தெளிவாகு நரர்மா கத்திற் சிவநிசி யாகு நம்மை
யளிகூரு மடியர் யாம நான்கினு மருச்சிப் பாரால். (௧௭)

நீயுமங் கவர்போல் யோக நிட்டைகொண் டதுமுற் சாம
மேயுநம் விசுவ ரூப மெதிர்காண்ட விரண்டாஞ் சாம
மாயுமா ஞான லிங்கத் தன்புட னிருகாற் பூசை
யோய்விலா தியற்றன் மற்றை யிருசாமத் துளவா மன்றே. ()

இம்முறை சாம நான்கும் பூசனை யியற்று வோர்கள்
செம்மைசேர் வீடு சேர்வார் திருந்துமித் தலமு நல்லோர்
தம்மயல் கெடகின் பேரால் வயிராச தலமா மென்பார்
மம்மர்நோ யறுக்கு நம்மை வயிராச லிங்க மென்பார். (௧௯)

பைகவி பாம்பு தாங்கும் பாரினி லென்று நாதன்
மெய்கவி யண்டந் தாங்கும் விராட்டுவுக் குரைப்பக் கேட்டு
மைகவி கண்டன் பாதம் வரன்முறை வணங்கிப் பன்னாட்
கைகுவித் திருந்தா னேங்குங் கணக்கிலா வண்டங் காக்கி. ()

இரண்டாவது விராட்டுச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (௫௨)

---

### விராட்டுச்சருக்கச் சுருக்க வசனம்.

பல்லாயிரங்கோடி அண்டங்களுந் தமது திருமேனியிலுள்ள உரோமங்தோறுந் தூங்கத் தாங்காநிற்கும் விராட்டு என்பவர் சகல சராசரங்களையும் சிருட்டித்து, அளவற்றகாலங் காத்துவந்தனர். பின்பு இத்தொழில் மித்தையென்று விடுத்து மோக்ஷத்தைவிரும்பி,

பரவநாசத்தில் பரமேசுரனை நோக்கி யோகஞ் செய்திருந்தனர். உடனே விசுவ சொரூபங்கொண்டு பரமேசுரன் அவருக்குக் காட்சி தந்தருளத் தரிசித்துப் பரவசராகி வணங்கித் தம்முடைய கருத்தை விண்ணப்பஞ் செய்ய, "வாராய் விராட்டுவே! நீ தோற்றி இன்னமும் ஒருதினம் ஆகவில்லை. ஆதலால் முன்போல் உன்னுடைய அதிகாரத்தில் இருப்பாய். முடிவிலே நீ விரும்பிய மோக்ஷத்தைத் தருவோ" மென்று சிவபெருமா னருளுதலும், விராட்டு என்பவர் கேட்டு விசனமுற்று, எத்தனையோ காலங்கள் கடந்தும், இன்னும் ஒருதினமாகவில்லையானால், எவ்வளவுகாலம் மேலும் இருக்கிறதோ? அடியேனுடைய காலத்தின் அளவையைக் கட்டளையிட்டருளவேண்டுமென்று பிரார்த்திக்கச், சிவபெருமான் அருளிச்செய்வார். "ஒரு சதுரயுகம் இரண்டாயிரமானால், பிரமனுக்கு ஒருநாளாகும். அந்தநாள் முன்னூற்றறுபது ஒருவருடம். அங்ஙனமாகிய வருடம் நூறு சென்றால், அந்தப் பிரமனுடைய ஆயுள் முடிவாகும். இங்ஙனம் இரண்டு பிரமா இறந்தால், விஷ்ணுவுக்கு ஒருதினம் ஆகும். அப்படி ஒருநாள் முன்னூற்றறுபதுகொண்டது ஒரு வருடம். இந்த வருடம் ஆயிரமானால், விஷ்ணு ஆயுள்முடியும், இங்ஙனம் விஷ்ணு இருவரிறந்தால், உருத்திரனுக்கு ஒருநாளாம். இந்த நாள் முன்னூற்றறுபது கொண்டது ஒரு வருடம். இவ்வருடம் நூறாயிரமானால், உருத்திரன் ஆயுள் முடிவாகும். இங்ஙனம் உருத்திரர் இருவர் இறந்தால் உனக்கு ஒருநாளாம். இந்தநாளால் ஆகியவருடம் கோடி ஆனால், உனக்கு ஆயுள் முடியும்" என்றனர். அது கேட்ட விராட்டுச் சுவாமீ! உம்முடைய திருவருளிதுவானால் அடியேன் உம்மைப் பூசனை செய்தற்கேற்ற திருவுருக்கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்க உடனே சிவபெருமான் விசுவ சொரூபத்தை மறைத்துப் பிரகாசிக்கின்ற ஞானமயமாகிய சிவலிங்கமூர்த்தங்கொண் டெழுந்தருளியிருந்தனர். பின்பு விராட்டு மோக்ஷத்தைத் தரத்தக்க சிவபூசை செய்தனர். அப்பூசனையை மகிழ்ந்து பரமேசுரன் பிரசன்னராய் விராட்டுவே! நீ பூசைசெய்த இந்தத்தினம் சிவராத்திரியாதலால் இம்முறை எம்மைப் பூசிப்பவர்கள் மோக்ஷத்தை யடைவார்கள். இந்த இலிங்கமும், நீ பூசித்தலால் வயிராசலிங்கம் எனப்பெயர்பெறும் இத்தலமும் வயிராச தலமெனவிளங்கும் என்றருளிச்செய்து இலிங்கத்தினுள் மறைந்திருந்தார்.

## மூன்றாவது: கயிலாயச் சருக்கம்

வானளா வுயர்ந்து வானவர் பரவ மணிமிலா வெள்ளியின் மயமாய்க், கானமர் சோலை குழைதரத் தழையுங் கடவுண்மா கயிலையங் கிரியி, னனமேன் மையில்வாழ் வித்தியே சுரர்தா நாடொறு மளவிலர் வதிவார், மேன்மைசே ரவரிற் சீகண்ட னெனும்பேர் வித்தியே சுரன்கதி வேட்டு. (க)

அளவிலா வருட மருந்தவ மிழைத்தா னத்தவப் பலனவற் கருளக், களமலி மிடறனு னிலிங்கமாய்த் தோன்றக் கண்களி கூர்தரக் கண்டே, யுளமெலா முலைசேர் மெழுகுபோ லுருகி யுவப்பொடு பூசனை புரிந்து, புளகவா ரிதியின் முழுகியே நிலத்திற் படிந்துமெய்த் தோத்திரம் புகன்றான். (உ)

பரவச மாகி யருவிநீர் விழியிற் பாய்தரும் படியெதிர் நின்றான், காசர ணாதி யவயவந் தோன்றக் கருணையங் கடலெதிர் தோன்றி, வரமளித் தருளி வித்தியே சுரர்க்குத் தலைமையாம் வரிசையுங் கொடுத்துப், புரகர னாத னிரவிநேர் ஞான விலிங்கத்திற் பூரண மானான். (ந)

அன்றுதொட் டமரர் வித்தியே சுரருங் கந்தரு வாதிமாதவரு, மென்றுமிவ் விலிங்க ஞானசீ கண்ட விலிங்கமென் றொருபெயர் சாத்தி, நன்றுபெற் றுயரப் பூசனை புரிந்தே நாடொறும் பரவலிற் றிருந்தான், கொன்றைவார் சடையான் ஞானசத் தியின்பே ரிலளிதை யாகுமக் கொம்பு. (ச)

சந்தத மிச்சா சத்தியுங் கிரியா சத்தியு மேவல்செய் பவராய், வந்தனை புரிய வானவ ராதி வணங்கலிற் றிருக்கின்ற காலைப், புந்தியிற் களித்தங் கவர்செயும் பணியாற் பூரணி திருவுள மகிழ்ந்தே, முந்திய வரநாங் கொடுத்திட நினைந்தோம் பெறுதிர் மொழிந்தென மொழிந்தாள். (ரு)

திரிபுரை யுரைத்த வாய்மொழி யமுதஞ் செவிகுளிர்ந் திடவவர் கேட்டு, மரகத மேனி நாயக னாக வாய்த்தெமைப் புணருதி யென்னப், பரனொடு பிரியா திருக்கவு முள்ளம் பிரிந்தவர் தமைப்புணர்ந் திடவு, மரிவிழிக் கலவ மயிலிய லளிதை காரணி நாரண னானாள். (சு)

காரணி குழலா ரிருவரைப் புணர்ந்து கலவியின் பெருங்கட றிளைத்து, வாரண முரித்த வாரணப் பொருளாம் வாரணங் குழைக்கணி பெருமா, னீரணி பவள நெடுஞ்சடா டவியா னிருமலன் றனக்குநீர் வார்த்து, நாரணன் கொடுப்ப நாரணி மணத்தை நயந்தனன் வியந்திருந் தொருநாள். (எ)

வேறு.

நெருப்பி லாடுவா னீர்விளை யாடுவா னினையும்
விருப்ப றிந்துதன் னோர்கலை யான்மனம் விழைந்து
பொருப்பு நாதன்முன் மதலையாய் மழலையும் புகன்றே
யுருப்ப டைப்பவ ளோர்கலை நதியுரு வானாள். (அ)

உவமை யில்லதா நதிநவ மணிகளு முடைத்தாய்ப்
புவன கோடிகள் போற்றிசெய் மகத்துவம் பூண்டு
நவம்வெ ளிப்படு நதியிடை நாரணி யோடுஞ்
சிவனு வப்புட னீர்விளை யாடினன் றிளைத்தான். (கூ)

செய்ய வேணியா னம்மிடைத் திளைத்தன னென்று
மெய்கு ழைந்துசெங் கையினு லணைத்துமே வுவதுந்
தைய னிற்றல்கண் டகல்வது மொக்கும்வார் தரங்க
மையன் மேனியைப் பொதிவதும் போவது மம்மா. (கo)

* புனந்த ரித்தவப் பூரணன் பூவையை நோக்கி
யனங்க ளிக்குமென் னடைப்பிடி யேயுன தாரத்
தனங்க ளிற்படுங் குங்குமந் தோய்ந்துதர மிரையாம்
வனம்ப டைத்தலாற் றுமிர பன்னிமா நதியாம். (கக)

கங்கை யாந்திருப் பேர்பெறு மிந்நதி களிப்பாக்
கங்கை யேந்துநா மேந்தலாற் கடவுளர் முதலோர்
கங்கை சூடியென் றுரைப்பரென் றேகரம் பிடித்தற்
கங்கை நீட்டிய காதலி யொடுங்களித் துரைத்தான். (கஉ)

கலந்த சூலிதன் கட்டுரை கேட்டமின் னேடும்
புலந்த ழைக்கநீ ராடியே கரையிடைப் போந்து
நலந்த ழைத்தபொன் னுடையு நவமணிப் பணியு
† மலைந்து கொண்டரி யாதனத் திருந்தனன் வரதன். ()

மூன்றாவது கயிலாயச்சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (சுரு)

---

 *புனம் - புனல். †மலைதல் - அணிதல்.

## கயிலாயச் சருக்கச் சுருக்கவசனம்.

திருக்கயிலாச மலையின் கண்ணே சிகண்டனென்னும் பெயரையுடைய வித்தியேசுரன் மோக்ஷத்தை விரும்பி அநேகநாள் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தான். அது தெரிந்த சிவபெருமான் அவனுக்கெதிரே சிவலிங்க மூர்த்தமாக எழுந்தருளியிருந்தார். அவ்வித்தியேசுரன் கண்கள்குளிரத் தரிசித்து மனமுருகிப் பூசனைபுரிந்து தோத்திரம் புகன்றான், பின்பு பரமேசுரன் கரசரணாதி யவயவந் தோன்ற எதிரேயெழுந்து வேண்டும், வரங்கொடுத்தருளி அந்த ஞான இலிங்கத்துள்ளேமறைந்திருந்தனர். அன்றுதொட்டு அவ்விலிங்கம் ஞானசிகண்ட இலிங்கமெனப் பெயர்பெற்றது. அதுகண்டு யாவரும் பூசனை செய்துவந்தார்கள். அவ்விலிங்கத்து ளமர்ந்திருக்கின்ற பரமேசுரனுடைய ஞானசத்தியினது திருநாமம். இலளிதை, அவளுக்கு ஏவல்செய்பவராய், இச்சாசத்தியும், கிரியாசத்தியு மிருந்தது கண்டு மனமகிழ்ந்து உங்களுக்கு வேண்டும் வரங்களைக் கேளுங்களென்று, அந்த இலளிதையாகிய ஞானசத்தி வினவலும், அவ்விருவரும் நீ மரகத நிறமுடைய நாரணனாகி எங்களைக் கலந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அதற்கிசைந்து, நாரணனாகவும் சிவபெருமானைப் பிரியாதிருக்க நாரணியாகவும், இலளிதை இவ்விரண்டு திருவுருவங்கொண்டனளாய் அவ்விருமாதரையுந் தழுவிப் பிரியாதிருக்குங் காலத்து ஒருநாள் சிவபெருமான் புனல் விளையாடல் செய்யுந் திருவுள்ளக் குறிப்பைத் தெரிந்த சரசுவதியானவள் தனது ஒரு கலையினாலே நதியுருவமானாள். அந்நதியினுள்ளே நாரணியாகிய தன் சத்தியுடனே நீர் விளையாடல் செய்தருளிப் பின்பு தன் சத்தியைநோக்கி நாரணியே உனது கொங்கைகளிற் கலந்த குங்குமந் தோய்ந்து தாமிரை நிறம்படைத்தலால் இந்நதி தாமிரை பன்னிமா நதியாகுமென்று சொல்லியருளி மீண்டு பீதாம்பரமும் நவமணிப் பணிகளும் புனைந்து சிம்மாதனத்தில் வீற்றிருந்தனர்.



## நான்காவது: சிவதல விசிட்டச் சருக்கம்·

வீற்றிருக்கு மக்காலை நந்தியரு ளிற்புகுந்து விராட்டு வென்போன், போற்றினன்மெய்ம் மயிர்ப்புளகம் போர்த்தன னந்தவெள்ளம் பொழியுங் கண்ணீ, ரேற்றினனெம் பெருமானிங் குறைந்தருளு முறைமையெனக் குரைப்பா யென்று, னேற்றினனீற் றினன்மதியக் கீற்றினன்சாற் றினனவனுக் கிசையும் வண்ணம். (க)

திருமுதுகுன் றஞ்சிறந்த கழுக்குன்றம் பரங்குன்றஞ் சேறை விரவுதிரு நள்ளாறு கோட்டாறை யாறுதிரு வீழி பூழி [யாறை யரியதிருந் மறைக்காடு சாய்க்காடு திருவெண்கா டாலங் காடு பொருவில்சிவ புரந்தரும புரம்பிரம புரங்காஞ்சி புரமா காளம்:

மயிலாடு துறைசோற்றுத் துறைதிருவா வடுதுறைபூ மலர்க்கா வெங்கும், புயலூரும் புகலூரும் புன்கூரும் புத்தூரும் புள்ளூர் தானு, மியலாரு மருகறமிழ்க் கூடறிருச் செய்ஞல் கடைஞாழ லேதம், பயிலாத நனிபள்ளி திருக்காட்டுப் பள்ளிசிராப் பள்ளி தானும். (௩)

கடைமுடிகா னூரன்னி வான்மியூ ரூறல் கண்டி கண்ணார் கோயில், கொடுமுடிநெல் வாயின்முல்லை வாயினெல்லை குற்றாலங் கோளி புத்தூ, ரிடைமருதூர் புடைமருதூர் காட்டூர்கோட் டூர்கடம்பூ ரீய்ங்கோய் தேவூர், குடமூக்கு கொடுங்குன்று நெல்விக்கா கோலக்கா கோடி காவும். (ச)

நன்றுதவுங் கேதாரஞ் சீசயிலஞ் சிவசயில நாகை நாரை, குன்றவிலாச் செங்காட்டங் குடிவேள்விக் குடிவேட்டக் குடியா மாத்தூர், துன்றுதிரை முழங்குமிரா மீச்சுரநா கீச்சுரம் பா சூராக் கூரு, மென்றினைய தலங்கடொறு மிலிங்கவடி வாகினமவ் விலிங்கத் துள்ளும். (ரு)

தேவாருந் தில்லையிலா காயலிங்கம் வாயுலிங்கந் திருக்கா ளத்தி யோவாத தேயுலிங்க மருணையிலா னைக்காவி லுதக லிங்கம் பூவாருந் திருநாளும் போற்றுபிரு திவிலிங்கம் புகழா ரூரிற் பாவாணர் பணிபாவ நாசலிங்கம் பரஞ்சோதி யிலிங்க மாமால்.

பிறக்கின்முத்தி யொருதலத்தி லிறக்கின்முத்தி யொரு தலத்திற் பிழையாச் சேவை, சிறக்கின்முத்தி யொருதலத்தி வ்மூன்று மொருதலத்திற் செழிக்கு மானுன், மறக்கின்முத்தி

யெவர்க்குண்டாம் பாவநா சத்தைவிட்டு மற்றை நாட்டிற், றுறக்கின்முத்தி யெவர்க்குண்டாந் துறக்கநெடுங் கதவவர்க் குத் துறந்தி டாதால். (எ)

எனக்கனிவாய் மலர்ந்துமொழிந் தருணுதலு மம்மொழி கேட் டெதிர்வி ராட்டு, மனக்களிகூர்ந் தவ்விலிங்கத் தெந்நா ளு முறைதியென வணங்கிக் கேட்பக், கனக்குநெடுஞ் சடை மகுடந் துளக்கியிள நகைநிலவு காட்டி யெங்கோ, னுனக்கது தந் தனமென்றான் விடைக்கொடியா னருள்விடைபெற் றுவந் து போனான். (அ)

நான்காவது சிவதலவி சிட்டச் சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (எகூ)

---

## சிவதலவிசிட்டச்சருக்கச் சுருக்க வசனம்.

மேற்கூறியவாறு வீற்றிருந்தருளிய சிவபெருமான் திருமுன்ன ர் நந்திதேவாருள்பெற்று விராட்டு என்பவர் சென்றுதரிசித்து ஆன ந்தவெள்ளத்தின் மூழ்கி எம்பெருமானே! நீர் விசேடமாக எழுந்தரு ளியிருக்கும் சிவக்ஷேத்திரத்தை யருளிச்செய்யவேண்டு மென்று வி ண்ணப்பஞ்செய்யச் சிவபெருமான் அவரைநோக்கிச் சொல்லுவார். நாம் சிவலிங்கவடிவமாகி யிருக்கும் விருத்தாசலமுதலாகச் சொல்ல ப்பட்ட திவ்யக்ஷேத்திரங்கள் பலவுள. அவற்றுள் சிதம்பரத்தில் ஆ காயலிங்கம், சீகாளத்தியில் வாயுலிங்கம், திருவண்ணுமலையில் அக்கி னிலிங்கம், திருவானைக்காவில் அப்புலிங்கம், திருவாரூரில் பிருதிவி லிங்கம் ஆகவிளங்குவோம். பொதியமலைச் சாரலிலுள்ள பாவநாசத் தலத்திலே பரஞ்சோதிலிங்கமாக விளங்குகின்றனம்: மேலேசொல் லிய ஐந்துதலங்களுக்குள்ளேபிறந்தால் முத்திகொடுப்பது ஒருதலம். இறந்தால் முத்திதருவது ஒருதலம். தெரிசித்தால் முத்தி அருளுவது ஒருதலம். இந்த மூன்றாலும் மோக்ஷம் கொடுப்பதாகிய பாவநாசத்த லம், மிகமேலாயுள்ளது என்று சிவபிரான்றிருவாய் மலர்ந்தருளக் கேட்டுச் சந்தோஷித்து, தேவரீர் அத்தலத்திலுள்ள பரஞ்சோதிலிங் கத்தில் எக்காலமும் நீங்காது எழுந்தருளியிருக்க வேண்டுமென்று விராட்டுவென்பவர் பிரார்த்திக்க அவ்வாறெழுந்தருளி யிருக்கின்றோ மென்று சிவபெருமானருளிச்செய்தலும் அவ்வரம்பெற்று மீண்டு வி ராட்டு தம்மிடத்துக்குச் சென்றார்.



# ஐந்தாவது: முக்களாச் சருக்கம்.



மட்டிலா வண்டபகி ரண்டமெலாங் காத்தளிக்க வருவி ராட்டு, முட்டிலா தருந்தவஞ்செய் தாகமநூற் படிபூசை முறையே போற்றத், தட்டிலா தெவ்வுலகுந் தனிவியா பக மான தாணு மூர்த்தி, சிட்டர்சூழ் வயிராச ஞானலிங்க வடி வான செய்கை தேர்ந்து. (க)

பாதங்கள் பெற்பொதுவிற் பாதங்கள் பயிலநின்ற பர மன் றன்னை, யேதங்க ளகலநின்ற வதர்வணமே வானுருக் கொண் டிறைஞ்சி யேத்தச், சீதங்கொண் மணநாறு முக்களா வடிவாகித் திக்களாவி, வேதங்கண் மூன்றுமின்பாம் விரதங்க ளொடும்பூசை விளைத்த மாதோ. (உ)

கலையவரு நஞ்சுறுமைக் களமுதலை நீங்காமுக் களவின் றோற்றந், தலைபெறுசஞ் சிதமுதலா முப்பிணிசஞ் சீவினியுந் தள்ளா தென்றே, நிலவியவா னவர்முதலோர் நேர்நோக்கித் தொழுதுமுற்று நீக்கலாலே, மலையமலைத டஞ்சாரல் வயிரா சத் திடைமுளைத்த மருந்துபோலும். (ங)

விதுவணிந்த திருமுடிமேல் வெயிலவன்செங் கதிர்க்கிர ணம் விரவா வண்ண, மதிகநிழற் பந்தரிடு முக்களாத் தனை யொடுபூத் தமர்ந்த கோலங், கொதிகதங்கொண் டண்ணல்சி று கட்டறுகட் கறையடிவெண் கோட்டு மோட்டு, மதகரியி னுரிபோர்த்து வெண்பொடிமே லணிந்துநின்ற வண்ணம் போ லும். (ச)

கருதியடி யவர்வினையின் கட்டறுக்குங் கொற்றமெலாங் களிவண் டோதச், சுருதிதிகழ் முக்களவு வயிராசப் பாம்பொ ருளைச் சூழ்ந்த கோலம், பொருதிறல்வா ளவுணர்தலை புரட் டியுருட் டிப்படிவம் போழ்ந்து சேந்த, குருதிவழி பரிதியங் கை மாயவனு ருளத்திருத்துங் கொள்கை போலும், (ரு)

சங்கரனை வயிராச லிங்கனைவந் தடிதொழுது தழைத் தோர் பாவப், பங்கமறுத் தருள்வோனை முக்களாப் பொதிந்து கனி படைத்த தோற்ற, மெங்குமுள வண்டபகி ரண்டமெலா ங் கனந்தோற்று தெளிதே தோற்றிப், பொங்குமயிர் நுனிதோ றுந் தூங்கநின்று தொழுதவிராட் புருடன் போலும். (சா)

வானளவு தடஞ்சினையா மணிக்கரங்கொண் டனுதினமூ
மதுர மான, தேனெனுமஞ் சனமாட்டித் திருமுடியி னறும்
போது சிறப்பச் சாத்திப், போனகம்பைங் கனியாகப் பொரு
ப்புவில்லிக் களித்திடலாற் புகழ்ந்து பூசை, யூனமறச் செய்தி
யற்று மடியவராய் முக்களவு முறையு மாதோ. (எ)

தண்ணறும்பைங் தளிர்நாவு முள்ளெயிறு மலர்ப்பொறி
யுந் தயங்கக் கூன்சேர்ந், தெண்ணரிய தடஞ்சினையாம் பஃலை
ப்பைங் தழைப்படமே லெடுத்துத் தோன்ற, வண்ணநறுங் க
னிமணிகள் சுடரெறிப்ப நடனவயி ராச லிங்கக், கண்ணுதலை
ப் பிரியாமுக் களவனந்த னறையமுது காலு மாதோ. (அ)

நாகவரிச் சிலையேந்தித் திரிபுரமு மெரிபடமுன் னகைத்
துச் சீறும், பாகமதிச் சடையானை வயிராசப் பரமபரனைப் பர
விச் சூழ்ந்து, மாகமுக டளவுசினை முக்களவிற் பசுந்தழையு
மலர்ந்த பூவு, மேகநிறை படலமுமப் படலநடு வுடுவுமென வி
ளங்கு மாதோ. (கூ)

வயிராச லிங்கமென்று மறைமூன்று முக்களவாம் வடிவ
ந் தாங்கி, யயராமல் வழிபடலாற் பழமறைநா யகனென்று மா
டுங் தாளாற், செயிரோற முயலுமுய லகன்முதுகை மிதித்து
மதித் தெண்ணி லாவை, முயலோடுங் தேய்த்தவனை முக்களா
மூர்த்தியென்று மொழிவர் மாதோ. (க0)

எனவிரித்து வயிராசத் தலத்தில்விளங் கியமூல லிங்கத்
தோற்றம், புனைசடில முனிவர்விழி பேரானந் தம்பொழியப்
புகன்ற சூதன், வினையறுத்து வரும்பிறவி வேரறுத்து மெய்
ஞ்ஞானம் விளங்கோர் கேண்மை, முனமடுத்த முறைமைத
னை வான்முறையே யாங்கவர்க்கு மொழிவ தானான். (கக)

ஐந்தாவது முக்களாச்சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (அ௫.)

---

## முக்களாச்சருக்கச் சுருக்க வசனம்.

சருவவியாபகராகிய பரமேசுரனனவர் சகல அண்டங்களையு
ஞ்சிருட்டி செய்துகாக்கும் விராட்டு என்பவருக்காகப் பாவநாசத்தல
த்தில் வயிராச இலிங்கமாகத்திருவுருக் கொண்டெழுந்தருளி யிருந்த

ஷுத நான்குவேதங்களுந்தெரிந்து கொண்டன; அவற்றுள் அதர்வண வேதமானதுஆகாயரூபங்கொண்டுஅந்தவயிராசலிங்கத்தை வணங்கித் தோத்திரஞ்செய்தது. மற்றை மூன்றுவேதங்களும், மூன்றுகளாவிருக்ஷங்களாகி அநேகவிரதாதிகளைச் செய்து வியிராசலிங்க மூர்த்திதிருமேனியில் வெயில்படாதவிதம் நீழல்செய்து தேனையும் மலரையும் அபிடேகமாகவும் அருச்சனையாகவுஞ் சொரிந்து மதுரமானகனிகளைச்சொரிந்து நைவேத்தியஞ்செய்து பூசித்துக்கொண்டிருக்கின்றன. ஆதலால் அந்த வயிராசலிங்கத்துக்குப் பழமறைநாயகனென்றும் முக்களாமூர்த்தி யென்றும் உயர்ந்தோர் திருநாமஞ்சொல்லுவர். இவ்விலிங்கம் பூசித்தோர் தீவினைக்கட்டறுத்து வேண்டிய வரங்களைத்தந்தருளும்.



## ஆறுவது: பொதியச்சருக்கம்.



போதமுற் றவர்க்கெந் நாளும் புகலிட மெளியதாகி
யேதமுற் றவர்க்குச் சார லெய்தற்கு மரிய தாகி
யோதுமுத் தமிழும் வானப் பொருநைநீ ருவட்டு மாறுஞ்
சீதளச் சந்து மந்தத் தென்றலு முடைத்து மாதோ. (க)

காந்தளஞ் செங்கை சேப்பக் கவண்பற்றிக் குன்ற வாண
ரேந்திழை மகளி ரேனற் புனத்திடை யிதணத் தேறி
வாய்ந்தமா மணிக ளோச்ச வானிடை விசையிற் சேறல்
போந்துசெம் போத்து வீழும் புள்ளினந் தூரத்தல் போலும்.

செறித்தவெண் ணூலால் வாய்ப்பத் தெற்றியகவணுற்செங்கே
ழெறித்தமா ணிக்கம் வெண்மைப் படிகமு மிடையேமாறி
நெறித்தபூங் குழலார் நின்று விடுப்பது நிரையே வானின்
மறித்தபாற் கடலிற் ருேன்றி வருகதிர் மதிய மானும். (ங)

வேலோனின் றுவப்ப வேழ வில்லோனின் றயரச் சிந்தை
மாலோடு முனிவர் சோர வரைக்குற மடந லார்கள் [று
பாலோதெள் ளமுதோ வென்னத் தினைப்புனப் பாண்கடோ
மாலோல மெனப்புள் ளோச்சு மவ்வோலஞ் சிறக்கு மாலோ.

வன்கலந் திடும ராகு கேதுவான் படங்கள் காட்டிக்
கொன்கலந் திடுமெ நேக கோடிவந் துறைவ போல

முன்குழைந்தெழுந்து நின்றுமுகங்குழைகுரால்வாய்த்தின்கொ
வின்குற மடவார் காப்ப விருதினை விளையு மாதோ. (ரு)

கருதிவாழ் சீறூர் பூத்த கணிகளே கணிக ளாகத்
திருமிக வெறியாட் டாடித் தினைப்புனந் தோறுஞ் சென்று
குரலொலி குரவை கூட்டக் குரல்கொய்யுங் குறவர் கொட்டு
முருகிய முழக்கங் கேட்டு முருகவே ளுவக்கு மாதோ. (சு)

தானவன் றனையூர் சூழத் தமனியம் வேங்கை போர்ப்பக்
கானவர் குழுமிச் சீறூர்க் கன்னிக்குக் குன்றி பூட்டித்
தூனவ மணிமுற் றத்துத் தொண்டகந் துவைப்ப விண்ணில்
வானவ ரிருந்து நோக்க மணவினை புரிவர் மாதோ. (எ)

பாழியந் தடந்தோண் மைந்தர் பகற்குறி குறிப்பி னெய்தி
யாழிசை மொழியா ரேன விதணத்தி விருப்பக் காணர்[வார்
காழுறு மணிபொன் போர்க்குங் காலங்கண் டணங்குபோல்
வாழுமூர் நோக்கி நோக்கி மதிமயக் குறுவர் மன்னோ. (அ)

மருவலர் மருமம் போழ்ந்து மாதவர் பாதந் தாழ்ந்து
விரவிய விறலுங் கீர்த்தி விளக்கமும் விரிப்பார் போலப்
பருவரை யகடு கீண்டு பாதலம் பரவிப் பொங்கு
மருவியி னோசை மேற்சென் றண்டமுங் கிழிக்கு மம்மா. (கூ)

மீதுளங் கிடமே லோங்கி விளங்கிய சிகரந் தோறுங்
கோதுளங் கொள்ளா ஞானக் குறுமுனி திருத்தாய் போலப்
போதுளங் கரத்த மான மெல்லிதழ் பொலியப் பூத்த
மாதுளங் கத்தின் கோட்டு மணிக்கனி வயங்கு மாதோ. (க0)

இமைய வருலகங் காண்பா னெழும்பணைப் பனசச் சோலை
சுமைதரு சுளைக டாங்கித் தூங்குமுட் கனியின் றோற்ற
மமைதரு தூணஞ் சேர்த்தி யணிபெற வடுக்கி வைத்த [லும்.
தமனியத் தகடு வாய்த்த தடங்கொள்பொற் குடங்கள் போ

செல்லியல் கோட்டுச் சாரற் சேலிய லோடைப் பாங்கர்
நல்லிய லளிசூழ் வெள்ளி னறுங்கனி வயங்குந் தோற்றங்
கல்லிய லுருக வீணைக் கானஞ்செய் விஞ்சை வானோர்
மெல்லியன் மடவா ராடும் பந்தென விளங்கு மாதோ. (கஉ)

ஏடகம் பொதிகல் லார விருஞ்சுனைக் கரைச்சம் பீரக்
கோடகந் தோறுங் கானக் குன்றவர் மகளி ரோடு

மாடக வீணை மென்சொல் வரையர மகளி ராடு
மாடகக் கழங்கு போல வருங்கனி நெருங்கு மாதோ. (கங)

வேறு.

கோட ரங்கள் கொழுங்கனி சிந்திடக்
கோட ரம்பல தாவிக் குனிக்குமா
லாட ரங்க மணிமயிற் காம்பொழி
லாட ரங்க மதுநதி யாக்குமால். (கச)

காம ரத்திசை கான்மல ரும்பரிற்
காம ரத்திசை காரளி பாடமோற்
றாம ரைக்குலந் தண்புன மெங்கணுந்
தாம ரைக்குலந் தண்புன மெங்கணும். (கரு)

பஞ்ச ரங்கள் படைத்த பணைதொறும்
பஞ்ச ரங்கள் படைத்திடும் புள்ளின
மிஞ்சி மஞ்ச ளிடத்தி லெழுங்கொழு
விஞ்சி மஞ்சள வப்பணை யேந்துமால். (கசு)

பசும்பி டிக்குலம் பாரித்த நீழலிற்
பசும்பி டிக்குலங் கண்படை கொள்ளுமால்
விசும்பி டித்தென வேழம் * விண் ணோருண
விசும்பி டித்துணை தஞ்சுற வீறிடும். (கஎ)

பொறை யமைந்தது போர்படு மாமணி
பொறை யமைந்தது புங்கவர் சிந்தனை
சிறைய கன்ற திரைச்சுனை மீன்குலஞ்
சிறைய கன்ற சிரலிரை தேருமால். (கஅ)

நாளி லஞ்சி மலரெங்கு நாறுமே
நீளி லஞ்சியின் மீன நெருங்குமே
யாளு மோதிம மம்புய வில்லமே
மூளு மோதிம மொய்வரை போர்க்குமே. (ககூ)

எல்லை மாற்று மமைவன மீறிலா
ரல்ல றீர்க்கு மமைவன மாய்மணி
கல்வி காத மருந்தினை கானெலாம்
வல்லி வான மருந்தினை மானுமால். (உ0)

* விண்ணோருணவிசு - தேவர்களுண்ணும் உணவு.

எண்ணம் போக்கினர்க் கெய்திடு மாதவர்
தண்ணங் காவிற் றடைபடு மாதவம்
பண்ணின் கீதம் படைத்திடுங் கோகிலம்
விண்ணு ஞாலமு மேலவர்க் கோ*கிலம். (உக)

வான மீனத் தரும்பும் வலம்புரி
பானன் முத்தம் பரப்பும் வலம்புரி
சோனை யாரொருக்குந் தும்பிமுத் தானமே
தேனை யேற்ற திருமலர்த் தானமே. (உஉ)

காம வல்லி கடுப்பன வல்லியே
மாம திக்கு மலர்வன வல்லியே
தாம மாரி தரும்பொரு நைவள
மாமை வண்டு வளர்ப்பது *நைவளம். (உங)

வேறு.

வள்ளி மேற்படர் நெடுங்கிரி மல்லலங் கொல்ல
னள்ளி வீசிய திரைப்பெருந் துருத்திகொண் டுறைய
வொள்ளி தாமணித் தழன்முழை யுலையிலி ட்டுருக்கும்
வெள்ளி வீழெனப் பிறங்குவ கறங்குவெள் ளருவி. (உச)

விற்ற ரும்புயல் வானள வாகிற்கும் வேரல்
சுற்றும் வெம்பணிப் பிணைப்பெனப் பணைப்பன சூரல்
சற்றெ னும்படி யண்டமு மணவுவ சாதி
பொற்றை யங்கயங் கரமெடுத் தாலொக்கும் போதி. (உரு)

கனிய ருந்தியுங் காய்கிழங் கருந்தியுங் கானப்
புனித மாகிய சருகிலை யருந்தியும் பொருந்த
வனிலம் வந்துற வருந்திநீ ரருந்தியு மொன்றுந்
தினம ருந்திடா தொழித்துமெய்த் தவம்பலர் செய்வார். (உசு)

கேரி தாமுனை யூசியிற் பெருவிர னிறுத்திச்
சீரி தாம்வளி பிரமரந் திரத்தினிற் செலுத்தி
யீர வாண்மதிச் சடிலனை யிதயத்தி லிருத்திப்
பாரி யாகிற்குந் தவம்புரி முனிவரர் பலரால். (உஎ)

---

* கிலம் - சிறுமை.

நைவளம் - ஓர்பண்.

மயிலு நாகமு மடங்கலு நாகமுங் கூவுங்
குயிலுங் காகமுங் குயவரி யொடுமறிக் குழவும்
பயிலு மற்றுள மிருகமும் பறவையும் பயந்தீர்ந்
தியலு மோரினம் போற்பகை யின்றிநின் றியங்கும். (உஅ)

இன்ன பற்பல வளங்களு மளவிலா தியல
மன்னி வானுடு மணந்திடத் தணந்துசென் மதியந்
தன்ன தாகிய சாரலிற் றவழ்ந்திட வளர்ந்து
பொன்னின் மால்வரை யாமெனப் பொலிந்தது பொதியம்.()

செம்ம லாமென முருகனைப் பெறுதலாற் சிறந்த
கொம்மை யாமுழை தரித்தலாற் குவலயத் தெவர்க்கும்
வெம்மை தீர்த்தருள் சந்திர திலகமேற் கொளலாற்
பொம்மல் வெவ்விட மிடற்றனுஞ் செந்தமிழ்ப் பொதியம். ()

தன்னி டத்தினின் மணஞ்செய்பூங் கொடிதழைத் திடலால்
வன்னி தாதகி வரநதி தாங்கலால் வளர்ந்த
பன்ன கத்தினுற் பணிதினம் படைத்தலாற் பசிய
பொன்னம் பூதர வில்லியாஞ் செந்தமிழ்ப் பொதியம். (ருக)

உலக மூன்றையுங் கடந்துதட் டுருவிநிற் பதனு
மிலகு மிந்திர நீலத்தி னொளிதழைத் திடலா
னிலம டந்தையைத் தரித்தலா னிசிசரர்த் தடிந்து
புலவர் சஞ்சலம் போக்கிய மாயனும் பொதியம். (ருஉ)

நீதி லாப்புவிக் கின்னுயிர் படைத்திடுந் திறலாற்
கோது குத்தவர் பயிறரு மறைகொழித் திடலா
லோது வித்தகர் திகழ்கலை மான்மரு வுறலாற்
போத கந்தர லான்மறைப் போதனும் பொதியம். (ருரு)

உவமை யற்றவப் பொதியம்வா னவருரு வெடுத்துக்
கவிஞர் கூறிய விராதந்தர் கற்பகா லத்தி
னவம ணிக்கலன் மகுடமு நலம்பெறப் புனைந்து
துவள வாலிய சாமரை யிருபுடை துவன்ற. (ருச)

சைய பூதரந் தருத்தரந் தனியுரு வெடுத்துச்
செய்ய தோமரா யிருமருங் கினுஞ்சிறந் திருப்ப
வைய கத்துள வரையெலாம் வணங்கிமுன் னிற்பத்
தைய லோடும்வீற் றிருந்தது கோளரித் தவிசில். (ருரு)

தேவர் கோவெனச் சிறந்தர சிருக்குமத் தினத்தின்
மூவர் மூவுல கத்தினுந் தனிபுகு முறையா
னுவ தேயன்றி யழிவது நாவினு லறையான்
ருவி லாதபல் லூழியுங் கடந்து சஞ்சரிப்போன். (௩௬)

பேர்ற்றி ருக்கொரு நாலும்யா ழிசையிடைப் பொலியத்
தோற்று கின்றதோ ரொளியிது வேதெனத் துளங்க
நீற்று நெற்றியு நெறித்தபுன் சடிலமும் விளங்க
மாற்ற ருந்தவம் வாய்த்தநா ரதமுனி வந்தான். (௩௭)

வந்த யாழிசை முனிவனை யெதிர்கொடு வணங்கி
யிந்து காந்தத்தி ளிலங்குசிங் காதனத் திருத்திச்
சிந்து தேமல ராதிகொண் டருச்சனை செய்து
புந்தி யின்புறப் போந்ததென் புகலுதி யென்ன. (௩௮)

வினவி லற்புத முரைக்கவங் தனமென விளம்பக்
கனியு மாதவ வதிசயங் கண்டதுண் டாகிற்
புனித மேழையேம் பொருந்திடப் புகலுதி யென்னப்
பனவ நாரத முனிவரை மூன்றிற்கும் பகரும். (௩௯)

ஆருவது பொதியச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (௧௨௩.)

---

## பொதியச்சருக்கச் சுருக்க வசனம்.

மெய்ஞ்ஞானம் முற்றதுறவிகள் அடைதற்கெளியதாகி மற்றவர்கள் அடைதற்கரியதாகி இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழும், பெருமைதங்கிய தாம்பிரபருணிநதியும், தென்றற்காற்றும் தன்னிடத்திலுடையதாகிச் சகலவளங்களும் நிறைந்துள்ளதாகிக் கனிகாய் கிழங்கு சருகுமுதலியவற்றைப் புசித்தும் இவையொன்றையும் புசியாதும் பரமேசுரனை இருதய தாமரை மலரிலிருத்தித் தவஞ்செய்யும் முனிவர்களுக்கு அத்தவத்தின் பிரயோசனத்தை எளிதிலே தருவதாகியுள்ள பொதியமலையானது முன்னொரு கற்பகாலத்திலே இரண்டுபக்கமும் சையமலையும் தருத்தரமலையும் தனக்குத் தோழராயிருப்ப மற்றநேக மலைகள் தன்னைச் சூழ்ந்துநிற்ப நவரத்தின கிரீடம் புனைந்து சிங்காதனத்தில் அரசிருந்தது. அந்தச்சமையம் முனிசிரேட்டராகிய நாரதமாமுனிவர் எதிரெழுந்தருளுதலும் உடனே அவரை

யெதிர்கொண்டு வணங்கிச் சந்திரகாந்தத்தாலாகிய ஆசனத்தி லிரு க்கச்செய்து தேவரீர் இங்கெழுந்தருளிய விசேடம் யாது எனப் பொதியமலை கேட்ப, அம்முனிவர் பொதியமலை சையமலை தருத் தரமலை யாகிய மூன்று மலைகளுக்கும் சொல்லுவாராயினர்.



## ஏழாவது: நாரதச் சருக்கம்·



தருமலர் மருமலர் மழைசொரியத் தவமுனி வரர்பலர் துதிசொரியக், குருமணி நெடுமுடி வெயில்விரியக் குலவிய ப லமணி நிலவொளிரத், தெரிவையர் கவரிகள் புடைசுலவத் தி சைதிசை படரிருள் சிதறிடவுற், றொருசசி குடையென நிழ லிடமற் றொருசசி புடையினி லுடனுறைய. (க)

மந்திரி முதலிய கடவுளர்தம் மரபினி லொருபுடை யி னிதுறைய, வந்தர முறுகதி ரவன்முதலா வமரர்கண் முறை முறை யடிபணியத், துந்துபி முருடதிர் குறடுமுதற் றுரிசறு ப ரிசுறு முரசதிர, விந்திரன் விரிசுட ரரியணைமே விறைமுறை புரிதரு மரசவையில். (உ)

பாயிருள் பருகிய சுடிகைமணிப் பஃறலை யுரகர்வெவ் வி டமுகுதீ, வாயினி லமுதுக விழிகுளிர வணைசுழ லடியிணை மு டிபுனையத், தூயவர் புகழ்திரு வடிவழகார் *சூழியி னடைப டர் பசியநிறத், தாயிரம் விழியெனு முளரிகண்மே லரிவையர் வரிவிழி யரிசுலவ. (௩)

நீடிய குழலொலி முழவொலியு நெறிபடு மிடறிசை தரு மொலியுஞ், சூடக மிலகுகை யபிநயமுந் துணைவிழி யிணைகு ழை தொடும்விதமு, நாடிய முனிவரு மனமுருக நயமுறை விதிமுறை சதிமுறையே, யாடின ருருவசி முதன்மடவா ரட ல்வலி மகபதி யகமகிழ. (ச)

ஆழிய கடல்விட மமுதெனவுண் டருளிய பரமன தடிப ரசிப், பாழிகொள் கயிலையும் வடமலையும் பலபல மலையிடை சிலமலையும், வாழிய வெனநெறி முறைபரவா வணைபுரி தொ றுமணி விரலமைவித், தியாழிசை பாடினர் கோசரர்வா னி மையவ ரிறையிரு செவிகுளிர. (ரு)

* சூழி - சுனை.

அங்கவர் மதிமுக மகமலர்வித் தருள்பொழி விழிகொடு விடையுதவிப், புங்கவ ரதிபதி யயனுரையும் புகாறு குரவனை வினவினனுற், சங்கர னிணையடி பரசுவதென் றடவரை சில விவர் புகழுவதெ, னிங்கிவை புகலென வெதிர்மொழிய வி மையவர் குருவவை புகலுறுவான். (சா)

ஆதியி னடநவின் முறையருளி யங்கட மின்னெதிர் புரி தவினுற், சோதிவெண் மதிமுடி புனைபரனைத் தொழுதனர் ப ரசினர் கயிலைமுதற், பூதர மவனினி துறைதவினுற் புகழ்கொ டுபரவினர் பொதியமொடு, மீதுய ரிமகிரி முதலபரன் விழை தவ முறுகில புகழ்கிலரால். (எ)

என்றன னந்தணன் மகபதிமுன் னிவ்வுரை வுகைபெற விமயமலைக், கொன்றிய வறிவுறும் வகையுரைசெய் துமைய வண் மனுவொடு சிவமனுவு, நன்றினி துறும்வகை யருளினநீ ர் நவையறும் வகைகுரு மொழிவதெலா, மின்றிவ ணுறைசெ ய வந்தனமியா மெனவெதிர் சுரமுனி புகலுதலும். (அ)

வேறு.

சையந் *தார்த்தர கிரியொடுந் தமிழ்க்கிரி யெழுந்து
மெய்யெ லாகில மிசையுற வடிக்கடி விழுந்து
துய்ய நல்லறி வளித்தருள் வாயெனத் துதிப்பச்
செய்ய குண்டிகைத் தீர்த்தத்தை யொருமுறை தெளித்தான்.

தெளித்த போதுமெய்ஞ் ஞானத்திற் சிறந்தொரு தீர்த்தங்
கிளைத்தல் கண்டிது வேதென்று கேட்கநாந் தெளிக்கத்
துளித்த விந்துவா நாரத தீர்த்தமாந் தொடினும்
விளைக்கு நல்லற மென்றனன் வெற்பினம் வியப்ப. (க0)

சிறுமை நீங்கவப் பனிவரைக் கருளுப தேசு
மறிவு போக்கிய வெங்கட்கும் பெருமையுண் டாக
விறைவ வின்றருள் புரிகென வளவில்பே ரின்ப
மறுமை யிம்மையு முதவுபஞ் சாக்கர மனுவை. (கக)

சிலம்பு மூன்றிற்குஞ் சிறந்துப தேசித்துத் தெவிட்டா
நலந்த ருஞ்சிவ பூசனை விதிமுறை நவின்று
கலந்த ஞானத்தி னிவ்வழிக் கீழ்த்திசைக் களவி
லிலங்கு மூன்றிலிற் புரிகவென் றருளொடு மிசைத்தான். (கஉ)

---

* தார்த்தரம - சருததாரு.

பாத வக்கள வியாதெனை வினவவிப் பாரி
லாதி காலையில் விராட்புரு டனுக்கருள் புரியுஞ்
சோதி லிங்கமொன் றுள்ளதச் சோதியைச் சூழ்ந்து
வேத மூன்றுமுக் களமெனப் பூசித்து மேவும. (கங)

மூக்க ளாவினுக் கீசதிக் கானதின் மூன்று
மிக்க தீர்த்தத்தி னுருவமுந் தாங்கியவ் வேதஞ்
செக்கர் வார்சடைத் தேவனைச் சேவைசெய் துவக்குந்
தொக்க வோர்மறை விசும்புருக் கொடுநின்று தொழுமால். ()

வேறு.

செங்கை பூக்த திருமுக் களவினர் செங்கை பூத்த திருமுக் களவினர், சங்கை நேர்ந்த விடைக்கொடி வாமத்தார் சங்கை நேர்ந்த விடைக்கொடி வாமத்தா, ரங்க மாறுகூர் சேகரச் செம்மலா ரங்க மாறுகூர் சேகரச் செம்மலார். மங்க ளத்தன வேத மொழியுமே மங்க ளத்தன வேத மொழியுமே. (கரு)

சோகம் போன கலியாண சுந்தரர் தூது போன கலியாண சுந்தரர், நாகம் பூணச் சிறந்த தனுவினர் நாகம் பூணச் சிறந்த தனுவின, ராகம் போகக் கமலைக் களித்தமா லாகம போகக் கமலையந் தாரினர், பாகந் தாரணி பாவைக்கு நாற்கவிப் பாகந் தாரணிப் பாலற்கும் பாவித்தார். (கசு)

மறைகள் போற்ற வரும்பாவ னாசனர் வணிகன் போற்ற வரும்பாவ னாசன, ரிறைவன் கும்ப முனிசூழ் பதத்தின ரெழுந்து கும்ப முனிசூழ் பதத்தினர், விறல்வ ரிச்சிலைச் சந்திர வெற்பினர் விருப்பி னேந்திய சந்திர வெற்பினர், கறைய ராகதி தோற்ற முடித்தவர் கசட னேன்பெறு தோற்ற முடித்தவர். ()

என்று கூறின னாரத னவ்விட மெங்க ளுக்கிங் கெதிர்ப்படத் தக்கதோ, சென்று காட்டி யருளென வேண்டத்தன் றிருவு ளத்திற் களித்துமுன் சென்றய, லன்று காட்ட மறைவா வியிற்படிந் தகம லாநது முகமலர்ந் தேமலர், மன்றல் வீசு களவொரு மூன்றையும் வரைகண் மூன்றும் வணங்கிமுன் போற்றின. (கஅ)

உகங்கள் பற்பல சுற்ற நிலாவிய வூழி யாவுங் கடந்தா னயனொரு, முகங்க ளைந்துபின் னொன்முக னுக்கிய முகங்க ளைந்துடை முக்கள வாதியா, னகங்க ளந்தக் கரணத்தின் பாற்

செல வ்ருந்த வம்புரிந் தாலருள் வானென, நகங்கண் மூன்றி
ற்கு மிவ்வா றருள்செய்து நயந்து வானத்து நாரதன் போயி
னன். (கக)

ஏழாவது நாரதச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கசஉ)

---

## ஏழாவது நாரதச்சருக்கச் சுருக்கவசனம்.

பொன்னுலகத்திலே கற்பக விருக்ஷங்கள் புட்பமாரி பொழிய முனிவர் அநேகர் தோத்திரஞ்சொல்லத் தேவப்பெண்கள் இரண்டு பக்கமுஞ் சாமரைகள் வீசச் சந்திரவட்டக்குடை நீழல்செய்ய உருப்பசி முதலிய பெண்கள் நடனமாட இந்திராணியுடன் தேவேந்திரன் இரத்ந சிம்மாதனத்திலே கொலுவீற்றிருந்தான். அந்தச் சமயம் யாழ் வாசித்தலிலே சிறந்தவர்களாகிய கோசரர் வந்து பரம கருணாநிதியாகிய சிவபெருமானுடைய திருவடிகளைத் தோத்திரஞ் செய்து கயிலாசமலையையும் மகாமேரு மலையையும் இன்னுஞ் சில மலைகளையும் புகழ்ந்து பாடினர். அதுகேட்ட இந்திரன் சந்தோஷமுற்று அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுத்தனுப்பிவிட்டுத் தன்னுடைய குருவாகிய வியாழபகவானை நோக்கி, இந்த வித்துவான்கள் சில மலைகளைமாத்திரம் புகழ்ந்து பாடியது யாது காரணமென்று கேட்கத் தேவகுருவானவர் சொல்லுவார். பரமசிவனைப் பூசித்துப் பேறுபெற்ற மலைகளைத்தானிவர் புகழ்ந்து பாடினர், இமயமலையும் பொதியமலையும் இன்னுஞ் சில மலைகளும் பரமேஸ்வரனைப் பூசியாதிருந்தமையால் அவைகளைப் புகழவில்லை யென்றனர். இந்த வார்த்தையை இமயமலைக்குச் சொல்லிச் சத்திமந்திரத்துடன் சிவ மூலமந்திரத்தையு முபதேசித்து இங்குவந்தேனென்று நாரதமுனிவர் சொல்லக்கேட்ட பொதியம் - சையம் தருத்தரம் எனப்படும் மூன்று மலைகளும், உடனே வணங்கித் துதிப்ப நாரதர் தமது கமண்டலத்தி லிருந்த நீரை அம்மலைகள் மேலே புரோக்ஷித்தார். அந்நீர் நாரத தீர்த்தமானது. அதைத்தொட்டாலும் புண்ணியத்தை விளைவிக்கும் என்று பின்பு இமயமலைக் குபதேசஞ் செய்த மந்திரங்களை யுபதேசித்துச் சிவபூசாவிதி முறையையும் போதித்து இந்த இடத்துக்குக் கீழ்த்திசையிலுள்ள முக்களாவிருக்ஷத்தின் முற்றத்திலே எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானைப் பூசை செய்யுங்கள். அந்தக் களாவிருக்ஷத்துக்கு ஈசானதிக்கிலே மூன்று

வேதங்களும் மூன்று தீர்த்தங்களா யிருக்கின்றன என்று கூறித் தம இடத்துக்குச் சென்றனர். பின்பு மலைகள் மூன்றும் எழுந்து சென்று வேததீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து நாரதர் கட்டளைப்படியே சிவார்ச்சனைசெய்யத் தொடங்கின.



## எட்டாவது: சிவபூசைச் சருக்கம்.



நாரத முனிவ னந்த நாகங்கண் மூன்றுங் கேட்ப
வாரணி சடிலன் பூசை யாகமப் படியே கூறுஞ்
சீரிய கூரதை யெலலாந் தெரிந்தெமக் குரைதி யென்று
சோர்விலா முனிவர் கேட்பச் சூதமா முனிவன் சொன்னான்.

வானதிக் கரையி லாதல் வரையிடத் தாதல் வில்வக்
கானிடத் தாதன் முக்கட் கடவுளா லயத்தி லாத
லூனமின் மனையி லாத லோங்கிய விசிட்ட மான
ஞானபூ மியினிற் பூசா மண்டப நயந்து செய்து. (௨)

வரநதி படிந்து சுத்த வத்திர மிரண்டு தாங்கித்
திரமுறு கண்டி பூதி தேகத்திற் புனைந்து கொண்டு
பரவிமண் டபத்தி னெய்திப் பதுமவா தனமா வைகி
யுரவுமுக் குற்ற நீக்கி யுத்தர திசையை நோக்கி. (௩)

புலன்றனை யடக்கி யுள்ளம் புனிதமாய்ப் புண்ணி யாகந்
துலங்குறச் செய்து பூசா மணடப சுத்தி செய்து
கலந்துறை துவார பூசை கணபதி முதலாச் செய்து
விலம்புன லாதி பூத சுத்தியு நெறியே யாற்றி. (௪)

மானத பூசை செய்வான் மனசரோ ருகத்திற் பூமி
யானதே யாதி விந்து வந்தமா தனங்கற் பித்துப்
பானிறப் படிக ஞான விலிங்கமெண் விரலிற் பாவித்
தீனமில் பொறையைப் பாத்தி யாதிமுன் றென்னச் செய்து

தண்புனன் ஞான மாகச் சந்தனம் புத்தி யாகப்
பண்பயில் பாவ கங்கள் பனிமல ராகத் தூபங்
கண்பெறு தீபந் தானுங் காரமா னங்க ளாக
நண்புறு மந்தி ரங்கள் சுழுமுனை நாடியாக. (௫)

விந்துவி னமுதந் தானே வேத்திய மாகச் செய்து
சுந்தர விலிங்கந் தன்னிற் றுவாதசாந் தத்தின் வாழ்வைச்
சிந்தையி லாவா கித்துச் சிறப்புறப் பூசை செய்து
புந்தியின் மகிழ்ச்சி பொங்கப் புறத்தினும் பூசை செய்வான்.

தானமுஞ் சுத்தி செய்து பாத்திய மாதி தாயித்
தூனமில் சந்த னாதி திரவிய சுத்தியோம்பி
வானுல களிக்கு ஞான மந்திர சுத்தி செய்து
தேன்முத லான வாட்டிச் சிவலிங்க சுத்தி செய்வான். (அ)

பாங்குறப் பஞ்ச சுத்தி யாகமப் படியே யாற்றி
யோங்கிய சிவலிங் கத்தை யொளியணி தயைத்த சியங்
தாங்கிய செம்பொற் பீடந் தனிலெழுந் தருளப் பண்ணி
யாங்கணு தார சத்தி யனந்தரா தனம னந்தர். (கூ)

அங்கிதிக் காதி நான்குந் தன்மாதி யான நான்கும்
பங்கமில் கிழக்குத் தொட்டுப் பகரதன் மாதி நான்குந்.
தங்கதச் சதன மற்றை யூர்த்துவச் சதனந் தன்னைத்
துங்கமா நிருதி திக்குந் தூயவீ சான திக்கும். (க0)

கந்தமே முதலெண் டோட்டுக் கமலாந்த மனுக்க டாமு
மந்தநா லிரண்டு தோட்டிற் கிழக்காதி வாமை யாதி
வந்தசத் திகளு மீச மனோன்மனி தனையும் வெய்யோன்
சந்திர னெளிரும் வெந்திச் சத்திமண் டலங்க ளுன்கும். (கக)

மண்டல பதியாம் வேதன் மாலுருத் திரன்ம கேசன்
முண்டக விதமே யல்லி கன்னிகை முனையு னளுங்
கொண்டவா தனமுஞ் சாத்திச் சிவமூர்த்தங் குறித்தா வாகித்
தண்டகா யகனுர் வித்தி யாதேக மாவா கிப்பான். (கஉ)

வெண்ணிறங் கரமீ ரைந்து சிரமைந்து விழிமு வைந்து
வண்ணமீ சானம் வெண்மை மருவுதற் புருடம் பொன்மை
கண்ணுறு கறுப்ப கோரங் கதிர்விடுஞ் சிவப்பு வாமந்
தண்ணிலாக் கொழிக்கும் வண்ணஞ் சத்தியோ சாத மாக. ()

முச்சிரம் படைத்தவேல்வாண் முனைமழு வரதமூரி
வச்சிரம் வலக்கை வாம மாதுளங் கனியே பாச
நச்சர வக்க மாலை நாதமார் துடியுந் தாங்கி
யிச்சைகொ ளுறுப்பு முப்பத் திரண்டும்வாய்த் திலங்கு மெய்யும்.

சந்திர கலைகி லாவுஞ் சடிலமு மார்பி னாக
பந்தனப் புரிமுந் நூலும் பதுமவா தனமு மாகச்
சிந்தைசெய் தாவா கித்துச் சிவமுமே லாவா கித்துச்
சுந்தரக் கலைகி ரீடந் தொடையல்சாந் தணியுஞ் சாத்தி. (கரு)

புகலில யாங்க பூசை புரிந்துபோ காங்க பூசை
வகைபுரி காலை முக்கண் மதிமுடி படிக வண்ண
மிகலுமுக் குடுமிச் சூல மபயமு மிருகை வாய்ந்த
தகைமையை நினைந்தீ சான தளத்திலீ சானர் தம்மை. (கசு)

பொன்னிற முந்நான் முக்கண் பொற்கலை யிந்து வேணி
மன்னுமா துளங்க மக்க வடமிரு கரத்து மாகப்
பன்னுதற் புருடங் கீழ்பாற் பனிமதிச் சென்னி முக்கண்
மின்னுகுண் டலங்க பாலம் விரிச்சிக வுரக மாலை. (கஎ)

நெறிதரு புருவஞ் சாம நிறமுக விகிர்தம் பாசம்
வெறிதரு * கட்டு வாங்கம் பரிசைவெண் டலைக பாலஞ்
செறிதரு வலத்தி டக்கை திரிசூல மழுவா டண்டம்
பிறைதிக ழெயிறு சாந்தம் பேசுறு மகோரந் தெற்கில். (கஅ)

சிவந்தவத் திரஞ்செம் மேனி செய்யதா † ருட்டி நீட
நிவந்தெழு துண்ட முந்நூல் பரிசைவா ணிலவு செங்கை
யுவந்தருள் வாம தேவ ருத்தர திசையின் முக்கண்
கவின்பிறை மகுடஞ் சாந்தங் கட்டுவெள் ளுட்டி நீடம். (கக)

வரதமோ டபயம் வெள்ளை வத்திரம் வதன மொன்று
தருணம்வெண் ணிறம்வெண் மாலை சத்தியோ சாத மேல்பா
லருணமெய் யிருகை சூல மாவுமுத் தத்து வங்கள்
விரவுமுச் சுடரு லோக மேவுநேத் திரமீ சானம். (உ0)

சிதநிற மிதயம் பொன்மை சிரஞ்சிகை செம்மை நீலம்
வதிதரு கவச நாற்கை வரதம்வே லபயம் வாளி
விதுவணி சடையெல் லோர்க்கு மேவிட மாக்கி னேயம்
பதியுறு மீச திக்கு நிருதியே பவன திக்கு. (உக)

ஆடக வடிவஞ் சூல மபயமுந் தாங்கு மங்கை
கோடுறு வீர தந்தங் கொண்டவத் திரமாந் தேவைப்

---

* கட்டுவாங்கம்-ஒரு ஆயுதம். † உட்டிநீடம்-தலைப்பாகை.

பீடுறு பூர்வ மாதி பெருந்திசை நான்கு மாக
நீடுபோ காங்க பூசை நெறிதவ றாது போற்றி. (உஉ)

வேறு.

பொன்னிற மனந்தர் சூக்குமர் சிவப்பு போற்றுறு சிவோத்தமர் நீலம், பன்னரு மேக நேத்திரர் பவளம் பானிற மேகருத் திரர்தா, மன்னிய பனியி னிறந்திரி மூர்த்தி மருவிய செம்மைசி கண்டர், பின்னுறு சிகண்டி வெண்ணிறம் வளைந்த பிறைமுடி முகமொரு நான்காம். (உ௩)

ஐயிரு கரத்து மாயுதஞ் சூல மம்புவில் பரிசைவா ளபய மொய்தரு மக்க சூத்திரம் வரதங் கமண்டல முளரியுந் தாங்கி யெய்திய பதுமா தனமுறு மிவரை யிந்திரை யாதியீ சாந்தமையறு மிரண்டா மாவர ணத்தின் வகையறிந் தருச்சனை வகுப்பான். (உச)

வேறு.

செம்பரத்தம் பூமேக முத்தாக்குப் பளிங்குபொன்மை பீதஞ் செம்மை, பம்புநிறம் பதுமவா தனம்படைத்த நந்தியெனும் பரன்மா காள, னும்பர்தொழும் பிருங்கிகண பதிவிடைமென் சாயன்மயி லூர்தி தேவி, வெம்புசினச் சண்டேசனெனுமூன்றா மாவரணம் விரும்பிப் போற்றி, (உ௫)

எண்டிசையும் பூசைசெய்து திக்குபா லகரிந்தி ராதி யெண்மர், முண்டகன்மா லிருவரையெண் டிசையீச நிருதியினின் முறையே போற்ற, லண்டர்மகிழ் தருநான்கா மாவரணமாயுதங்கள் குலிச மெஃகந், தண்டசிபா சந்துவசந் தடிசூலந் தாமரைசக் கரமித் திக்கில். (உ௬)

பூசைபுரிந் தாலைந்தா மாவரண மிம்முறையே புகழ்ந்து போற்றி, மாசறுசோ டசவுபசா ரங்கொடுபூ சனைபுரிந்து மாதுபாக, னேசமொடு கலைபயிலு நியதியோர் பவக்கடலை நீந்தி நீங்காப், பாசமறுத் தழியாத பரகதியைத் தம்பதியாப் படைத்து வாழ்வார். (உஎ)

போகம்விரும் பினுமுலகம் புரக்கவிரும் பினும்விசும்பிற் புரந்த ராதி, யோகம்விரும் பினுமெளிதிற் சிவபூசை புரிபவருக் குண்டாம் யூப, யாகமணி மாதிசித்தி மாதவங்க ளியாவையுமிப் பூசைக்கொவ்வா, வாகலின்மா நிலத்துதித்துப் பூசிப்போர் பெருமையெவ ரளக்க வல்லார். (உஅ)

மாசறுநற் குலத்துதித்தோ ராயினும்பூ சனைபுரியார் மகிமை சேரார், பேசுறுகீழ்க் குலத்துதித்தோ ராயினும்பூ சனைபுரியிற் பெரிய ராவ, ரீசனையர்ச் சனைபுரியு மகத்துவமெம் மாலுரைக்க வெளிதோ வென்று, காசறுநா ரதமுனிவன் மூக்கிரிக்கு முரைத்தருளுங் காதை யீதால். (௨௯)

அந்தமறை தவறுது வானவர்வா னுலகளவு மளவியோங்குஞ், சந்தவரை சையவரை தருத்தரமாம் வரைமூன்றுஞ் சனனந் தோறும், பந்தமூறுங் கொடிதான பாசவினை நாசமுறப் பாவ நாசத், தெந்தையடி யிணைபோற்றி யிருந்தனவாங் கெனச்சூத னெடுத்துச் சொன்னான். (௩௦)

எட்டாவது சிவபூசைச்சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (௧௭௨.)

---

### எட்டாவது சிவபூசைச்சருக்கச் சுருக்கவசனம்.

நாரத முனிவரானவர் பொதியமலை, சையமலை, தருத்தரமலை எனப்படும் மூன்று மலைகளுங்கேட்கச் சிவபூசை விதியைச் சிவாகமத்திலருளிச் செய்யப்பட்டபடியே சொல்லிய சிறப்புத் தங்கிய கதையைச் சவுனகாதி முனிவருக்குச் சூதமுனிவர் சொல்லுவாராயினர். பரிசுத்தமாகிய நதிக்கரையிலாவது, மலையிலாவது, வில்வப் பூங்காவனத்திலாவது, சிவாலயத்திலாவது, குற்றமில்லாத கிரகத்திலாவது விதிப்படி பூசாமண்டபஞ் செய்வித்து, விசேடமான நதியிலே ஸ்நானம்பண்ணிச் சுத்தவஸ்திர மிரண்டுதரித்து விபூதி ருத்திராக்ஷமணிந்துகொண்டு பூசாமண்டபத்தை யடைந்து மூக்குற்றத்தையும் நீக்கி வடக்கு நோக்கிப் பத்மாசனமாக இருந்து ஐம்புலன்களையு மொடுக்கி, மனத்தைப் பரிசுத்தப்படுத்திப் புண்ணியாகத்தாற் பூசாமண்டபத்தைச் சுத்திசெய்து விநாயகக்கடவுளாதி துவார பூசைமுடித்து, அப்பால் நிலம், சலம் முதலாகிய பூதசுத்தியை முறைப்படிசெய்து பின்பு மானதபூசை செய்யத் தொடங்கி மனமாகிய தாமரைப் பூவிலே நிலம்ஆதி விந்து இறுதியாகச் சொல்லப்பட்ட ஆசனங் கற்பித்து, அதன்மேல் வெண்ணிறமாகிய ஞான இலிங்கத்தை யெட்டு விரலுயரமாகப் பாவித்து எழுந்தருளப்பண்ணிப் பின்பு பொறுமையை அருக்கியம் பாத்தியம் ஆசமனமாகவும், ஞானம் சலமாகவும், புத்தி சந்தனமாகவும், பாவனைகள் புட்பங்களாகவும், ஆங்காரம் தூபமாகவும், மானம் தீபமாகவும், மந்திரம் சமூ

மூனை நாடியாகவும், நைவேத்தியம் விந்துவிலுள்ள அமுதமாகவும், அமைத்துக்கொண்டு மேலே யெட்டுவிர லுயரமாக அமைக்கப்பட்ட இலிங்கத்திலே துவாதசாந்தத்திலே யுள்ள சோதியை ஆவாகனஞ் செய்து உபதேச முறைப்படி பூசை முடித்தல் வேண்டும். இந்தப் படி மானதபூசை முடித்தபின்பு.

புறத்திலே பூசைசெய்யத் தொடங்கித் தானசுத்திசெய்து பாத்தியமாதி தாபித்துச் சந்தன முதலிய பூசாதிரவிய சுத்தியும், மந்திர சுத்தியும், சிவலிங்க சுத்தியுஞ்செய்து மணிகளிழைத்த பொன்னலாகிய பீடத்திலே சிவலிங்கத்தை யெழுந்தருளுவித்து, அனந்தாசனங் கற்பித்து அக்கினிதிசை முதலிய நான்குதிசையிலும் தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் எனப்படும் நான்கு கால்களையும் கிழைத்திசை முதலிய நான்கு திசையிலும், அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் எனப்படும், நான்கு சட்டங்களையுஞ் சேர்த்து, பிருதிவியாகிய கிழங்கினின்றுந்தோன்றிய அசுத்த மாயையாகிய கீழிலையும் சுத்தமாயையாகிய மேலிலையும் அட்ட வித்தியேசராகிய எட்டு இசழும், இதழைச்சூழ்ந்த இடஞ் சூரியமண்டலமாகவும், இதழினுள்ளிருக்கின்ற மகரந்தஞ் சந்திரமண்டலமாகவும், மகரந்தம் பொதிந்த கன்னிகை அக்கினி மண்டலமாகவும், கன்னிகையினது நடு இடம் சத்திமண்டலமாகவும், உள்ளபது மாசனத்தைப் பீடத்திலெழுந்தருளிய சிவலிங்கத்துக்குச் சாந்திச் சிவமூர்த்தம் ஆவாகனஞ்செய்து, அதன்பின்பு வெண்ணிறமுள்ள ஈசான முகமும், பொன்னிறமுள்ள தற்புருட முகமும், கறுப்புநிறமுள்ள அகோரமுகமும், சிவப்புநிறமுள்ள வாமமுகமும், வெண்ணிறமுள்ள சத்தியோசாதமுகமும் சூலம், வேல், மழு, வச்சிரம் ஆகிய இவ்வைந்தையுந் தரித்த வலப்பக்கத்துத் திருக்கரஙகள் ஐந்தும்; மாதுளங்கனி, பாசம், சர்ப்பம், ருத்திராக்ஷம், உடுக்கு ஆகிய இவ்வைந்தையுந் தரித்த இடப்பக்கத்துத் திருக்கரங்கள் ஐந்தும், இன்னும் மற்றை யவயவங்களும், சந்திரனைத் தரித்த சடையும், சர்ப்பமாகிய முப்புரிநூலும், பதுமாசனமும் உடைய வித்தியாதேசத்தை ஆவாகித்து, அதன்மேல் சிவத்தை ஆவாகனஞ்செய்து வஸ்திரம், கிரீடம், மாலை, சந்தன முதலிய வணிந்து இலயாங்க பூசையை விதிப்படி முடிக்கவேண்டும்.

அதன்மேல் திரிநேத்திரமும், சந்திர சடாமகுடமும், படிக நிறமும், முத்தலைச் சூலமும் அபயமுந்தாங்கிய இரண்டுகைகளையுமுடைய ஈசானமுகத்தை யீசானதிசையிலும், பொன்னிறமும், மூச்

நூலும், திரிநேத்திரமும், பீதாம்பரமும், சந்திரசடாமகுடமும், மாதுளம்பழமும், உருத்திராக்ஷமாலையுந்தாங்கிய இரண்டு கரங்களுமுள்ள தற்புருடமுகத்தைக் கீழ்த்திசையிலும், சந்திரசேகரம் திரிநேத்திரம், குண்டலம், கபாலம், தேள்மாலை, சர்ப்பமாலை, நெறித்தபுருவம், கருநிறம், விகிர்தமுகம், பாசம், கட்டுவாங்கம், கேடகம், வெண்டலைமாலை, சூலம், மழு, வாள், தண்டம், வக்கிரதந்தம், சாந்தம் இவைகளைத்தாங்கிய அங்கத்தோடுள்ள அகோரமுகத்தைத் தென்திசையிலும்; சிவந்த வஸ்திரமும், சிவந்தமாலையும், சிவந்த தலைப்பாகையும், உயர்ந்தமூக்கும்; முப்புரிநூலும், கேடகம், வாள் தாங்கிய கரங்களும் உள்ள வாமதேவமுகத்தை வடதிசையிலும், திரிநேத்திரமும், சந்திரசடாமகுடமும், சாந்தமும், வெள்ளைத்தலைப்பாகையும், வரதமும், அபயமும், வெள்ளைவஸ்திரமும், வெண்ணிறமும், வெண்மாலையும் உள்ள சத்தியோசாதமுகத்தை மேலைத்திசையிலும் ஆகப்பாவனைசெய்து முறைப்படி போகாங்க பூசை செய்யவேண்டும். இன்னும் சிவந்த திருமேனியும், சூலமும், சர்ப்பமும், மூத்தத்துவங்களும், சோமசூரியாக்கினி நேத்திரங்களும், ஈசானருக்கு உள்ளனவாம். அன்றியும், வெண்ணிறமும், பொன்னிறமுள்ள இருதயமும், சிவந்த சிரமும் சிகையும், நீலநிறமுள்ள கவசமும், வரதம் வேல் அபயம் வாளிகளையுடைய கரங்களும், சந்திரசடாமகுடமும் உள்ள எல்லா மூர்த்தங்களுக்கும் அக்கினி, ஈசானன், நிருதி, வாயு ஆகிய திசைகள் நான்கு மிருப்பிடமாம். பொன்வடிவமும், சூலமும், அபயமுந்தாங்கிய கரங்களும், வக்கிர தந்தமுங்கொண்ட அகோரமூர்த்தியைக் கிழக்குமுதலாகிய நான்கு திசையினும் போகாங்க பூசை செய்தலுமாகும்.

அதன்மேல் ஆவரணபூசை செய்யத்தொடங்கி பொன்னிறமுள்ள அனந்தர், சிவப்புநிறமுள்ள சூக்குமர், நீலநிறமுள்ள சிவோத்தமர், பவளநிறமுள்ள ஏகநேத்திரர், பால்நிறமுள்ள ஏகருத்திரர், பளிங்கிறமுள்ள திரிமூர்த்தி, சிவந்தநிறமுள்ள சீகண்டர், வெண்ணிறமுள்ள சிகண்டி எனப்படும் அட்டவித்தியேசுரராகிய எண்மரும், சந்திரனைத்தரித்தமுடியும், நான்கு முகங்களும் சூலம், அம்பு, வில், கேடகம், வாள், அபயம், உருத்திராக்ஷமாலை, வரதம், கமண்டலம், அக்கினி ஆகிய இப்பத்தினையுந்தாங்கிய பத்துக் கைகளையுடையவர். இவரை இந்திரதிசைமுதல் ஈசானதிசைவரையும் இரண்டாவது ஆவரணத்திலே பூசை செய்யவேண்டும்.

அதன்பின்பு செம்பரத்தம்பூ, மேகம், முத்து, அரக்கு, பளிங்கு, பொன், பசுமை, சிவப்பு ஆகிய இந்த எட்டுப்பொருளினிறங்களைத் தனித்தனி முறையே பெற்றுப் பத்மாசனத்தைப் பொதுவாகப் பெற்ற நந்தி, மாகாளன், பிருங்கி, கணபதி, விடை, முருகன், உமை, சண்டேசன் எனப்படும் எண்மரையும் மூன்றும் ஆவரணத்திலே பூசிக்கவேண்டும். அதன்பின் எட்டுத்திசையிலும் திக்குப்பாலகராகிய இந்திராதி எண்மரையும், பிரமன், விஷ்ணு இவ்விருவரை ஈசான திசையிலும் நிருதி திசையிலும், நான்காம் ஆவரணத்திலே பூசை செய்யவேண்டும். அதன்பின் குலிசம், வேல், வாளி, பாசம், துவசம், தடி, சூலம், சக்கரம் ஆகிய ஆயுதங்களை எட்டுத்திசையிலும் ஐந்தாம் ஆவரணத்திலே பூசை செய்யவேண்டும். இங்ஙனம் சோடசோபசாரத்துடன் பூசைசெய்து முடித்தபின்னர் சிவனடியார்களுடன் சிவபுராண பாராயணஞ் செய்தவர் சனனக் கடலைக்கடந்து மோக்ஷமாகிய கரையை யடைவார். இப்படிச் செய்யுஞ் சிவபூசையுடையவருக்குப் போகம் இந்திராதியர்பதவி மோக்ஷம் ஆகிய இவற்றுள் இச்சித்தவை யெல்லாங்கிடைக்கும். யாகம் அட்டமாசித்தி தவம் முதலியவைகளெல்லாம் சிவபூசைக்கு நிகராகாவாம். ஆதலாலிந்தப் பூமண்டலத்திலே பிறந்து சிவபூசை செய்தவர் பெருமையை யளந்து சொல்ல வல்லவர் யாவர்? குற்றமற்ற நல்குலத்திற் பிறந்தவராயிருந்தாலும் சிவபூசைசெய்யாதவர் மாண்மிய மடையமாட்டார். தாழ்ந்த குலத்திலே யுதித்தவரானாலும் விதிப்படி சிவபூசை செய்வாராயின் உயர்ந்த குலத்தினராவர் என்று நாரதமுனிவர் அருளிச்செய்யக் கேட்டுப் பொதியம், சையம், தருத்தரம் என்னும் மலைகள் மூன்றும் பாவநாசத்திலெழுந்தருளிய வயிராசலிங்கத்தைப் பூசித்துத் தங்கியிருந்தனவென்று சவுனகாதியருக்குச் சூதமுனிவர் சொல்லியருளினர்.



## ஒன்பதாவது: விநாயகன்றோற்றிய சருக்கம்.



சோதிவா னவனை நாடிச் *சுரும்புகள் பனிநீ ராடி
மாதவ வேடம் பூண்டு மரவுரி சடிலந் தாங்கிப்
பூதிகண் டிகையு மெய்யிற் பொலிதரப் புனைந்து மூன்று
சீதளக் களவின் கீழ்பாற் சிறந்தபூ தலத்தைச் சேர்ந்து. (க)

* சுரும்பு - மலை.

புத்தியி லடங்காத் தேவைப் பூசித்து வருமந் நாளில்
வித்தக வெள்ளி வாரம் விநாயக சதுர்த்தி மேவ
நித்திய நியதி யெல்லா முடித்துநீ ராடி வாய்ந்த
வுத்தம நீறு பூசி யுறுபுல னைந்து மாற்றி. (௨)

காதலின் வேத தீர்த்தக் கரையினிற் கமலந் தீட்டு
மாதனத் திருந்து ஞான வடதிசை யதனை நோக்கிப்
போதக முகத்தி னானைப் புகன்மிருத் திகையிற் கோட்டி
வேதமந் திரங்கொண் டாவா கனமுறை விதியிற் போற்றி. (௩)

பாத்திய முதல நல்கிப் பான்மது வாதி யாட்டிச்
சாத்திமுப் புரிநூ லாடை சந்தனந் தரித்து நோக்கு
நேத்திர விடய மான பணியணி நிறைத்து நீங்காப்
பூத்திக ழிண்டை மாலை புனைந்துபுத் தறுகுஞ் சூட்டி. (௪)

பற்பல வடிசில் கன்னல் பண்ணியங் கனிக ணல்கி
யற்புதத் தூப தீப மாதிய கொடுத்து வாழ்த்திக்
கற்பநூல் விதிவ ழாது கடம்பொழி காட நால்வாய்ச்
சிற்பரப் பொருளைப் பூசை செய்தன செய்த காலை. (௫)

கண்ணுத லுறைய வாய்த்த கயிலையங் கிரியா மென்னப்
பண்ணவர் பரவா நிற்கும் பனிபொதி யிமய மென்னத்
தண்ணெனுந் திரைக்கை வீசித் தழங்குபாற் கடலா மென்ன
வண்ணல்வா னமுதம் பூரித் தவயவந் தரித்த தென்ன. (௬)

விரிநிலா நிறமு மூன்று விழிகளுங் கரமீ ரைந்தும்
வரிபயின் மதமு மொற்றை மருப்புநால் வாயும் வீசு
மிருதடஞ் செவியு மார்பி லிலங்குமுந் நூலுந் தாங்கிக்
கரிமுகக் கடவுண் முன்னே காட்சிதந் தருளக் கண்டு. (௭)

தடநெடுங் கரத்தாய் போற்றி தற்பரப் பொருளே போற்றி
விடையுடைப் பரம னீன்ற விண்ணவர்க் கமுதே போற்றி [ற்றி
யிடர்கெடுத் தடியார்க் கென்று மெளிதில்வந் தருள்வாய் போ
கடதிக் களிறே போற்றி கணபதி போற்றி போற்றி. (௮)

ஆதிநா யகனே போற்றி யெனத்துதித் தடிய ரேமுன்
பாததா மரையி னீங்காப் பத்திநித் தியமும் போற்றல்
காதலா லிங்கு நீயுங் கருணைகொண் டிருத்த லென்னா
வோதுமிவ் வரங்க ளெங்கட் குதவென வுதவிப் பின்னும். (௯)

வரைகளுக் கருளிச் செய்வான் மாதமொன் றகன்ற னீங்கள்
பரிவுறு பிறவி தோறும் படைத்தபா தகங்க ளிந்நாட்
புரிதவத் தாலுரோம நுனிவழி பொருந்தும் வானத்
திரவிவெங் கதிர்க்கு நீங்கா விருட்பிழம் பாகித் தோன்றி.(௧0)

மதம்படு களிறுய்ச் சீறி வரும்வரி லுமையாள் செம்பொற்
பதந்தனை நினைப்பி ரந்தப் பதந்தனிற் பரையுந் தோன்றிக்
கதம்படு கரியை வீட்டிக் காத்தருள் புரிவா ளென்ன
விதம்பெற வருளி யோர்கோட் டிபமுகக் கடவுள் போனான்.

வெண்கரி முகவன் கூறும் விதிப்படி கன்னி மாதந்
தண்கதிர் கதிரோ டொன்றத் தழுவுநாட் சோம வாரத்
தொண்கிரி மூன்று மாள்கி யுளநடு நடுங்கி நோக்குங்
கண்கதிர்த் திரங்கப் பாவக் கதக்கரி தோன்றிற் றன்றே. (௧௨)

ஒன்பதாவது விநாயகன் றோற்றியசருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (௱அச).

---

ஒன்பதாவது விநாயகன் றோற்றிய சருக்கச் சுருக்க வசனம்.

சோதிமயமாகிய பரமேசுரனை நாடிப் பொதியம், சையம், தருத்தரம் ஆகிய மூன்றுமலைகளும் போய் வேததீர்த்தத்திலே விதிப்படி ஸ்நானஞ்செய்து விபூதி ருத்திராட்சமாகிய சிவசாதனங்களைத் தரித்து முக்களா நீழலிலெழுந்தருளிய வயிராசலிங்கமூர்த்தியைப் பூசித்து வரும்நாளிலே, ஒரு சுக்கிரவாரத்தில் விநாயகசதுர்த்தி வருதலும் நித்திய கன்மங்களை முடித்து வேததீர்த்தக் கரையிலே வடதிசையை நோக்கிப் பதுமாசனத்திலிருந்து மிருத்திகையினால் விநாயகக்கடவுளுடைய திருவுரு அமைத்து மந்திரவிதி முறை வழுவாமல் அருக்கிய முதலியகொடுத்து அருகு முதலிய புட்பங்கள் சாத்திப் பற்பலவாகிய பண்ணியங்களும், கனிகளும் பிறவும் நிவேதிப்பித்துப் பூசைசெய்தன. அப்பூசையை யினிதுகொண்டருளிக் கயிலாசமலை எதிரெழுந்ததுபோல வெண்ணிற யானைமுகத்தோடு விநாயகக் கடவுள் பிரசன்னராகி வேண்டிய வரங்களைக்கொடுத்தருள, மலைகள் மூன்றும் தோத்திரஞ்செய்து இந்த இடத்தில் இந்தத் திருவுருவுடனே எழுந்தருளியிருக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, வெள்ளை யானைமுக விநாயகர் அந்தவரங்கொடுத்தருளி மேலும் இன்னு

ம் ஒருமாதஞ் சென்றால் மலைகளே! பிறவிதோறுஞ்செய்த உங்கள் பாவமெல்லாம் உங்கள் உரோமத் துவாரத்தின்வழியே கரிய யானை வடிவங்கொண்டு வெளியே வரும். அந்தச்சமயம் நீங்கள் பார்வதி தேவியாரைத் தியானித்தால் அத்தேவியார் எழுந்தருளி அந்த யானையைக்கொன்று உங்களுக்குச் சேமஞ் செய்தருளுவரென்று மறைந்தருளினார். பின்பு அடுத்த கன்னிமாதம் சோமவாரதினத்திலே அந்தப்படியே பாவமாகிய கரியயானை வெளிப்பட்டது.



## பத்தாவது: தேவிதோன்றிய சருக்கம்.



மலையுமஞ்ச மானுமஞ்ச வானுமஞ்ச வாரிநீ
ரலையுமஞ்ச வவனியஞ்ச வமரரஞ்ச வந்தகன்
கொலையுமஞ்ச விண்ணிலாவு கோளுமஞ்ச முனிவர்சேர்
நிலையுமஞ்ச வூழிமா நெருப்புநெஞ்சி லஞ்சவே. (௧)

கொண்டல்வாரி யுண்டநீர் குமிழ்ப்புறச் சொரிந்துக
வண்டகூட முகடுவிண் டடித்தபந்தி னலமரச்
சண்டமாரு தந்தளர்ந்து சாயவீ றிடுந்தொறு
மண்டுமோசை பொங்கிநீண் மராமரம் பிடுங்கியே. (௨)

காலகால னாதனார் களத்தெடுத் தமைத்திட
வாலகால மன்றுவந்த தின்றும்வந்த தாமென
நீலமேரு வொன்றுவந்து நேர்வதென்ன வெற்பின
மேலெழுந்து வந்ததம்ம வெய்யபாவ வேழமே. (௩)

நீங்கிடாது செவிசிறுத்தி நெற்றிமீது கையெழ
வாங்குவா னிமிர்த்துவெங்கண் வன்னிசிந்த வருதலுந்
தூங்கல்கோடி கோடிநின்று சுலவினுந் துளக்குறு
வோங்கன்மூன்று நிலைகுலைந்த வூழ்விலக்க லொண்ணுமோ.()

ஐங்கரத்தன் முன்புரைத்த வருளின்வண்ண மெண்ணுறீஇச்
செங்கரத்தோர் குவளையேந்து தேவிபாத முன்னலும்
பொங்கரத்த வெங்கண்வெய்ய போர்மடங்க லூர்திமேற்
சங்கரற்கு வாமம்வைகு தையல்வெய்தி னெய்தினாள். (௫)

பரிபுரஞ்ச தங்கைபூண்ட பாடகங்கள் சூடகம்
விரிபசும்பொ னாரமாலை வெயிலெறிப்ப நித்திலம்

புரியுமாலை நிலவுகப் புனைந்தசெய்ய பூந்துகில்
விரவுமாலை மாலைமான வேதம்வண்டு பாடவே. (சு)

பரிசைவாள்வில் சூலமம்பு பாசமங்கு சம்புலால்
விரிகபால மங்கைதாங்கி மின்னெழுந்த தாயெனத்
தருவினீழன் மேவுதேவர் சாரதங்கள் சூழ்தரக்
கருணைவாரி விழிகொழித்த கவுரிதோன்றல் காண்டலும். (எ)

இயங்குபூத மசரமான யாவையும் படைத்துளாய்
தயங்குசோதி பாதிமேனி தங்குஞான மங்கையே
மயங்குமெங் களைக்கொலச் சினத்ததிந்த வாரணம்
பயங்கெடுத்து நல்கெனப் பருப்பதங்கள் பரவலும். (அ)

பூதரங்க ளஞ்சலென்று புன்னிலாவெண் முறுவல்பூத்
தாதரம் புரிந்துபோற்று மசலமூன்று முன்புசெய்
காதரந்தி ரண்டுருத்த கரிதுயர்க் கடுந்தழன்
மீதரங்க வடிபிணிப்ப வெய்யபாசம் வீசினாள். (கூ)

வார்முலைப் பவானிதாள் வழுத்துபூசை செய்வதற்
கார்கலித் தடத்துமூழ்கி வருதல்போல வாதவ
னீரிடைக் கரந்திருண்ட நிசியறுத் துதித்தனன்
காரிருட்கை மாவிசித்த கட்டினோடு நின்றதால். (கo)

## வேறு.

மற்றை நாணவ ராத்திரி மூதற்றினம் வரலா
லற்றை நாண்முத லமலையை யருச்சிக்க வேண்டிக்
கொற்ற விந்திரன் முதலிய தேவருங் குருவுங்
கற்ற மாதவ முனிவருங் கலந்துவந் தனரால். (கக)

ஆர ணத்தடம் படிந்தெழுந் தஞ்செழுத் தோதிக்
கார ணத்தமுக் களவையுந் தொழுதுளங் களித்து
வார ணத்துரி படைத்தவ னிடத்தினில் வைகும்
பூர ணத்திரி புரைதிரு வுருக்கண்டு புகழ்ந்தார். (கஉ)

புகழ்ந்து பேதைமை பொருந்தினோம் பூசனை புரிய
மகிழ்ந்து நீயருள் புரியென வடிக்கடி வணங்க
விகந்த ஹைத்திடப் பரந்தமைத் தவ்விசைந் தருள
மகந்த ஹைத்தவ னேக்கின னைந்தரு வனத்தை. (கஙு)

கவுரி பூசைக்குத் தகுமுப கரணங்கள் முழுதும்
புவிநி ரம்பவுண் டாக்குக கடிதெனப்பு கன்று
னவைவ குத்தபின் மகிழ்ந்தயி ராணிதன் னோடு
நவதி னத்தினும் விதிப்படி பூசித்து நயந்தான். (௧௪)

இந்த வண்ணமற் றிமையவ ரிருடிகள் வரைகள்
சந்த தம்பயில் பூசனை தனித்தனி புரிந்து
சிந்தை யின்புறத் தசமியில் வந்தனை செய்தா
ரந்த நன்னெறிப் பூசனைக் ககமகிழ்ந் தருளி. (௧௫)

மூரி வெஞ்சினக் கோளரி மேற்கொண்டு முகந்த
காரி சைந்திடா மதியென வெண்குடை கவிப்ப
வேரி யங்குழ லரம்பையர் சாமரை வீசத்
தூரி யம்பல வெழுகட லொலியெனத் துவைப்ப.(௧௬)

பொன்னி னீணக ராசனுஞ் சுரருமுன் போல
மின்னி னீள்சடை முனிவருங் கணங்களும் விரவச்
சென்னி நீடுமுச் சிலம்பினந் தொழுதுபின் செல்ல
வன்னி நீழலி லெழுந்தரு ளினண்மட மயில்போல். ()

மாறி லாப்புகழ்ப் புரந்தரன் கொணர்ந்துமுன் வைத்த
வாறி னேடிரு கோளரி தரித்தவா தனத்திற்
கூறு மாமொழிக் கரும்பயி ராணிகை கொடுப்ப
வேறி னாளொரு கோளரி முதுகுவிட் டிறங்கி. (௧௮)

மட்டில் பாதகந் தானுருக் கொண்டகைம் மலையைக்
கட்டு பாசத்தை விடுத்தனள் விடுப்பவக் களிறு
விட்ட பேரொலிக் கஞ்சின கணங்களும் விண்ணோர்
பட்டு ளோரெனச் சோர்ந்தன ருளம்பதை பதைப்ப. ()

ஆங்க வானையி னாற்றலு மமரர்வீழ்ந் தஞ்சித்
தாங்கு ருத்துயர் தரித்தலு நோக்கியத் தையல்
பூங்க ரும்புமுத் திமைத்தெனக் குறுநகை பூத்து
வாங்க வாங்கினாள் வரிசிலை யம்பொன்று வாங்கி. (௨௦)

திருவி ருப்புற வொருமயி லிருந்தெனச் சிவந்த
வொருதி ருப்பத முடக்கிமற் றொருபத நிறுத்திப்
புருவ விற்கடை குழைத்துவிஞ் ஞானமாம் புங்கம்
வெருவ வாருயி ருண்கெனக் கரிமிசை விடுத்தாள்.(௨௧)

மூரி விட்டுவா லுயர்த்துமெய்ம் முடங்குளை சிலிர்த்துக்
கூரு கிர்க்கணம் விரித்துநாற் காலடிக் கொண்டு
காரி ருட்கரி நோக்கியங் காப்பது கண்டு
வீர மாக்கறை யுண்கெனச் சீயத்தை விடுத்தாள். (உஉ)

விட்ட வாளியு மாளியுந் துளைத்துமெய் பிளப்ப
வட்ட திக்கயங் குலைந்திடக் கையெடுத் தலறிப் [ப்
பெட்ட வாருயிர் சோர்ந்திடக் கால்கண்மேற் பெயர்த்து
பட்ட தக்கரி கிரியெனக் கிடந்ததப் படிவம். (உங)

வேறு.

கைம்மலை விழுந்த காலைக் கழுமலை யொழித்தா னந்தப்
பொம்மலை யடைந்து வானோர் பூமழை பொழிந்து சூழ்ந்தார்
மும்மலை யுள்ளம் போர்த்த முழுமலை வகலச் சோரும்
விம்மலை யகற்றி ஞான விமலையைத் துதித்த மாதோ. (உச)

துதித்தலு முறுவல் பூத்துச் சொல்லுவா ளொன்பா னுளும்
விதிப்படி நீங்க ளிங்கு விழைந்தவிப் பூசை யுள்ளம்
பதித்துல கத்தோர் செய்தாற் பரமன்னர் பணிந்து போற்ற
மதிக்குடை நிழற்ற முந்நீர் வைப்பெலாம் புரந்து வாழ்வார். ()

வெயில்விரி கணைபாய் வாவி விஞ்ஞான தீர்த்த மாகுஞ்
செயிரறு மரிபாய் வாவி செழித்தபேர் சிங்க தீர்த்தம்
பயினுமித் தடங்க ளாடிற் பழவினை பாற்று மென்ன
வயிரவாட் குரிசிற் கந்நாண் மலையரு ளமலை சொன்னாள். ()

மேதகு தேவர் கோமான் வெற்பினந் துறவோர் வாளி
பாதலம் புகுந்து கங்கை படிந்தெழுந் தடமு மாளி
காதிய வேகத் தாலே கவர்படுந் தடமு மாடித்
தீதினை யொழிக்கு ஞானச் செல்வியை வணக்கஞ் செய்தார்.

மின்னிடை கடைக்க ணோக்க விடைகொண்டு பணிந்து சென்
றென்னளி முரலு மூன்று திருக்களா வனஞ்சூழ்ந் தேத்தி[று
நன்னயம் வரைகட் கோதி நான்மருப் பிபமேற் கொண்டு
பொன்னகர் தன்னை நோக்கி யிமையவர் சூழப் போனான். ()

புரந்தரன் போய பின்னர்ப் பொருப்பின மூன்றுங் கேட்ப
நிரந்தர மாகி நின்று ணிறைந்ததத் துவத்தின் கூறு
மரந்தைதீர் விராட்டு காதை யானது முறைப்பக் கேட்டு
வரம்பிலா மகிழ்ச்சி பூத்து வரைகள்பின் மறித்துங் கூறும். ()

தற்பர மான தாயே தாபர மான நாங்கள்
சிற்பரப் பொருளின் பூசை தினம்வழு வாது செய்தே
யற்புத மான மேன்மை யடைவதெவ் வாறு நீரிற்
புற்புத மாகித் தோன்றும் புன்பிறப் பொழிய வென்ன. (௩௰)

இப்படி நீங்க ளிங்குத் தவம் புரிந் திருக்குங் கால
மைப்படி களத்து நாதன் மாகமா தத்தி லெய்துஞ்
செப்பரும் பதினுன் கான சிவநிசி நள்ளி ராவி
லொப்பருங் காட்சி நல்கி மன்னரா யுதிக்கச் செய்வான். (௩௧)

பாண்டியன் சோழன் சேர னாகிநீர் படியை யோங்க
வாண்டபின் மைந்த ராஞோர்க் கணிமணி மகுடஞ் சூட்டித்
தாண்டவஞ் சதிக்கொத் தாடுஞ் சரணிணைப் பெறுவீ ரென்னப்
பூண்டபே ரன்பு பொங்கப் பொற்கொடி புகன்று போனாள். ()

சங்கரி போய பின்னர்ச் சங்கரி காண வொண்ணு
வெங்கரி யுரியான் மூன்று வெற்பின்முன் மூக்க ளாவாம்
பொங்கரி னின்றுந் தோன்றப் போற்றிசெய் தாச ரான [ன்.
விங்கரி திதுபோன் மேன்மை யெனத்தெளி சூதன் சொன்னு

வெற்பினங் கேட்பத் தேவி விளம்பிய விராட்டு காதை
முற்பட மொழிந்தா யன்னே மொழிந்ததத் துவத்தின் கூறு
மற்புத வரைகள் பேறும் விரித்துரைத் தருள்வா யென்னப்
பற்பல முனிவர் கேட்பப் பாங்குறச் சூதன் சொல்வான். (௩௪)

பத்தாவது: தேவிதோன்றிய சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (உ௧௮)

---

## பத்தாவது தேவி தோன்றியசருக்கச் சுருக்கவசனம்.

மலைகளும், கடல்களும், ஆகாயமும், இயமனும், வடவாமுகாக்கினியும் ஆகிய எல்லாப்பொருள்களும் பயப்படும்படி ஆலகால விடம் போலக் கொதித்தெழுந்து ஒருமாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு நீல் மேருமலைபோல வந்த பாவமாகிய கரிய யானையைக்கண்டு பொதியம், சையம், தருத்தரம் என்னும் மூன்றுமலைகளும் நடுநடுங்கி விநாயகக் கடவுளுத்தரவுப்படி உமாதேவியாரைப் பிரார்த்தித்தலும், உடனே உமாதேவியாரெழுந்தருளத் தரிசித்து மலைகள் மூன்றும் எங்களுடைய பாவமாகிய யானையைக் கொன்றருளவேண்டுமென்

று விண்ணப்பஞ்செய்யத் திருவருள்சுரந்து உமாதேவியார் தமது திருக்கரத்திலுள்ள பாசத்தை வீசுதலும், அந்தப்பாசம் பாவமாகிய யானையைக் கட்டிக்கொண்டுவந்து நிறுத்தியது. இத்தினத்துக்கு அடுத்த தினமானது நவராத்திரி முதற்றினம் ஆதலால், இந்திரன் முதலாகிய சகலதேவர்களும் வந்து வேததீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து மூக்களாமூலிலெழுந்தருளிய வயிராசலிங்கத்தைத் தரிசித்து உமாதேவியாரை ஒன்பது இராத்திரியும் பூசித்துத் தசமியிலே வந்தனஞ்செய்து தோத்திரஞ்செய்தார்கள். இதுகண்ட மலைகள் மூன்றும் இந்தப்படியே பூசைசெய்து தோத்திரஞ்செய்தன. அந்தப் பூசையை யுவந்து உமாதேவியார் வன்னிவிருக்ஷத்தி னீழலில் இந்திரன் கொடுத்த சிம்மாதனத்திலெழுந்தருளிப் பின்பு வில்லைவளைத்து விஞ்ஞானமாகிய பாணத்தையும், வாகனமாகிய சிங்கத்தையும், பாசத்தாற் கட்டிவைத்த யானையைக்கொன்று வரும்படி யனுப்ப, அந்தப்பாணமும் சிங்கமுஞ்சென்று யானையைக்கொன்று கீழேவிழச்செய்தன. அதுகண்ட இந்திரன் முதலானவர்களும் மலைகள் மூன்றும் உமாதேவியைத் தோத்திரஞ் செய்தார்கள். விதிப்படி இந்த நவராத்திரிப் பூசையை யார்செய்தாலும் பகையரசர்கள் வணங்க உலகமெங்கும் அரசாட்சிசெய்வார்கள். இதுவல்லாமல் விஞ்ஞான பாணம் பாய்ந்த இடத்திலுண்டாகிய விஞ்ஞான தீர்த்தத்திலும் சிங்கம்பாய்ந்த இடத்திலுண்டாகிய சிங்கதீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்தவர்கள் பாவங்களையெல்லாம் நீங்குவரென்று அவரவர்களுக்கு வேண்டிய வரங்களைக்கொடுத்து மூன்றுமலைகளையுநோக்கித் தத்துவப் பொருளையுபதேசித்து நீங்கள் இவ்விடத்துத் தவஞ்செய்துகொண்டிருந்தால் மாசிமாதச் சிவராத்திரியிலே சிவபெருமான் தரிசனங் கொடுத்து உங்களைப் பாண்டியன், சோழன், சேரன் என்னும் மூன்று அரசர்களாகப் பிறக்கும் வரந்தந்தருளுவர், அப்படிப்பிறந்து பின்பு நெடுங்காலஞ்சென்று மோக்ஷத்தை யடைவீர்களென்று திருவாய்மலர்ந்து உமாதேவியார் மறைந்தருளினார் என்று சூதமுனிவர்சொல்ல நைமிசாரணிய முனிவர்கள் வணங்கி அவ்வுமாதேவியார் வரைகள் மூன்றுக்கும் உபதேசித்த தத்துவப்பொருளும் அவ்வரைகள் பெற்ற பெரும்பேற்றையுஞ் சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

# பதினொராவது: தத்துவவுபதேசச் சருக்கம்.

பதிபசு பாச மென்னப் பகர்பொருண் மூன்ற நாதி
யிதமுறு பதியா தென்னிற் சிவனவ னேக னுகுஞ்
சதமுறு பசுவ நேகஞ் சாற்றுங்கால் வர்க்க மூன்றா
மதமுறு பாச மைந்து வகைபெற்று வழங்கு மாகோ. (க)

பரமனுர் தொழிலோ ரைந்து படைத்தல் காத்திட லழித்த
திரமுற மறைத்தன் மற்றை யருளெனச் செப்ப லாகும்
விரவிய பசுமூ வர்க்கம் விஞ்ஞான கலரா யேனைப்
பிரளயா கலரென் றூகிச் சகலராய்ப் பிரியு மன்றே. (உ)

ஆணவ மொன்றே யுள்ளா ராணவ கன்ம முள்ளா
ராணவ கன்ம மாயை யடைந்துள ராவ ரன்னே
ராணவ ரிருவர் தீர்ந்த துகளின ரானு ரந்த
வாணவ மான தீராத் துகளின ராவ ரன்றே. (ந)

முந்தின ரான தீர்ந்த துகளினர் முத்தி சேர்ந்தார்
பிந்தின ரான தீராத் துகளினர் பெற்றி கூறிற்
றந்திர வட்ட வித்தி யேசுரர் சத்த கோடி
மந்திர மாகி யேனோர் பாசத்தை மாற்று வாரால். (ச)

பிரளயா கலரென் றேனோர் பேசுபக் குவரு மாகி
வருமபக் குவரு மாவர் பக்குவ மாக வாய்ந்தோர்
பரமனங் கருளி னாலே பார்வையாந் தீக்கை செய்ய
விரவியபாச பந்த நீக்கியே வீடுற் றாரால். (ரு)

ஏனையர் ககன வீச ராதிய ரெண்மர் மற்ற
வூனமில் குரோத ராதி யெண்மர்நூ றுருத்தி ரேசர்
மேன்மைசேர் சிகண் டேசன் வீரபத் திரனென் றோதும்
பான்மைய ரான நூற்றுப் பதினெண்ம ராவ ரன்றே. (சா)

சகலர்தா மமர ராதி யெனும்பேருச் சாற்ற லாகு,
மகமில்பக் குவரு மற்ற வபக்குவத் தாரு மாவர்,
பகர்செய்பக் குவரைத் தீக்கை பண்ணியே வீட்டிற் சேர்ப்பார்
தொகுமபக் குவருங் கன்மந் துலையொத்தால் வீடு சேர்வர்.()

அறைதரு பாச நான்கா மாணவ மாயை கன்ம
மறைதிரோ பவமென் றாகு மற்றவப் பாச நான்கு

நிறையுயிர்ப் பந்த மாகு நிருமல வியாபி யாகி
யுறைபர னருளி னூலே சிவமென்ப துதிக்கு மாதோ. (அ)

சத்தியச் சிவத்திற் றோன்று மதிற்சதா சிவமுண் டாகு
மெய்த்தவீ சுரமாங் கெய்தும் வித்தையீ சுரத்திற் றோன்றுஞ்
சுத்ததத் துவமிவ் வைந்து மினிச்சுத்தா சுத்தங் கூறி
லத்திற நியதி காலங் கலைவித்தை யராக மைந்தாம். (கூ)

நீங்கரு மாயை தன்னிற் காலமு நியதி தானு
மோங்கிய கலையு முண்டாங் கலையினி லுதிக்கும் வித்தை
பாங்குறு வித்தை தன்னிற் பரிந்தெழு மராக முன்ன
ராங்கெழுங் கால மூன்று யிறப்பெதிர் நிகழ்வென் றுமால். ()

ஐந்தையும் பொருந்தி நின்றே யான்மாக்க ளளவில் போகம்
புந்தியி னுகருங் காலைப் புருடதத் துவமென் றுகும்
வந்தவிப் புருடனோடு மாயையுங் கூட்ட வேழாஞ்
சிந்தைதேர்ந் தசுத்த மான தத்துவச் செய்தி சொல்வாம். ()

கலைபினில் வித்தை தோன்றுங் கதித்திடு வித்தை தன்னி
னிலவுமுக் குணங்க டோன்று மக்குண நிகழ்த்துங் காலை
யிலகுசாத் துவிக மற்றை யிராசதந் தாம தப்பேர்
சுலவுமவ் வியத்திற் சித்தம் புத்தியுந் தோன்று மன்றே. (கஉ)

புத்தியி னின்றுந் தோன்று மாங்கார மொருவின் மூன்று
மத்திற நாடுங் காற்பூ தாதிவை காரி யாகி
யொத்ததை சதமு மாகு முரைத்ததை சதத்தி னின்று
மெத்திய மனமு ஞானேந் திரியமும் விளங்கித் தோன்றும். ()

வாய்ந்தவை காரி யத்தில் வருங்கன்மேந் திரிய மைந்து
மேய்ந்தபூ தாதி தன்னி லெழுந்தன்மாத் திரைக ளைந்து
மாய்ந்தபூ தங்க டன்மாத் திரைகளி லடைவே தோற்றும்
போந்தவெண் மூன்று மேலோ ரசுத்தமாப் புகல்வ ரன்றே. ()

வெளிகுணஞ் சத்த மொன்று மிகுஞ்சத்த பரிச மெய்தும்
வளிசத்த பரிச மற்றை வடிவுறும் வன்னி நன்னீர்க்
குளசத்த பரிச மேனி யிரதமும் புவிக்குண் டாகுங்
கிளைசத்த பரிச ரூபங் கேடிலா விரதங் கந்தம். (கரு)

தத்துவ முப்பத் தாறுந் தனித்தனி வந்து தோற்று
மத்திறத் தொடுங்கு மிந்த வடைவினிற் சிருட்டி செய்தே

யெத்திறத் தான்மா வுக்கு மின்பொடு துன்ப மூட்டி
நித்தியம் பாச பந்த நீக்கிவீ டருளிச் செய்வான். (கசா)

விளைதரு ஞான மாகிற் சிவமா மெய்ஞ் ஞானத் தோடு
கிளைதரு கிரியை யொத்தாற் சதாசிவங் கிரியை யேறி
வளரிலீ சுரமா ஞானம் வாய்த்தேறில் வித்தை யாகு
மளவறு மிலய போக வதிகார மமல னெய்தும். (களஎ)

நிறைசத்தி யிச்சா ஞானக் கிரியையை நிகழ்த்தி நல்க
விறையுற்று நின்று மாயை யென்பதைக் கலக்கி யாங்கே
நிறைதனு கரணத் தோடு நிலைபெற்ற புவன போகஞ்
செறிவுறத் தோற்று வித்தான் மாக்களைச் சேர்விப் பானல். ()

இப்படி சிருட்டி தோறுந் தோற்றுவித் தொடுக்கி யேந்துங்
கைப்படி சூலத் தண்ணல் கடைநாளிற் றனே நிற்கு
மப்படி நிகழுந் தன்மை யறிந்தவா றுரைத்தே மிப்பான்
மெய்ப்படி வரைகள் பெற்ற பேறெலாம் விளம்ப லுற்றும். ()

பதினொராவது தத்துவ வுபதேசச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (உருஎ.)

---

### பதினோராவது தத்துவவுபதேசச்சருக்கச் சுருக்கவசனம்.

பதி, பசு, பாசம் என்று சொல்லப்படும் மூன்று பொருள்களும்-அநாதியேயுள்ளன. அவற்றுள், பதி-சிவபெருமா னொருவரே. பசு-எண்ணிறந்த கோடியாம், ஆயினும் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூன்று வகைக்குள்ளே யடங்கிநிற்கும். பாசம் ஐந்து வகைப்பட்டு விளங்காநிற்கும். இனி, பதியாகிய சிவபெருமான் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னு மிவ்வைந்து தொழில்களையுஞ் செய்யாநிற்பர். மேல் விஞ்ஞானகலரெனப்படுவார்-ஆணவமல மொன்றே யுள்ளவர். பிரளயாகலரெனப்படுவார்-ஆணவமும் கன்மமுமாகிய இரண்டு மலமுள்ளவர். சகலரெனப்படுவார் - ஆணவமும், கன்மமும், மாயையுமாகிய மூன்றுமலங்களையுடையவர். இம்மூவகையாருள் ஆணவமல மொன்றுடைய விஞ்ஞானகலர் - ஆணவமலம் நீங்கினவரென்றும், அது நீங்காதவரென்றும் இரண்டுவகைப்படுவர். இவ்விருவருள் ஆணவமலம் நீங்கினவரே மோக்ஷமடைந்தவர் ; அவ்வாணவமலம் நீங்காதவர்-அட்டவித்தி

யேசுரர். அவர்-சத்தகோடி மந்திரசொரூபியராய்நின்ற பிரளயாகலர து பாசத்தைக் கெடுத்தனுவர்-பிரளயாகலர் பக்குவரென்றும் அபக்குவரென்றும் இருதிறத்தினராவர்; இவருள் பக்குவராவார் - பரமேசுரனுலே நயன தீக்ஷை செய்யப்பெற்று மேற்கூறிய இரண்டுமல சம்பந்தத்தையும் நீக்கி மோக்ஷம் அடைந்தவரே. அபக்குவராவார்-ககனேசராதி எண்மரும், குரோதராதி எண்மரும், உருத்திரேசர் நூற்றுவரும், சீகண்டேசரும், வீரபத்திரரும் ஆகிய நூற்றுப்பதினெண்மருமே. சகலராவார் - தேவர்கள் முதல் எறும்பு இறுதியாகச்சொல்லப்பட்டவர்களாம்: இவருள்ளும் பக்குவரும் அபக்குவரும் என இரண்டு பிரிவுண்டு. பக்குவர்களெல்லாந் தீக்ஷை செய்யப்பட்டு மோக்ஷத்தையடைவார்கள். அபக்குவரும் இருவினையொப்பு வந்தவிடத்து அங்ஙனம் மோக்ஷத்தை யடைவார்கள். முன் சொல்லப்பட்ட பாசம் ஐந்தனுள் ஆணவம், மாயை, கன்மம், திரோபவம் எனப்படும் நான்கும் உயிர்களைப் பந்தப்படுத்தி நிற்கும்.

இனி, தத்துவங்கள் வருமாறு: நிருமல வியாபியாகிய சிவபிரானருளினாலே சிவதத்துவந்தோன்றும், அதிலே சத்தி தத்துவந்தோன்றும், அதிலே சதாசிவ தத்துவந்தோன்றும், அதிலே ஈசுர தத்துவந்தோன்றும், அதிலே வித்தை தத்துவந்தோன்றும். இந்த ஐந்தும் சுத்ததத்துவமென்று பெயர் பெறும். இதுபோலவே சுத்தாசுத்த தத்துவமும் ஐந்தாம். அவையாவன- நியதி, காலம், கலை, வித்தை, அராகம் என்பனவாம். இவ்வைந்தனுள் காலமும், நியதியும், கலையும், மாயையினின்றுந் தோன்றும். கலையினின்று வித்தையும், வித்தையினின்று அராகமுந்தோன்றும். இவைகளுள் காலம் - இறப்பு, எதிர்வு நிகழ்வு, என மூவகைப்படும். இந்தச் சுத்தாசுத்த தத்துவம் ஐந்தையுஞ் சேர்ந்து ஆன்மாக்கள் அளவில்லாத போகத்தை யநுபவிக்கும்போது புருட தத்துவந்தோன்றும். (அதாவது ஒருமலம்) அப்பெயர் ஆன்மாவையே யடையும்; அதனோடு மாயையுங்கூட்டச் சுத்தாசுத்ததத்துவங்கள் ஏழு வகைப்படும். இனி அசுத்த தத்துவந் தோன்றுமாறு - கலையினின்றுந் தோன்றும்வித்தையினில் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்கள் தோன்றும். அவ்வியத்திலே- சித்தமும், புத்தியுந்தோன்றும். புத்தியிலே ஆங்காரந் தோன்றும்; அது பூதாதி, வைகாரி, தைசதம் என மூன்றுவகைப்படும். அவற்றுள் தைசதத்திலே மனமும், ஞானேந்திரியம் ஐந்துந் தோன்றும். வைகாரியிலே கன்மேந்திரியம் ஐந்துந் தோன்றும்.

பூதாதியிலே தன் மாத்திரைகள் ஐந்துந்தோன்றும். தன் மாத்திரைகள் ஐந்திலும் பஞ்சபூதங்களும் முறையே பிறக்கும். இம்முறையாக அசுத்த தத்துவம் இருபத்துநான்கு வகைப்படும். அவற்றுள் ஆகாயத்தின்குணம் சத்தமாம். வாயுவின் குணம் சத்தமும் பரிசமுமாம். தேயுவின்குணம் சத்தமும் பரிசமும் உருவமுமாம். அப்புவின் குணம் சத்தமும், பரிசமும், உருவமும், இரதமுமாம். பிருதிவியின் குணம் சத்தமும், பரிசமும், உருவமும், இரதமும் கந்தமுமாம். இவ்வாறே தத்துவங்கள் முப்பத்தாறுந்தோன்றி யொடுங்கு முறைப்படியே சிருட்டிசெய்து சருவான்மாக்களுக்கும் இன்பத்தையுந் துன்பத்தையு மூட்டுவித்துப் பந்தபாசத்தைப் பருவங்கண்டு போக்கி மோக்ஷத்தைச் சிவபிரானே யருளிச்செய்வர். ஞானமதிகரிக்குமிடத்துச் சிவதத்துவந்தோன்றும். ஞானத்தோடு கிரியை சமப்பட்டு நின்றால் சதாசிவ தத்துவந்தோன்றும். இந்த இரண்டினிலே கிரியை அதிகப்பட்டுநின்றால் ஈசுர தத்துவந்தோன்றும். ஞானமதிகப்பட்டு நின்றால் வித்தியாதத்துவந்தோன்றும். இந்தத் தத்துவங்கள் சிவபிரானுக்கு இலயபோக அதிகாரங்க ளடைதற்கு நிமித்த காரணமாயிருக்கும். இப்படி யதிகாரங்களடைந்த சிவபிரான் இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தியைச்சேர்ந்து நின்று மாயையைக் கலக்கும்படி செய்து அதினின்றுந் தநுகரண புவன போகங்களை யுண்டுபண்ணி அவைகளை யான்மாக்களடையும்படிசெய்து யுகாந்த காலத்திலே யெல்லாவற்றையு முண்டாக்கியவாறே யொடுக்கித் தாமொருவரே மிருந்து நிற்பர். இவ்விதம் நடந்துவருமியற்கையை யறிந்தவாறு முனிவர்களே! யுங்களுக்குச் சொன்னோம். இனி மலைகள் மூன்றும் வரம்பெற்ற கதையினைச் சொல்லுவோமென்று சூதமுனிவர் அருளிச்செய்தனர்.



## பன்னிரண்டாவது: வரைகள்வரம் பெற்றசருக்கம்.

வெண்டாள நந்துலவு வேதமடு வாரத்
துண்டியை வெறுத்திக லுறும்புல னொடுக்கித்
துண்டமதி கொன்றைநதி சூடிபத நாடி
விண்டுவொரு மூன்றுமுயர் மெய்த்தவ மியற்ற. (க)

நேரிய பிரான்சிவ கிசிக்கணெதி ராகச்
சூரியர்கள் கோடிதொகு சோதியுரு வாகித்
தாரணி தழைப்பவொரு தம்பமென நின்றான்
கார்வரைகண் மூன்றுமெதிர் கண்டதி சயிப்ப. (உ)

இங்கித விபஞ்சிபல கின்னர ரிசைப்பத்
துங்கவிடி போலவெதிர் துந்துபி முழங்க
வங்கைபுனை கங்கண வணிக்குழைகண் மின்னப்
புங்கவ ருவந்துசொரி பூமழை தழைப்ப. (ஙு)

ஆதரவு பத்தியறி வானவழி யாலே
கோதையொரு பாகனெளிர் கோலமெதிர் நோக்கிப்
பூதல மிசைத்தொழு பொலங்கிரிகள் சென்னி
மீதுகரம் வைத்துமெய் விதிர்ப்பொடு விளம்பும். (சு)

எவ்வுலகு மெவ்வுயிரு மெப்பொருளு நீயா
யவ்வகை புறம்புபட வப்புற முறைந்தாய்
வெவ்வினை யெமக்கொழிய வந்துவெளி நின்றாய்
திவ்விய வனுக்கிரக சித்தியினி துற்றோம். (ரு)

கன்றுமதி கொன்றைநதி கட்செவி கரந்தை
துன்றுசடை கொண்டமுடி சூடிநிறை சோதி
யின்றெமை யுனக்கடிமை யென்னவரு ளென்ன
வொன்றிய சதாசிவ வுருத்தனி யெடுத்தான். (சா)

நிட்கள வுருக்கொடெதிர் நின்றபர நாதன்
கட்கினிய தாஞ்சகள மேனியெதிர் காட்டி
யுட்கருணை செய்ததனை யும்பரி லறிந்தே
யெட்கிடை கிடப்பரி தெனச்சுர ரடைந்தார். (எ)

வேறு.

தூயார் பரவச் சுடரெறிக்கு மைம்முகமுஞ்
சேயார் படிவத் திருவழகுங் காண்டலுமே
வேயார் வரைகள் விழிகுளிர்ந்து நீர்சொரிய
வாயார வண்ணல்புகழ் வாய்ப்பநின்று வாழ்த்தினவே. ()

நாதா நடனு நதியாய் மதிதேய்த்த
பாதா பரமா பரமானந் தாவிமலா
வேதா விபுதா விடையா விடையமுறாப்
போதா வடியேம் புகலாய் புகப்புகலே. (அ)

புள்ளி மறியைப் பொறிப்புலியைப் போர்க்களிற்றை
யெள்ளிக் கரத்தி லெடுத்துரித்த வெம்பெருமா
னள்ளிக் கடுத்திரட்டி யங்காட் களத்தமைத்த
தெள்ளியோ யுன்னைத் தெளிவோர் சிறந்தோரே. (க0)

மாலனுக்குந் தீப்பிறவி வாரிகடந் தேறுதற்கு
வேலனுக்கு மாகரிக்கும் வீரனுக்குந் தாதையென்பாய்
பாலனுக்குப் பாலளித்தாய் பாலகனைப் பற்றவருங்
காலனுக்குக் கூலாநின் காலே கலனுமே. (கக)

அஞ்சுதலை நேர்துளவோன் சூலத் தலைகிடப்ப
வஞ்சுதலை யெய்தவிதி யஞ்சுதலைக் கொன்றொழித்தாய்
மஞ்சுதலை யேற்ற மணிக்கயிலை வெற்பிறைவா
வுஞ்சுதலை நின்றோ முயர்தலைமை பெற்றோமால். (கஉ)

கைக்களவு நாகக் கடகத் திருப்பணியாய்
மிக்களவு சீர்த்தி விராட்புருடன் முன்வணங்கு
மூக்களவு சூழ முளைத்த முழுச்சோதீ
பொக்களவு மெம்முட புகுந்தளித்த துன்னருளே. (கங)

என்ன மறைக ளெடுத்திசைத்து முச்சிலம்புந்
தன்ன திணைச்சிலம்புத் தாட்டா மரைதொழலு
முன்னினன்கை வில்லா மொருசிலம்ப னக்கணத்தின்
மன்னு விசும்பின் மயனுங்கு வந்தனனால். (கச)

வேறு.

மூன்றுமூன் றுகச் சிங்கா தனமணி முடிபூ ணாரந்
தோன்றுவெண் குடைபொன் னுடை சுலவுசா மரைக ளாதி
யேன்றதா மிராச சின்ன மென்பவுஞ் சிலைசாத் தூல
மீன்றிகழ் கொடியுஞ் செய்தான் விச்சுவ கனம னென்பான்.

நிதிவரைச் சிலையொன் றேந்து நின்மலன் கருணை பூத்து
மதியமண் டலத்தைச் சிங்கா தனத்தின்மேல் வைத்துவாய்ந்த
பொதியமன் னவனும் வண்ணம் பொன்முடி புனையச் செய்தா
னதிர்குரன் முருடு விண்ணின் ருர்த்ததா லசனிபோல. (கரு)

மற்றிரு வரைக்குஞ் செம்பொன் மணியணி மகுடஞ் சூட்டி
வெற்றிவே லரச ராக்கி வேந்தர்கண் மூன்று போர்க்கு
முற்றமே ரருளான் மேலாம் வரம்பல வுதவி யோங்கும்
புற்றர வணிந்தான் ஞான விலிங்கத்துண் மறைந்து புக்கான்.

வேறு.

மாது பாகனம் மதியமண் டலத்தின்மேல் வைத்து
மோது தென்றலங் கிரிக்கணி முடிபுனைந் திடலாற்
கோதில் சந்திர பாண்டிய னெனும்பெயர் கொண்டான்
றீதி லாவரந் தனித்தனி கொடுத்தனர் தேவர். (கஅ)

சோழன் சேரனென் றிருபெயர் கிழவினைச் சுழிக்கும்
வேழந் தாங்குமவ் வேந்தர்க ளிருவர்க்குஞ் சாத்தி
யாழம் பூண்டபா லாழிமா லாதியா டிமரர்
வாழுந் தங்கடம் புவனத்தி லெய்தினர் மாதோ. (கக)

அறிவி னோர்பிரி வொழிந்திடா நண்புகண் டறிந்த
விறல்கொள் சந்திர பாண்டிய னளவளாய் விடுப்பத்
திறல்கொள் சோழனுஞ் சேரனுந் தனித்தனி சென்று
மறுவி லாமனுப் படிகிலம் புரந்தனர் வாழ்ந்தார். (உ0)

ஈத ரோவரை யினம்வரம் பெற்றதென் றிசைத்தான்
மாத வோதனர் கேட்டுளந் தழைத்தனர் மகிழ்ந்தார்
கோதில் சந்திர பாண்டிய னரசியற் கொற்றஞ்
சூத மாமுனி சொல்லென வியப்பொடுஞ் சொன்னான்.

பன்னிரண்டாவது: வரைகள்வரம்பெற்ற சருக்கம்முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (உ௫அ)

---

**பன்னிரண்டாவது வரைகள் வரம்பெற்ற சருக்கச் சுருக்கவசனம்.**

வேததீர்த்தக் கரையின்கண்ணே மேற்கூறிய மலைகள் மூன்றும் ஆகாரநித்திரையை ஒழித்து ஐம்புலன்களையும் ஒடுக்கிப் பரமேஸ்வரனைநோக்கித் தவஞ்செய்துகொண் டிருக்குங்காலத்திலே சிவராத்திரி தினத்தில் கோடிசூரியர்கள் கூடினாற்போலும் ஒரு சோதியுருக்கொண்டு சிவபெருமானெதிரே தோன்றுதலும் மலைகள் மூன்றும் ஞானத்தினாலேயறிந்து சிரசிலே கைகுவித்து வணங்கி எல்லாவுயிருந் தானா யெங்குநிறைந்த முதற்பரம்பொருளே! எங்களையடிமைகொண்டருளுக என்று தியானிக்க நிட்களரூபியாகிய சிவபெருமான் சகளவுருவங்கொண்டு காட்சிதந்தருளத் தரிசித்துப் பற்பலவிதமாகத் தோத்திரஞ்செய்துகொண்டு மூன்றுமலைகளும் நிற்க பரமேசுரன் கருணைகூர்ந்து தேவதச்சனை வரவழைத்துப் பொன்னாலும் மணியாலும்

ஆதனம் கிரீடம் ஆபரணம் ஆடை குடை சாமரம் முதலானவைகள் வகைக்கு மும்மூன்று செய்துவரும்படி உத்தரவுசெய்து சந்திரமண்டலத்தைச் சிங்காதனத்தின்மேல்வைத்து அதன்மேல் பொதியமலையை அரசனுக்கியேற்றிச் சந்திரபாண்டியனென்னும் நாமம்புனைந்து கிரீடமுதலியவற்றையுந் தரித்துப் பின்பு சையமலையையும் ருத்தரமலையையும் சோழன் சேரன் என்னும் பெயரையுடைய இரண்டு அரசராக்கி மகுடமுதலாகிய வெல்லாம் அணிந்து வேண்டியவரங்களையுந் தந்தருளிப் பரமேசுரன் வயிராசவிங்கத்துள்ளே மறைந்திருந்தனர். அப்பால் மூன்று அரசர்களுந் தங்கள்தங்களுக்கு வரையறுக்கப்பட்ட நாட்டிலேசென்று அரசாட்சிசெய்திருந்தார்களென்று சூதமுனிவர்சொல்ல நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்கள் கேட்டு மகிழ்ச்சியடைந்து சந்திரபாண்டியன் அரசுசெய்த வெற்றித்தன்மையைச் சொல்லவேண்டுமென்று வினவச் சூதமுனிவர் சொல்லுவாராயினர்.



## பதின்மூன்ருவது: சந்திர பாண்டியச்சருக்கம்.



திரமு றுந்தவச் செல்வருக் கன்பொடும்
புரைத விர்த்தமெய்ச் சூதன் புகலுவான்
றரைபு ரந்தருள் சந்திர பாண்டியன்
விரவு மன்னர் பலரையும் வென்றபின். (க)

கற்ற மாந்தர் கருமத் தலைவரு
மற்ற நீக்கு மமைச்சரு மொற்றருஞ்
சுற்று சேனையுஞ் சோர்வறப் பெற்றரு
ளுற்ற மன்ன னுலகம் புரக்குநாள். (உ)

ஓகை மேவி யுலகிலுள் ளோரெலாந்
தாக நீங்கிநல் லின்பந் தழைத்தலான்
மோக மாம்பொருண் முற்றும் படைத்தலாற்
போக பூமியென் றுனவெப் பூமியும். (ங)

கோளி லாதுசெங் கோன்மனு நூல்வழி
நாளு மேழுல கத்து நடத்துவா
னீளும் வாய்மையி னீதி செலுத்தலாற்
றாளி யானது வெந்துயர்த் தோற்றமே. (ச)

அருத்தி யானுல காருயிர் யாவைக்கும்
வருத்த மாற்றி வறுமையை நீக்கலாற்
பரித்த வேதன் படைப்பதை நன்மையாற்
றிருத்து விக்குந் திசைமுக னுமினுன். (டு)

குவட்டி னேங்கு குவவுப் புயத்தினுன்
சவட்டும் வெம்பசி தானற மாற்றலா
லுவட்டெ டுப்ப வுலகத் துயிர்க்கெலாந்
தெவிட்ட வூட்டிய சீதா னுயினுன். (சு)

உரவு வேலை யுடைபெற்ற செல்விபால்
விரவி னேர்த மிரவினை வீட்டலாற்
பரியு மாழி வெயிலாற் படரிரு
ளிரவை மாற்று மிரவியென் ருயினுன். (எ)

பூட்டு மாசையிற் பூவுல கத்துளோர்
வாட்டு தீங்குசெய் யாவகை மாற்றியே
யூட்டு மின்பொழி யாக்கதி வீட்டினி
னுட்டு வித்தலா னல்லற மாயினுன். (அ)

பகவர் வேட்ட பரிமக மாதியா
மிகவும் பற்பல வேள்விகள் வேட்டலாற்
றகவு பூண்டவச் சந்திர பாண்டியன்
மகவு வேண்டி மகமொன் றியற்றினுன். (கூ)

அறந்த ழைக்கு மனைவ யிருவிலை
நிறந்த ழைப்பக் கருவி னிறைந்தரோ
பிறந்த பிள்ளைக்குப் பேரொழி ஞமமுஞ்
சிறந்த விக்ரம சிங்கனென் றேதினுன். (க0)

தறுகண் வெம்படைச் சந்திர பாண்டியன்
மறுவில் வெந்திறன் மைந்தனுக் கன்பினு
னெறியி னன்மணஞ் செய்ய நினைத்தரோ
வுறையு மந்திர சாலையி லுற்றனன். (கக)

மைந்த னுக்கு மணஞ்செய வேட்டன
னெந்த மன்னவன் கன்னி யியல்பெனச்
சிந்தை தேர்ந்த வமைச்சர்முன் செப்பினு
னந்த வேலையி லாங்கவர் கூறுவார். (கஉ)

வேறு.

பாத வமபணி பருப்பத மூடுநதி பறவை
யாதி யாகிமுன் விலக்கிய பெயரொழித் தனைத்துந்
தீதி லாவகை மங்கலந் தழைத்தபேர்ச் சிறப்பு
மாத போதனர் மகிழ்தரு மறுவிலா மரபும். (கங)

செம்பஞ் சூட்டுமுன் னியற்கையாய்ச் சிவந்தசீ றடியு
மம்பஞ் சேர்ந்தியை யனையநுண் மருங்குலு மான்மேற்
பம்பஞ் சாயு தனிகருரோ மாவலிப் பரப்புங்
கும்பஞ் சேர்த்தென்ப் பூரித்த பூண்முலைக் குவடும். (கச)

அயிலும் விம்பமுந் தாளபந் தியுங்குமி ழரும்பும்
பயிலு மம்புய வதனமுஞ் சைவலப் பரப்பும்
புயலு மன்றெனச் சுருண்டுநீண் டிருண்டபூங் குழலு
மயிலி னந்தொடர் சாயலும் பிடிநடை வனப்பும். (கரு)

நாண மாதிய நால்வகைக் குணங்களு நயமும்
பாணி லாமொழி மதுரமு மில்லறப் பகுப்பிற்
கோணி லாதெழு புத்தியுங் கொழுநன்மேற் கனிந்த
வேண வாவுமெக் காலமும் பிணியுறு மெய்யும். (கசு)

செழித்த செல்வமு மாயுளு மோங்கிய திருவைக்
கொழித்த வான்புகழ்க் கொற்றவர் குறிப்பது குறிப்பாம்
பழிப்பி லாதவிக் குணத்தினுள் கடற்கிறை பயந்த
மழைக்க ருங்குழற் கனகசுந் தரியெனும் வனிதை. (கஎ)

எனவ ணங்கினின் றமைச்சர்க ளியம்பலு மிறையோன்
மனமு வந்திது வருணனுக் குரைத்துநீர் வம்மி
னனக சுந்தர னாகிய மைந்தனுக் கந்தக்
கனக சுந்தரி தன்னையே வேட்பது கருமம். (கஅ)

போதி ரென்றன னுங்கவன் பாலவர் போந்து
காதல் கூர்மண முரைத்தலுங் கடற்கிறை களித்துக்
கோதி லாதவக் குமாற்குக் கன்னியைக் கொடுப்ப
வேது மாதவஞ் செய்தன மென்றன னிசைந்தான். ()

வாரி சாதிக்கு மன்னவ னிசைந்ததை வந்து
சோரி சாதன வேற்படைத் தென்னன்முன் சொன்னார்
வேரி சாதசந் தானமந் தாரமும் விரிந்த
பாரி சாதமும் பூத்தென வமைத்தனர் பந்தர். (உ0)

அருத்தி யாலுல காருயிர் யாவைக்கும்
வருத்த மாற்றி வறுமையை நீக்கலாற்
பரித்த வேதன் படைப்பதை நன்மையாற்
றிருத்து விக்குந் திசைமுக னாயினான். (ரு)

குவட்டி னேங்கு குவவுப் புயத்தினான்
சவட்டும் வெம்பசி தானற மாற்றலா
னுவட்டெ டுப்ப வுலகத் துயிர்க்கெலாந்
தெவிட்ட வூட்டிய சீதா னாயினான். (சா)

உரவு வேலை யுடைபெற்ற செல்விபால்
விரவி னோர்த மிரவினை வீட்டலாற்
பரியு மாழி வெயிலாற் படரிரு
ளிரவை மாற்று மிரவியென் றாயினான். (எ)

பூட்டு மாசையிற் பூவுல கத்துளோர்
வாட்டு தீங்குசெய் யாவகை மாற்றியே
யூட்டு மின்மொழி யாக்கதி வீட்டினி
னூட்டு வித்தலா னல்லற மாயினான். (அ)

பகவர் வேட்ட பரிமக மாதியா
மிகவும் பற்பல வேள்விகள் வேட்டலாற்
றகவு பூண்டவச் சந்திர பாண்டியன்
மகவு வேண்டி மகமொன் றியற்றினான். (கூ)

அறந்த ழைக்கு மனைவ யிருவிலை
நிறந்த ழைப்பக் கருவி னிறைந்தரோ
பிறந்த பிள்ளைக்குப் பேரெழி னமமுஞ்
சிறந்த விக்ரம சிங்கனென் றோதினான். (கo)

தறுகண் வெம்படைச் சந்திர பாண்டியன்
மறுவில் வெந்திறன் மைந்தனுக் கன்பினா
னெறியி னன்மணஞ் செய்ய நினைத்தரோ
வுறையு மந்திர சாலையி னுற்றனன். (கக)

மைந்த னுக்கு மணஞ்செய வேட்டன
மெந்த மன்னவன் கன்னி யியல்பெனச்
சிந்தை தேர்ந்த வமைச்சர்முன் செப்பினா
னந்த வேலையி லாங்கவர் கூறுவார். (கஉ)

கருதி றப்பனி வண்டொழுங் காமெனக் கறுத்துத்
திருவ யிற்றிடை நீலரோ மாவலி சிலிர்த்துப்
பெருவ னப்பொடு சோகமா முகக்களை பிறந்து
புரிமு றுக்குவிட் டலர்ந்தசெம் முருக்கிதழ் புலர்ந்து. (உகூ)

அருத்தி யாவயில் பாளிதஞ் சிற்றுண்டி யாகிக்
குருத்தெ ழுந்தபொற் குவடுபச் சிளங்கொடி யுறல்போற்
பருத்த கொங்கையு மருமமும் பசுநரம் போடி
விரித்த கேதகைப் போதென வுடலெலாம் விளர்த்து. (௩௦)

ஊச லாடலும் பொற்கழங் காடலு மொழிந்து
வாச மாமலர் கொய்தலும் பொய்தலு மறந்து
நேச மாமகிழ்ந் தையிரு திங்களு நிறைந்து
பாச நாடொறுந் தருந்திருப் புதல்வனைப் பயந்தாள். (௩௧)

அருண வெற்பெனத் திகழ்திரு முக்களா வமலன்
கருணை யிற்பெற லாற்கரு ணாகர னெனும்பேர்
பெருமை பெற்றவேந் துரைத்திடப் புனைந்துபே ராசுக்
குரிமை பெறறநூல் விஞ்சைகள் யாவையு முணர்ந்தான். ()

அந்த மைந்தனுங் கொருமக வளித்தன னவனோர்
மைந்த னல்கின னவன்செயும் விசையமும் வலியும்
வெந்தி றற்படை வீரமுங் கண்டுளம் வியந்து
சிந்தை யின்புற மனையொடுந் தவத்தின்மேற் செல்வான். (௩௩)

முடிக வித்திட மண்டப முறையினொன் றியற்றி
யிடிமு ழக்கெனப் பேரியந் தூரிய மிரைப்ப
நெடிய பொற்சடை முடிமுனி வரர்குழா நெருங்க
வடிம ணிப்பொலந் தவிசின்மேன் மைந்தனை யிருத்தி. (௩௪)

துங்க வேற்படைச் சந்திர பாண்டியன் சூட்டத்
திங்கள் வான்குலத் தோங்கிய மருவலர் சிங்கங்
கொங்கர் சோனகர் கோசலர் மாளுவர் குகுதர்
வங்க ராரியர் திறையிடத் தரித்தனன் மகுடம். (௩௫)

சேய்பு னைந்தனன் மகுடமென் றுள்ளத்திற் றிளைத்தா
னேய வான்புகழ்ச் சந்திர பாண்டிய னென்பான்
மேய நான்மறை மனுநெறி யிறைமுறை விளம்பிப்
போயி னூன்றவம் புரிந்தம்ம சிவகதி புகுந்தான். (௩௬)

உளங்க ளிந்துதன் பெயரினுற் சசிகுலத் துதித்தோன்
வளங்கொள் விக்ரம சிங்கமென் றொருநகர் வகுத்தான்
விளங்கு மங்நகர் சூழ்தரு நாட்டணி மேன்மை
துளங்கு றுகிலே யந்தணீ ரறிந்தவா சொல்வாம். (ருஎ)

பதின்மூன்றுவது: சந்திர பாண்டியச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (உகரு).

---

### பதின்மூன்றுவது சந்திரபாண்டியச் சருக்கச் சுருக்கவசனம்.

சந்திரபாண்டியனென்னும் அரசனுனவன் பகையரசர்களையெல்லாம் பொருதுவென்று பின்பு வித்துவான்களும் மந்திரிமாரும் சேனைத்தலைவர் முதலானவர்களும் தன்னைச் சூழ்ந்திருக்கச் செங்கோல்செலுத்தி உலகத்தை இரக்ஷித்துவருநாளிலே, அசுவமேதயாக முதலாகிய பற்பல யாகங்களைச்செய்தும் புத்திரனில்லாமையால் புத்திரகாமேட்டியாகத்தை விதிப்படிசெய்து முடித்து ஒரு சற்புத்திரனைப்பெற்ருன். அந்தப்புத்திரனுக்கு விக்கிரமசிங்கன் என்று நாமகரணமிட்டுச் சகலகலைகளுங் கற்பித்து வளர்த்துவரும்போது விவாகஞ்செய்யும்பருவம் விக்கிரமசிங்கனுக்கு வரவும்,சந்திரபாண்டியன் மந்திரிமார்களை வரவழைத்து ஆலோசித்து எல்லா நற்குண நற்செய்கைகளும் அமைந்த புத்திரி எந்த அரசனிடத்திருக்கின்ருள் என்று கேட்க மந்திரிமார் சிலர் சொல்லுவார் தேவரீர்கூறிய சகல இலக்கணமும் அமைந்த பெண்ணுனவள் வருணராசனிடத்திலிருக்கின்ருள்; அவள் பெயர் கனகசுந்தரியென்று சொல்ல அந்தப்பெண்ணை வருணராசனிடஞ்சென்று விக்கிரமசிங்கனுக்கு மணம்பேசிவாருங்களென்று அரசன்கூறினுன்; மந்திரிமாரும் வருணராசனிடஞ்சென்று தாங்கள்வந்தகாரியஞ்சொல்லிச் சம்மதிக்கும்படிசெய்து திரும்பிவந்து அரசனுக்குத் தெரிவித்தார்கள். உடனே பட்டணமுழுதும் அலங்காரஞ்செய்து ஒரு சுபமுகூர்த்தத்தைக்குறித்து அரசனிருந்தான். அந்த முகூர்த்தத்தைத்தெரிந்து வருணராசன் தன்புத்திரியாகிய கனகசுந்தரியைச் சகலதேவர்களுடனே அழைத்துக்கொண்டுவந்து விக்கிரமசிங்கனுக்குப் பாணிக்கிரகணஞ் செய்துகொடுத்து யானை தேர் பரி ஆடை ஆபரணம் முதலியவைகளும் வரிசையாகக்கொடுத்துத் தன்னிருப்பிடத்துக்குச்சென்ருன். பின்பு விக்கிரமசிங்க பாண்டியன் தன்மனைவி கனகசுந்தரியுடன் காமக்கடலின்மூழ்கிச் சிலநாள் கழித்தபின்னர்

புத்திரனைவேண்டி மூக்களாங்கிழலிலமர்ந்த சிவலிங்கப்பெருமானை யுபாசித்துத் திருவருளால் ஒரு புத்திரனைப்பெற்றான். அப்புத்திரன் சிவபெருமான் கருணையினாலே பிறந்தபடியால் கருணாகரபாண்டிய னென்னும் நாமகரணமிடப்பெற்று வளர்ந்து அரசர்களுக்குரிய வில் வித்தை முதலிய நூல்களெல்லாங்கற்று விவாகஞ்செய்து சிலநாள் சென்றபின் ஒரு புத்திரனைப்பெற்றான். அப்புத்திரனும் அவ்வாறே ஒரு புத்திரனைப்பெற்றான் பின்பு விக்கிரமசிங்கபாண்டியனுக்குச் சந் திரபாண்டியன் முடிதரித்துச் செங்கோல்கொடுத்து அரசநீதியைப் போதித்துவிட்டுத் தவஞ்செய்து சிவபதமடைந்தான். அதன்மேல் விக்கிரமசிங்கபாண்டியன் தன்பெயரினால் விக்கிரமசிங்கபுரம் என் றொரு நகரம் உண்டுபண்ணி அதிலே அரசாட்சிசெய்திருந்தான்.



## பதினான்காவது: நாட்டுச்சருக்கம்.



மருவு லாக்குழன் மாதுமை வளைமுலைத் தழும்பா
முருவு லாத்திரு வுருவினான் றிருச்செவிக் கூட்டக்
கருவு லாப்பிறப் பிலர்தொழுங் கயிலையங் கிரிக்குத்
திருவு லாத்தமிழ் கொடுத்தது செந்தமிழ் நாடு. (க)

சுழிக்கும் வையையி லேடெதி ரோடியத் தூநீர்
கிழிக்கு மேன்மைபோற் கிழிபர னருள்செயக் கிடைத்துக்
கொழிக்கு முத்தமிழ்க் குழவியோர் பார்ப்பனக் குமரன்
செழிக்குங் கூடல்பெற் றுடையது செந்தமிழ் நாடு. (உ)

பரவு சீர்க்கரு மாறிபொற் றாமரை படைத்து
விரவு செங்கதிர் பைங்கதிர் தனித்தனி விளையு
மருவு பூங்கழை முத்தமின் வடிவொடு வயங்குந்
திருநெல் வேலியொன் றுடையது செந்தமிழ் நாடு. (ங)

மாறும் பூசல்வெவ் வினையறத் திருப்புடை மருதூர்
நாறும் பூவைமெய் சாய்ந்தநா தனைத்தின நாடிக்
கூறும் பூமக ளெனும்பெயர் மூவருங் குழைவாத்
தேறும் பூசனை சிறந்தது செந்தமிழ் நாடு. (ச)

பொய்வ கைப்பிறப் பகன்றிட வருந்தவம் பொருந்தி
மைவ கைப்புல னடக்குமத் திரிதொழ வமைந்த

சைவ லக்குழல் பாகத்தான் வாழ்சிவ சயிலத்
தெய்வ மெய்த்தலம் வாய்ந்தது செந்தமிழ் நாடு. (ரு)

உருக்குற் ருலம்வித் தெனவுதித் துயர்ந்தமா லொல்கப்
பெருக்குற் ருலம்வந் தெழக்களத் தமைத்துமெய் பிழைபார்
கருக்குற் ருலமார் சடிலர்வாழ் குறும்பலாக் கவினுந்
திருக்குற் ருலமுஞ் செழித்தது செந்தமிழ் நாடு. (சூ)

தன்னு ருச்சிவ லிங்கத்து முகந்தொறுந் தழைக்குங்
கன்னி யொப்பனை பாகன்வாழ் கருவைபம் பதியும்
புன்னை நீழலிற் புற்றிடத் தமர்ந்தருள் பொருள்வாழ்
தென்னி ராசையு முடையது செந்தமிழ் நாடு. (எ)

பைந்தொ டிக்கொரு பாகன்வாழ் பதிபல படைத்த
விந்த முத்தமிழ் நாட்டிற்கோர் திலகமென் றிசைப்ப
வந்த மெய்த்தலத் திருமுள்ளி நாட்டணி மகிமை
புந்தி யிற்புனைந் துரைப்பரி தெளியனோ புகல்வேன். (அ)

கோட்டி யங்களுங் குடமுழ வியங்களுங் கொடைச்சீர்
காட்டி யங்களுங் கடிமண வியங்களுங் கவிஞர்
பாட்டி யங்களும் பணைத்தம ரியங்களும் பரத
நாட்டி யங்களுந் தழைத்தது திருமுள்ளி நாடு. (கூ)

கொற்ற மன்னவர்க் கரசியல் வளமையுங் குலநூல்
கற்ற வாணர்க்குக் காவிய வளமையுங் காமப்
பற்றி லார்க்கிக பரந்தரும் வளமையும் படைத்து
நற்ற வங்களுஞ் செழித்தது திருமுள்ளி நாடு. (கO)

மேக சாதியுந் தருக்களும் வெள்கிடக் கொடுக்கும்
யோக சாலிக ளாகிய யோகமே யுடைத்தாய்ப்
பாக சாதனக் கடவுளைப் பதியெனப் படைக்கு
நாக லோகத்துஞ் சிறந்தது திருமுள்ளி நாடு. (கக)

விதித ரும்புவி மடந்தைக்கு விழைதமிழ் நாடா
மதிமு கமபொலி நுதலணி திலகம்போல் வயங்கிப்
பொதிய மும்பசுந் தென்றலுந் தமிழும்வான் பொருநை
நதியும் வாய்ந்திடப் படைத்தது திருமுள்ளி நாடு. (கஉ)

வலம்பு ரிக்கரன் புரந்தா னுகுமா துலர்பாற்
கலந்த வன்புறு சேயெனக் குறிஞ்சியுங் கழனி

நிலந்த ழைத்ததண் மருதமு முல்லையு நீங்கா
நலந்த ழைத்திடக் கலந்தது திருமுள்ளி நாடு. (கங)

வெண்ணெ யுண்டவன் றுயில்கொளப் பளிக்கறை விரிநீர்க்
கண்ண கன்றவான் சுனைதிருப் பாற்கடல் கடுக்கு
மெண்ணெ மாமரு தகன்பணைப் படரிய முல்லை
வண்ண வெண்கரி மகபதிக் கிடுபெந்தர் மானும். (கச)

பழன மெங்கணும் பாவையர் விழிநலம் படைத்துக்
குழவி வண்டுண நகைறமீது வளிப்பன குவளை
மழைமு ழுங்குவான் முழக்கென வளைமரீஇ யிருந்து
தழைகு ரம்பிடை யிடைவிடா தாற்றுவ தவளை. (கரு)

தோரை யையவனந் தினைகொய்யுந் தொண்டக முழக்குந்
தாரை யாகநெல் லரிகிணைத் தமரமுஞ் சாமை
சேரை யார்வர கரியுமேற் றுப்பறைச் சிலம்பும்
விரை யேழினு முழங்குறு முழக்கத்தை விழுங்கும். (கசு)

அருவி நீர்குடை கின்றவர் திருவனை யாருங்
கரைகொள் வான்குளம் படிந்தெழுங் கடைசியர் பலருங்
குரைசெய் கானியா றாடிய குடத்திய ரெவரும்
விரவி யோரிடங் கழங்குபந் தாடுவர் வியப்பால். (கஎ)

ஐவ னம்புனம் வித்திய கானவ ரார்ப்புந்
துய்ய சாமைவித் தாயர்தந் தொகுதியின் முழக்குஞ்
செய்யில் வான்முளை வித்திய மள்ளர்தஞ் சிலைப்பும்
வைய மேழையும் வளைதிரைக் கடலொலி மறைக்கும். (கஅ)

ஊறும் வெண்டயி ராய்ச்சியர் மத்தெறி யொலியு
மீறு குன்றிடைக் கொடிச்சியர் விளம்பெதிர் மொழியு
நாறு வைக்குமக் கடைசியர் குரவையு நாளு
மாறு கொள்ளவெண் டிசையினு முழங்குவ மாதோ. (ககூ)

இட்ட வார்தினைக் குறிஞ்சியின் யாமயா ழிசையான்
மட்டு லாமுல்லைச் செவ்வழி யாழிசை வகுப்பாற்
றொட்ட வாவிசூழ் மருதயா ழிசையினாற் சூழற்
பட்ட பாதவ மடங்கலும் பசுந்தளிர் பரப்பும். (உ0)

துய்ய கோட்டிளங் கொன்றைபூக் தெழுந்துபொன் சொரியப்
பைய வாங்கியே வரிவளை தாங்கிய பணைப்பூங்

கையி னூற்புனை காஞ்சியி னிடைக்கவின் காட்டுஞ்
செய்ய வஞ்சிபா லளிப்பன*சந்திர திலகம். (உக)

குயிலின் மென்மொழிக் கொடிச்சியர் மடநடைக் குறிப்பு
மயிலி னேர்விழிக் கடைசியர் சாயலி னழகு
மியலுந் தாமரை யிருக்கையும் வேங்கையு மிகந்து
மயிலு மன்னமுங் கவரிய திரிவன மானும். (உஉ)

முல்லை யாவினங் கன்றுணப் பிதிர்முலைப் பாலுஞ்
செல்லை யேந்துகாக் குறிஞ்சியிற் பொழியிறாற் றேனும்
வல்லை கூடிவா னதியென மருதத்திற் பாந்து
நெல்லை யோங்குவித் தகன்றுபோய்க் கடலுவர் நீக்கும் (உங)

கோட்டு வாரணங் கொழித்தவெண் முத்தமுங் கூன
மோட்டு வாரண முயிர்த்தவெண் முத்தமு முல்லைச்
சூட்டு வாரணங் கிளைத்திரை பெடைக்கருள் சூழ்ச்சி
காட்டு வாரணங் கனையவர் கணவர்கண் களிப்ப. (உச)

இருநி லத்துள கழைபடு முத்தமு மீர்ந்தண்
மருமலர்க்கொன்றை நிழலிருந் தாய்ச்சியர் வாரிக்
கரிய கார்வரு காலையு மாலையுங் கைம்மேற்
குருகு சோரவு நெரியவும் வளைப்பராற் கூடல். (உரு)

விரைத்த முல்லையுங் காந்தளு நோக்கின்மெல் லியலார்
நிரைத்த மூரலும் வளைக்கையு நிகரெனல் கேட்டு
வரைத்த டம்புய மவுணரை மருதத்து மடவா
ருருத்து வைகறை யடிதொழ விளைப்பரா லூடல் (உசா)

உழைத்த டங்கண்மென் கொடிச்சியர் கணவர்பா லுவகை
தழைத்த நெஞ்சினர் முன்பனி நள்ளிராத் தருண
மழைத்த கூந்தலிற் குவளையு முல்லையும் வனைந்து
குழைத்த சந்திதண் குரம்பையுட் டிளைப்பராற் கூடல். (உஎ)

வேறு.

மூன்று காலமு நீர்முறை யாடியுந்
தோன்ற வேள்வி சுருதிகொண் டாற்றியு
மேன்ற மந்திர நாவுரு வேற்றியு
மான்ற நான்மறை யந்தணர் வாழ்வரால். உஅ)

* சந்திரதிலகம் - சந்தனமரம்.

கோதி லாமுறை கொண்டன யாவையு
மூதி யஞ்சிறி தேற்றிவிற் றுண்பொருள்
பூத ரந்தர மென்னப் பொலிகாத்
தீதி லாத வணிகர் செழிப்பரால். (௨௯)

உழவி னல்வரு மூதியங் கொண்டறந்
தழுவி மேம்படத் தங்கிளை யோம்பினான்
மொழியு முன்னவர் மூவர்க்கும் வெம்பசிப்
பிழைகண் மாற்றியப் பின்னவர் வாழ்வரால். (௩0)

காந்த னேதங் கடவுளென் றெண்ணுபு
போந்த தத்த மனைவளம் பூரித்துச்
சாந்த மேபடைத் தில்லறந் தாழ்வின்றி
வாய்ந்த கற்பு மடந்தையர் வாழ்வரால். (௩௧)

எங்கு முள்ள வுயிர்ப்பயிர் யாவையும்
பங்க மின்றிக் களித்துமெய் பாரிப்பத்
திங்க ளொன்றினின் மும்முறை செம்மையா
மங்கு னின்று பொழிதரும் வானமே. (௩௨)

நீங்க ரும்பசி நீங்க விருந்தொடுந்
தாங்க லந்துண்டு மாந்தர் தழைப்புற
வொங்கி மீறியாண் டொன்றி விருமுறை
றீங்க ரும்பெனச் செந்நெல் விளையுமால். (௩௩)

நள்ளி நாட்கம லக்கொடி நாடிவாழ்
முள்ளி நாட்டணி கூறின முத்தமிழ்
தெள்ளி நாட்டிய சிங்கையவ் வானையு
மெள்ளி நாட்டணி யாவு மியம்புவாம். (௩௪)

பதினான்காவது நாட்டுச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (௬௨௯.)

---

## பதினான்காவது நாட்டுச் சருக்கச் சுருக்கவசனம்.

தமிழ்ச்சங்க மிருந்துள்ள மதுரைமாநகரமும் வேணுவனம் என்னும் திருநெல்வேலியும் இலக்குமி முதலியோர் பூசித்த திருப்புடைமருதூரும் அத்திரிமகாமுனிவராலே ஆராதிக்கப்பட்ட சிவசயிலமு

ம் அகத்தியமுனிவர் பூசைசெய்த திருக்குற்றாலமும் தமது திருமே னியிலே திருமுகம்பெற்றிருக்கின்ற சிவலிங்கமூர்த்தி எழுந்தருளியி ருக்குங் கருவை நல்லூரும் புன்னை நீழலிற் புற்றிடங்கொண்டு சிவபி ரானெழுந்தருளிய இராசை என்னும் சங்கரநயினார்கோவிலும் முதலா கிய சிவஸ்தலங்கள்பெற்ற பாண்டியனது நாட்டின்கண்ணே திரு முள்ளிநாடு என்று ஒருநாடு உண்டு. அந்நாட்டிலே பலவிதவாத்திய ஓசையும் அரசநீதியும் வித்துவான்கள் பாடல்வளமும் தவஞ்செய் யு முனிவருக்கு இகபரங்கொடுக்கின்ற மேன்மையும் பிறவளங்க ளும் வளர்ந்து வருவனவாம். அந்தநாடு பூமிதேவிக்குத் திலகம் போலவும் பிரகாசிக்கும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எ ன்னும் இந்த நான்கு நிலங்களிலும் உள்ள பலவித வளங்களும் மலி யப்பெற்றுப் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய இந் நான்கு உத்தமகுலத்துப் பெருங்குடிகளாலும் மற்றைய குடிகளா லும் மேற்கூறிய வளங்களை அநுபவித்துவர மாதந்தோறும் மூன் றுமழை மேகம் பொழியப்பெறும். இலக்குமி வாசஞ்செய்யும் சிறப் புத் தங்கிய அந்த நாட்டின் வளத்தைச் சொன்னோம். இனித் தமிழ்வளம்பெருகிய சிங்கைமாநகரத்தின் வளத்தைச்சொல்லுவாம்.



## பதினைந்தாவது: நகரச்சருக்கம்.



வற்கலை முனிவரர் மகிமை போல்வளர்ந்
தற்கலை வுறும்படி யலங்கு பொன்மதில்
சொற்கலை பயின்றவர் தூக்குங் காலையிற்
பொற்கலை நகரமான் புனைந்த தொக்குமால். (க)

பொம்மெனப் பகையறை போதன் மாற்றிவான்
செம்மணிச் சேடன்கூன் சிரத்திற் கண்ணுறத்
தம்மையொப் பவர்பெருந் தன்மை போன்றுய
ரம்மதிற் புறத்தகன் றகழி சூழ்ந்ததால். (உ)

இலையெனு முரைதரு விடத்தி னல்லது
மலைவிலா மைந்தர்தம் வாக்கி லில்லையா
மலையெனு நாமநீ ரகத்தி னன்றியே
யுலைவுற வொருவரு முரைப்ப தில்லையால். (௩)

செழிமத கரிபரி செலுத்துஞ் சும்மையு
மழவிளங் குமரர்தேர் வழங்கு மோசையு

மெழில்வனி தையர்சிற்றி லிழைக்குங் கௌவையும்
விழவணி யோதையும வீதி காட்டுமால். (ச)

தேடரும் பொருள்கல்வி செழித்து மன்னவர்
கூடுபோ ரின்மையிற் குலவு மாடவர்
பீடுறு மகளிரைப் பிரித லின்மையால்
வேடணக் கனுதினம் விசைய மில்லையால். (ரு)

எழுதரு மறையவர் யாக சாலையு
மொழிவற வம்மறை யோது சாலையு
மழிபசி தவிர்த்தரு ளன்ன சாலையுஞ்
செழிதமிழ்ச் சாலையுஞ் சிறப்ப வோங்குமால். (சா)

மேடைமே னிலைமனை விளங்கு மங்கணத்
தூடுகா ழுகருயி லூச லாடுறப்
பாடக மெல்லடி படைத்த மஞ்ஞைபோ
லாடக வூசலி லாடு வார்பலர். (எ)

சைவலங் கூந்தல்வெண் டரளம் வாணகை
மைவிழி சேல்கயல் வாளை மீன்குல
மொய்ம்மலர்க் கமலங்கண் முகங்கை கான்முலை
பொய்கையென் றோங்கிய பூவைக் காகுமால். (அ)

பங்கநீத் தோங்கிவான் படர்ப லாவனம்
பொங்கரா கியவண்டு புனையுஞ் செங்கையாற்
கொங்குலா வியசுளைக் கும்ப வான்கனி
யெங்கும்வா னகத்தரு வேந்த நல்குமால். (கூ)

கருவிளை வரிவிழி காம்பு தோளிணை
விரிதளிர் மேனிபைங் காந்தண் மென்கரங்
குருமணிக் கொடியிடை கோங்கு பூண்முலை
மருமலர்த் தண்டலை வல்லிக் கென்பரால். (க0)

ஒழிவிலா தளவில ருற்று வாங்கவும்
பொழிதிரைக் கடலெனப் பொருள்க ளோம்பலாற்
றொழுமவர்க் குதவியுந் தொலைவி லாததாங்
கொழிதமி ழொத்தது கூல வீதியே. (கக)

ஆதுல ரின்மையா லளவில் செல்வர்தா
மீதலுக் கொருவரு மேற்ப தில்லையாங்

கோதின ரின்மையாற் குணங்கண் மேலவர்
போதனே கனவினும் புரிவ தில்லையால். (கஉ)

நறைமலர்க் குழலியர் நடத்து முடலிற்
றெறிபடு முத்தினஞ் சேடி மார்தின
மறுவற வரன்றிப்போய் வளர்க்குங் குப்பைகள்
குறைவிலெற் காலத்துங் கொழிக்கும் வெண்ணிலா. (க

மடுவிடைச் சுரிவளை வழங்கு முத்தமு
நெடுவரை முத்தமு நெல்லின் முத்தமும்
படுகழை முத்தமும் பரந்து தோற்றுத
லுடுவொடு வானம்வந் துறைத லொக்குமால் (கச)

துன்னிய மாடமேற் றூவி யும்பரின்
மின்னிய செம்மணி விளங்கித் தோன்றுவ
வின்னிலத் திடைவிடா தெழுந்து தோற்றிய
பன்னிரு கோடிவான் பரிதி போலுமால். (கரு)

நிரம்பிய சித்திர நின்று நாடொறும்
வரம்புறு பரதநூல் வழுவு றுவகை
திரம்பெற நடித்தல்போற் செங்கண் மங்கைய
ரரம்பையு நாணுற வாடு வார்பலர். (கசு)

வந்தவ ரிருந்தவர் வையம் யாவையுந்
தந்தவர் சுமந்தவர் தயையொப் பாம்படி
புந்தியி லனுதினம் போதம் பூரிக்குஞ்
செந்தமிழ் கொழித்திடுஞ் சிங்கை மாநகர். (கஎ)

நித்தியம் வாசமா நிலைபெற் றோர்க்கெலா
மெத்திசை யவரும்வந் தேத்து செல்வமு
முத்தியும் போகமு முயலு மெண்வகைச்
சித்தியுங் கொடுப்பது சிங்கை மாநகர். (கஅ)

முப்புவ னத்தினு முளரி வானவன்
வைப்பென வுவப்புற வகுத்த யாவையு
மொப்பற வழிவின்றி யோங்க லாலவன்
செப்பெனத் திகழ்வது சிங்கை மாநகர். (ககூ)

பதினைந்தாவது நகரச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (ௗ.சஅ.)

பதினைந்தாவது நகரச்சருக்கச் சுருக்கவசனம்.

பொன்னினாற் செய்யப்பட்டுத் தன்னைச் சூழ்ந்திருக்கின்ற மதிலானது தான் தரித்துக்கொண்ட பீதாம்பரத்துக்குச் சமானமாகும்விக்கிரமசிங்கபுரம் என்னும் நகரத்திலே இல்லையென்னுஞ் சொல் கிடையாது. ஒருவரை யொருவர் அலைக்குங் கொடுஞ்சொல்லுங் கிடையாது. வீதிகள்தோறும் அரசரது யானைகளுந் தேரும் குதிரையும் முழங்கும் ஓசையும், திருவிழா முழக்கமும் உண்டாம்: கல்விப்பொருளும் செல்வப்பொருளும் செழிப்புற்றிருத்தலாலும் செங்கோலால் அரசர்க்குப் பகையால் விளையும் போரின்மையாலும் ஆடவர் மகளிரைப் பிரிதற்கிடம் இல்லாமையால் மன்மதனுக்கு வெற்றியென்பதில்லையாம். அந்தணர் செய்கின்ற யாகசாலையும், வேதம் ஓதுசாலையும், அன்னசாலையும், கல்விச்சாலையும் வேண்டும் இடந்தோறுமுள்ளனவாம். மாடங்களிலே மயில்கள்போலே பெண்கள் நடனமாடுவார்கள் ஊசலாடுவார்கள். தடாகங்களெல்லாம் தம்மிடத்துள்ள தாமரை, நீலோற்பலம், சைவலம், சங்கு, மீன் முதலிய பொருள்கள் தமக்கு அவயவமாகப் பெண்கள் போலத் தோன்றுநிற்கும். பூஞ்சோலைகளெல்லாம் மேலோங்கி வளர்ந்து கற்பகவிருக்ஷங்கள் வாங்கிக்கொள்ளப் பழங்களைக் கொடுக்கும். அன்றியும் தளிர், அரும்பு, கொடி, வண்டு முதலியவைகளால் மாதர்கள்போலவுந் தோன்றும். கடைவீதிகளெல்லாம் வேண்டுவார்க்கு வேண்டும் எல்லாப்பொருள்களையும் நல்கலாலே தமிழை நிகர்ப்பதாகத் தோன்றும். யாசகரில்லாமையால் கொடுப்பவருமில்லையாம். மகளி ருடற்காலத்திலே பறித்தெறிந்த முத்துமாலைகள் வீதிகள் தோறும் குப்பையாக நிறைந்து சங்கிரகிரணத்தை வீசாநிற்கும். சங்கு முத்தமும், மூங்கில் முத்தமும், கரும்பு முத்தமும், நெல்லின் முத்தமும் பரந்துகிடக்கும் இடமானது நக்ஷத்திரங்கள் நிறைந்த ஆகாயத்தை யொக்கும். மாடங்கள்மேல் வைத்த தங்கத் தூவிகளெல்லாஞ் சூரியனைப்போலத் தோன்றும். நடனசாலையிலே நடிக்கின்ற பெண்கள் சித்திரம்போலக் காணப்படுவார்கள். இவை முதலாகிய பற்பல வளங்களையுந் தழுவிச் சிங்கை நகரமானது தன்னிடத்து நீங்காது வசிப்பவர்க்கு வேண்டிய போகத்தையும் மோக்ஷத்தையுங் கொடுக்கும்.



## பதினாறுவது: விக்கிரமசிங்கபாண்டியச்சருக்கம்.

அளகையுமற் றுளநாடு மமரருறை யுலகமுமிவ்
வளமிலவென் றுரைக்கும்வகை வாய்ந்தபல வளங்கொழிக்கு
தெளிதமிழ்கூர் விக்கிரம சிங்கமெனுந் திருநகரிற் [ந்
களிசிறந்து பார்வணங்கக் கௌரியன்வீற் றிருந்தனனால். (க)

முக்களவின் மூளைத்தெழுந்த முதற்கடவுள் கருணைபெற்ற
வக்கருணா கரனென வரியதிருப் புதல்வனுக்கு
விக்கிரம சிங்கனென்பான் விதிப்படிமூன் றுமாண்டிற்
றக்கபெரி யோர்மகிழச் சவுளமணஞ் செய்வித்தான். (உ)

ஆண்டொருநா னன்கான வக்காலை யருமறையோர்
வேண்டுபெருஞ் சுற்றத்தார் வியந்துபுடை கலந்திருப்ப
நீண்டசடைத் திருமுனிவர் நெறித்திருந்து சடங்கியற்றப்
பூண்டமன மகிழ்ச்சியினாற் பொற்பூணூல் புனைவித்தான். (ந)

சினப்படைகள் பயின்றுகலை தெரிந்துணர்ந்த திருப்புதல்வன்
புனற்கரசு பதிபுகுந்தப் புங்கவன்புத் திரனீன்ற
வனக்கொடியை மணந்துவரும் வரவுகண்டு மகிழ்ந்தன்னோன்
றனக்குதித்த சந்ததியுங் கண்டரசன் யனந்தழைத்தான். (ச)

சாற்றுமிள வரசுபிர தானிசே னாபதிகள்
போற்றுகவி சுரர்கலைஞர் புரோகிதர்சோ திடர்கணிதர்
மாற்றருதார்க் கீகர்சிற்பர் மந்திரசாத் திரமுணர்ந்தோ
ரூற்றமிகு தந்திரத்தோர் சகுனபல னுரைசெய்வோர். (ரு)

சகலகலா வல்லவிக டருமபரி பாலனத்தோர்
புகலும்வயித் தியவிபுணர் போற்றுபுரா ணிகர்வீர
ரிகபரம்வாய்த் தருள்சீல ரிராசபார்த் திபர்பரதர்
தொகுபரிசா ரகத்தொழிலார் தொழுந்தேவார்ச் சகர்வணிகர்.

ஆனையேற் றினில்வல்லோ ரச்சுவவேற் றினில்வல்லோர்
தானவிப வதிகாரர் தாவுபரி யதிகாரர்
தேனுநிரை யதிகாரர் திகழ்மேதி யதிகாரர்
தானியஞ்சே ரதிகாரர் தழைத்ததன வதிகாரர். (எ)

செழித்தமணி யதிகாரர் சித்திரங்கோட் டதிகார
ரிழைத்தகலை யதிகார ரெழுலோக வதிகாரர்

கொழித்தபரி மளகாரர் கோடாது கடைகாப்போர்
நிழற்றருசத் திரகரத்தார் நிரைதீப கராரானோர். (௮)

மங்களபா டகர்தென்கால் வழங்குசா மரைக்கரத்தோ
ரிங்கிதமாம் வியஞ்சகர ரிணைமாலா காரரென்போ
ரங்கபரி பாலனரு மங்கமாம் படிபடைத்துச்
சிங்களரா தியர்வணங்கத் திருந்துலகு புரக்குங்கால். (௯)

தன்போலப் பலகுடியுந் தாவில்பெருஞ் சீர்படைப்பப்
பொன்போலத் தனிதாக்கும் பொதியவரைத் தமிழ்நாடன்
மின்போல விழுதுவிட்டு விரிசடில வங்கிரா
முன்போந்து மனுநீதி முறையுரைத்தி யெனத்தொழுதான்.()

ஆங்கவனு மவ்வுரைகேட் டருமறையின் வருமுறையும்
பாங்குபெறப் படியேழும் பரிந்துபுரந் தருண்முறையுந்
தீங்கறியா விக்கிரம சிங்கனெனுந் தென்னவனுக்
கோங்குவகை மனம்பூப்ப வுறுதிபெற வுரைசெய்வான். (௧௧)

**வேறு.**

ஆறி லொன்றிறை யாகவே
கூறு கொண்டது கோடலா
மீறில் வெந்து ரெயதினோர்க்
கூறு நீக்குவ துன்கடன். (௧௨)

ஆதி நூலின ராவின
மாதர் பாலர் வயோதிய
ரோது வெம்பிணி யோர்தமைப்
பாது காத்திடல் பண்பரோ. (௧௩)

காம மாதி கடந்திடல்
வாம மாதி மறந்திட
லேம வில்லியை யேத்துதல்
பூமி மன்னவர் பொற்பரோ. (௧௪)

ஊக்க நெஞ்சிலு றைத்தலு
மாக்க நாடொறு மாக்கலும்
வாக்கு மாறலை மாற்றலுந்
தூக்கி மன்னவர் சூழ்ச்சியால். (௧௫)

ஒற்றர் மூவ ருலகினி
லற்ற மான வநீதியு
மற்று மோர்ந்தவை மாற்றுதல்
கொற்ற மன்னவர் கொள்கையாம். (கசு)

போதம் வாய்ந்த புரோகித
ராதல் கூறு மமைச்சருந்
நீதி னூல்பயில் செல்வரு
மோதில் வேந்தருக் குண்மையோர். (கஎ)

அச்ச மின்மை யவாவறல்
விச்சை யாவும் விரும்புத
றுச்ச மான துறப்பதி
லிச்சை மன்ன ரியற்கையாம். (கஅ)

வரைவி லாக்கொடை வண்மையும்
புரையின் மாதவர்ப் போற்றலும்
விரவு சூதை வெறுத்தலுந்
தரைபு ரப்பவர் தன்மையாம். (கக)

வேறு.

குடிபுறங் காத்தல் வேகக் கூற்றுவந் தெதிர்த்த போது
மடியிலாச் சேனை சேர்த்தன் மாற்றல ரறைபோ தற்குந்
தடைபடு மரணுண் டாக்கல் சந்ததம் பொச்சாப் பின்மை
புடவியோர் புயத்திற் றுங்கும் புரவலர்க் குறுதி யாமால். ()

சிற்றின நட்பு நீத்தல் சீரிய ருறவு போற்றல்
சுற்றம்வந் தடுத்தகாலைத் துயரொழித் தவரைக் காத்தல்
பற்றலர் வலியுந் தங்கள் வலியுமேம் பாடும் பார்த்தல்
வெற்றிவே லரசர்க் கெண்ண வேண்டிய கரும மாமால். (உக)

எனமுனி யருளிச் செய்தா னிருசெவி குளிரக் கேட்டு
மனுமுறை வழாது பன்னாள் வையகம் புரந்து வாழ்ந்து
தனதரும் பொருளாய் வாய்த்த சந்ததி வீர நோக்கிப்
புனைமணி மகுடஞ் சூட்டிப் புவியவன் புயத்திற் சேர்த்தான்.

பொறைகொடை யன்பு வாய்மை புனைகரு ணாக ரப்பேர்ச்
சிறுவனிவ் வுலகங் காக்குந் திறல்கண்டு மகிழ்ச்சி பூத்து

மறுவில்விக் கிரம சிங்கன் வனப்புகுந் தறங்க ளாற்றிக்
கறைமிடற் றிறைவன் பாதங் கருத்தினி லிருத்திப் போற்றி.

தேசிக னங்கி ராவைச் சேர்ந்துமுன் வணங்கிப் போற்றிப்
பூசனை புரிந்து பேயேன் புன்பிறப் பொழியும் வண்ண
மாசறு சித்து மற்ற வசித்துநீ வகுத்துக் காட்டிப்
பாசம்விட் டகல நிட்டை பரிந்தருள் புரிவா யென்றான். ()

முனிவர னதனைக் கேளா முகமலர்ந் தினிது நோக்கிக்
கனிதரு கருணை கூர்ந்து கௌரியற் கருளிச் செய்வான்
றனிவியா பகமெய்ஞ் ஞானத் தற்பரஞ் சித்தென் றாகு
மினியசித் துடலமாகு மிவ்வுடல் வகுக்கின் மூன்றாம். (உரு)

பரவுபூ தத்தி லுண்டாம் பவுதிக வடிவந் தூலந்
தருபிரா ரத்து வம்போந் தருணத்தி லதுவு மாயு
மருவுமிந் திரியம் பத்து வளிபிரா ணாதி யைந்து
கருதுறு மனமீ ரெட்டுஞ் சூக்கும காய மாமால். (உசா)

இவ்வுருக் துன்ப வின்ப மெங்கணுஞ் சென்று துய்த்துத்
திவ்விய பரம முத்தி சேரிலத் தேக மாயுங்
கவ்வைகூர் தருமஞ் ஞானங் காரண தேக மாகு
மெவ்வமில் பரமான் மாவை யெய்துங்கா லதுவு நீங்கும். ()

சூக்குமந் தூல மேலோர் சொற்றகா ரணமென் றாகு
மாக்கையோர் மூன்று நீங்கா தடைந்தசீ வான்மா வென்றுஞ்
சாக்கிர மாதி யாமைந் தவத்தையுஞ் சார்ந்து நின்று
சீக்குறு மின்ப துன்பந் திளைத்தனு பவிக்கு மாதோ. (உஅ)

இந்திரி யங்கள் பத்துங் கரணமீ ரிரண்டு மாகத்
தந்தவீ ரேழுஞ் சார்தல் சாக்கிர வவத்தை யாகும்
வந்தவக் கரண நான்கை மருவுதல் கனவென் றாகும்
பந்தமாஞ் சித்த மொன்றைப் பற்றுதல் சுழுத்தி யாமால். (உகூ)

நிகரிலா வான்மாத் தானே நிற்பது துரிய மாகுந்
தகவுறப் பிரமந் தன்னைச் சார்வது துரியா தீத
மிகவளர்ந் திடல்ப ருத்தன் மெலிந்திட லிறத்த லெல்லாம்
பகரிலான் மாவுக் கில்லைப் படிவத்தின் செய்தி யாமால். (௩0)

விரிபுன லசைவில் வான வெங்கதி ரசைவ தாகத்
தெரிவது போல மாயா தேகத்துச் சீவான் மாவுங்

கரணங்க ளசைவிற் ருனு மசைதல்போற் காண்ப தல்லான்
மருவுயிர் தூளக்கு ருது வியாபியா மன்ன ரேறே. (௩௧)

பந்தமுற் றுழல்வோர் பால ராதியிற் பற்று லவத்துச்
சந்ததம் வினையை யூட்டித் தாபர மாதி யாக
வந்திடு பிறப்பி லெய்தி நிரையம்வான் சுவர்க்க மென்ற
விந்தவி ரிடத்துத் துன்ப வின்பங்க ளுகர்வர் மன்னே. (௩உ)

பற்பல பிறப்பிற் செய்த நல்வினைப் பயத்தால் யாரு
மற்புத மான மேலாங் குலத்தில்வந் தவதரித்துத்
தற்பரப் பொருளைப் போற்று நல்வினஞ் சாரப் பெற்றுப்
புற்புதப் பிறவி நீங்கும் படிசிவ பூசை செய்வார். (௩௩)

சிற்குணப் பொருளைப் பூசை தீங்கறச் செய்த லாலே
சற்குரு வெளிதிற் கிட்டிச் சரணர ணென்று போற்ற
வற்குணப் பாச மாசா னறுத்திட ஞானம் பெற்றுச்
சொற்குண மிறந்து நின்ற சோதியோ டயிக்க மாவார். (௩௪)

அப்பொழு தழிவி லாப்பே ரானந்தம் பெறலா மென்று
முப்புரி மணிநூ லேந்து முனிவர னுபதே சித்துக்
கைப்பட விளங்கு நெல்லிக் கனியென ஞான நிட்டை
யொப்பற வருளிப் போனுன் மன்னவன் யோக முற்ருன். ()

மண்ணுல கனைத்துங் காக்கும் வழுதிவிக் கிரம சிங்கன்
பண்ணவ னுரைத்த நிட்டை தானறப் பயின்று பன்னாள்
விண்ணவர் வியப்பப் பாசம் வேரறக் களைந்து மாற்றிக்
கண்ணுத லுறையும் வெள்ளிக் கயிலையங் கிரியைச் சார்ந்தான்.

பதினறுவது விக்கிரமசிங்க பாண்டியச்சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (௫அச.)

---

**பதினறுவது விக்கிரமசிங்க பாண்டியச்சருக்கச்சுருக்கவசனம்.**

குபேரனுடைய அளகாபுரிப்பட்டணமும் இந்தவளமுடையதல்லவென்று சொல்லப் பலவளங்கள் நிறைந்த விக்கிரமசிங்கபுரத்திலே விக்கிரமசிங்கபாண்டியன் பகை அரசர்வணங்க அரசாட்சி செய்திருக்குங்காலத்திலே தன்புத்திரனுகிய கருணைகர பாண்டியனுக்கு உரியகாலங்களில் செய்யவேண்டிய கிரியைகளெல்லாஞ் செய்வித்துச் சகலவிதமான கலைகளையுங்கற்பித்து வந்தான். பின்பு

ஒருகாலத்தில் அங்கிராமுனிவரைச் சென்று தரிசித்துத் தோத்திரஞ்செய்து மனுதருமசாத்திர நீதியை அடியேனுக்கு உபதேசித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதுகேட்ட அம்முனிவரும் அரசன் மனமகிழ்ச்சி கூரும்படி அரசர்களுக்குரிய மனுதரும சாத்திரத்தின் நீதிவரலாறு முழுவதுங் கிரமமாக உபதேசஞ் செய்தருளினர். அதன்மேல் விக்கிரம சிங்கபாண்டியனாகிய இராசன் தான் கேட்ட உபதேசத்தின் முறைப்படி அநேககாலம் அரசாண்டுவந்து பின்பு புத்திரனாகிய கருணாகர பாண்டியனுக்குக் கிரீடந்தரித்துச் செங்கோலும் அரசும் கொடுத்துவிட்டுக் காட்டில்கண்ணே சென்று பின்னும் தனது ஆசாரியரான அங்கிரா முனிவரைக்கண்டு வணங்கிச் சுவாமீ! அடியேனுக்கு உலக வாழ்க்கையிலே வெறுப்புவந்ததனாலினித் தத்துவப் பொருளை அடைதற்கு விரும்புகின்றேன். அதற்குரிய ஞானசாத்திரங்களைப் போதிக்கவேண்டுமென்று கேட்டான். அந்த மகாமுனிவரும் அவன் பக்குவநோக்கிப் பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருளி னியல்பையுங் கிரமமாகப் போதித்தனர். அரசன் அவ்வுபதேசத்தை உண்மையாகத் தெளிந்து முக்களாலிங்கருடைய திருவடிகளை யிடைவிடாது தியானித்து நிட்டைகூடியிருந்து திருக்கயிலாச மலையைப்போய்ச் சேர்ந்தான்.



## பதினேழாவது: கருணாகரபாண்டியச் சருக்கம்.



கற்றவ ருக்கருள் கூர்கரு ணாகர னெனும்வேந்தன்
வெற்றி யயிற்கண் விளங்கிழை வஞ்சியர் விளையாடுஞ்
சிற்றில் சிதைத்துச் சிறுதே ருருட்டித் திரிகாலைப்
பற்றிய நட்பொடும் வாரிதி நாதன் பதிபுக்கான். (௧)

தனையை யளித்தருள் சந்ததி தன்பால் வரநோக்கி
மனமகிழ் வுற்றனன் வரிசைகொ டுத்தனன் வருணேச
னனைய னளித்தருள் புத்திர ராமா துலரானோர்
கணமுறு பற்பல வரிசைகள் செய்து களித்தாரால். (௨)

அதிசய மெய்து களிப்பொடு பன்னா ளங்காட்டில்
வதிதரு காலையி லன்புறு தன்மா துலனீன்ற

பதுமையை நேர்கலி யாணியை வேட்டுப் பலர்சூழப்
புதிய மணத்தொடு விக்ரம சிங்க புரத்துற்முன். (ங)

தாதையை யன்னையை முன்பு வணங்கிச் சசிகுடு
நாதனை முக்கள வோனை வழுத்தி நயப்பெய்தி
யேதமில் பட்டின மொன்றை யியற்றின னின்பாகத்
தீதறு தன்பெய ரிட்டதில் வாழ்ந்து செழித்தானல். (ச)

கொண்டது கொண்டு குறைவறி யாது நிறைகூல
மண்டு கொடிக்கையின் வான மளக்கு மணிமாடந்
திண்டிம மார்க்கும் விழவொழி யாது தெருவீதி
யொண்டொடி மாதர் நடன முழங்கு முயர்மேடை (ரு)

அக்கரு ணாபுரி நின்று தினந்தொறு மணிவீதி
விக்ரம சிங்க புரத்தினில் வந்து வியப்பாக
முக்கள வூடு முனைத்தெழு தேவை முதற்போற்றித்
தக்க பிதாவொடு தாயை வணங்கிச் சார்வானல். (சா)

இப்படி வாழுங் காலை யிராச விராசாவா
மெய்ப்புகழ் மைந்த னுதித்தன னுலகம் வியப்பெய்தச்
செப்பம தாகச் சாதகன் மாதிகள் செய்வித்து
வைப்பெண வெண்ணிப் பலகலை யெல்லாம் வருவித்தான். (எ)

ஆங்கவ னுகக் கன்னியை வேட்டிட ராமுக
வோங்கிய மைந்தரை யீன்றது நோக்கி யுவப்பாகித்
தீங்கறு தாதை தவத்தில் வனத்திடை செல்காலை
வாங்குவின் மன்ன னடத்தின னுளும் மனுநீதி. (அ)

திங்கண் மணிக்குடை மன்னவன் மைந்தன் றிறநோக்கி
மங்கள பேரிகை வானக வானுற மெனவார்ப்பப்
பைங்குழன் மங்கையர் கவரி யிரட்டப் பார்போற்றப்
புங்கவர் சூழ விதிப்படி மகுடம் புனைவித்தான். (கூ)

சசிகுல மோங்க மணிமுடி தாங்கித் தாவாத
விசைபல பூண்ட விராச விராசா வெனும்வேந்தன்
றிசைதிசை சென்று பகையற வென்று திறல்கொண்டு
விசையுடன் வந்து தொழுவது கண்டு வியப்புற்முன். (கo)

சந்ததம் வையந் தாங்கி யுயிர்க்குயிர் தானாகி
மைந்த னடாத்து மனுமுறை கண்டு மகிழ்பூத்து
வெந்திறன் மாற்றலர் பணிகரு ணாகர விறல்வேந்தன்
பந்தமின் மெய்த்தவம் வேட்டெளி துற்றான் பரலோகம். ()

பதினேழாவது: கருணாகரபாண்டியச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கூகரு).

---

**பதினேழாவது கருணாகரபாண்டியச் சருக்கச் சுருக்கவசனம்.**

கல்வியறிவிற் சிறந்த வித்துவான்களிடத்திலே அன்புசெலுத்திவருங் கருணாகர பாண்டியன் தன்னுடைய பாட்டனாகிய வருணராசன் பட்டணத்துக்கு ஆசை மிகுதியினாலே போய்ச் சேர்ந்தான். வருணராசன்கண்டு மிகுந்த மனமகிழ்ச்சியுடன் கருணாகர பாண்டியனுக்குத் தகுந்த மரியாதை யுபசாரஞ்செய்து வேண்டிய வரிசைகளுங் கொடுத்தான். சிலகாலஞ் சென்றபின் வருணராசன் புத்திரனாகிய தன் மாமனால் பெறப்பட்ட இலக்குமிபோன்ற புத்திரியாகிய கலியாணி என்னும் பெண்ணை விவாகஞ்செய்து அம்மனைவியோடு சகல வரிசைகளும் பெற்று விக்கிரம சிங்கபுரம் வந்துசேர்ந்து தன்னுடைய மாதாவை வணங்கித் தன்னுடைய குலதெய்வமாகிய முக்களாலிங்க மூர்த்தியைக் காலந்தோறுந் தரிசித்துச் சிலநாள் சென்றபின்பு, தன் பெயராலே கருணாபுரி என்னும் ஒருபட்டணம் உண்டுபண்ணி அதிலே அரசுசெய்துவந்தான். இப்படி அரசு செய்துவருநாளிலே ஒருபுத்திரனைப் பெற்றான். அவனுக்கு இராசவிராசபாண்டியன் என்னும் நாமகரணம் இட்டுப் படைக்கலம் முதலியவை பயிலும்படி செய்வித்துச் சந்தோஷம் உற்றிருந்தான். அதன்மேல் இராசராசபாண்டியன் பகையரசர்களைப் போரிலே வெற்றிசெய்து வருகிற திறத்தையறிந்து பிதாவாகிய கருணாகர பாண்டியன் மகுடஞ்சூட்டி வைத்துவிட்டுத் தவத்தின்மேற் சென்று பரமேசுரனைத் தியானித்து நிட்டைகூடிச் சிவலோகத்தை யடைந்தான்.



# பதினெட்டாவது: இந்திரத்துய்மினன்றிக்கு விசயச் சருக்கம்.

மன்னிய புகழி ராச ராசனு மாறர் கோமான்
கொன்னயி லேந்து நாக ராசனுங் குமுத னீன்ற
கன்னலிற் கனிந்த மென்சொற் கவுமதி தன்னை வேட்டுப்
பன்னிரு புதல்வர்ப் பெற்று ளுறிரு பரிதி போல. (க)

ஈசனை வணங்கித் திக்கு விசயமின் றருள்வா யென்னப்
பூசனை புரிந்து நின்று போற்றிடக் கருணை கூர்ந்து
மாசறு கணங்க ளோடு மாகாளன் றன்னை மன்னற்
காசறு துணையாச் செல்ல முகமலர்ந் தனுப்பு வித்து. (உ)

வேறு.

பொருவிற் கொண்டவி ரரசரா சாவெனும் பொதினயக்
குரிசிற் கிந்திரத் துய்மின னெனும்பெயர் கொடுத்துச்
செருவிற் கன்றிய பகைஞரைக் கொலைசெயுந் திறலோன்
றருளிச் செய்தனன் விடைகொடுத் தனுப்பின னமலன். (ங)

மூக்க ளாகிழன் முதற்பொருள் பேரருள் படைத்துத்
தக்க சாரதப் படைபடைத் தலைவரா மெவரு
மக்க ளானபன் னிருவரு நாற்படை வகுப்பு
மிக்கு வாரிதி யெழுந்துவந் தாலென விரவ. (ச)

வருண னல்கிய சுபத்திர மெனுமத கரியும்
பரவு சீர்மன வேகமாம் பெயரிய பரியுந்
திரள்ப டைக்கிடை போதர வருஞ்சுப தினத்தில்
விரைவி னேகும்வி மானசே கரத்தைமேற் கொண்டான். (ரு)

இடிமு ழக்கெனத் திண்டிமம் பேரிகை யிரட்டக்
கொடிய ரஞ்சமீன் கொடியுடு மீன்வரை குலவ
நெடிய சாமரை புடையின்மந் தாநில நிரப்பப்
படியை வெல்லுவா னெழுந்தனன் மதிகுலப் பரிதி. (சா)

கரந்தி டாமன்னர் கரந்தலர் கரந்தைகூ டாம
லரந்தை சூடித்த னடற்சிலைக் கணிவெட்சி சூட்டிப்

பரந்த வேற்படை வீரராற் பற்றலர் பாடி
நிரந்த வானிரை கவர்ந்துகொண் டிடைதிசை நிறுத்தும். (எ)

வனையுங் காஞ்சியை மறந்தெழில் வஞ்சியர் மருங்குற்
புனையுங் காஞ்சியைப் புனைந்தடை யார்கின்று புலம்ப
முனையும் வேற்படை முடிக்கலர் வஞ்சியை முடித்துச்
சினையு மஞ்சிட வன்னவர் நாட்டின்மேற் சென்றும். (அ)

கொச்சி யுச்சியிற் புனைந்துயர் நொச்சிகா வாது
துச்சி னுடிகின் றுன்னல ரோடினா தொலைய
வுச்சி தழுபெறத் தன்படைக் குழிஞையேய்ந் தோங்கும்
வச்சி ரப்புயந் தடித்திட மதிற்புடை வளைந்தும். (கூ)

தும்பை தன்படைக் கல்லது மாற்றலர் சூடா
தம்பை யம்புபெய் கரங்களைச் சிரங்களை யறுத்துஞ்
செம்பு லத்தடை யடையல ருடைபடச் சினத்து
நிம்ப மாலிகை முடியின்மேல் வாகையு நிரைத்தான். (க0)

சிங்க ளந்தனிற் சிங்கலில் சிங்கள ரெதிர்த்து
வெங்க ளந்தனின் மடிந்தன ரன்றிவென் றிலராற்
பொங்கு சோனகர் கானகம் புகுந்துபூங் கனிகாய்
தங்கு போனகம் படைத்தனர் கிடைத்திலர் சமரில். (கக)

சாவ கத்தினிற் சீறினன் சாவகர் சாவச்
சோவ கத்துறை சீனரோ வீனராய்த் தொலைந்தார்
சேவ கத்திறற் றுளுவர்தூ ளுளுவடை செயல்போ
லேவ கத்திடை துளைத்திடக் களைத்துயி ரிளைத்தார். (கஉ)

குடகி னிற்செலக் குடகருங் குடவிளக் கானுர்
கடக மிட்டனர் கொங்கணர் கங்கணங் களைந்தார்
படக வாச்சியக் கன்னடர் பன்னடம் படித்தார்
வடக நீத்தனர் கொல்லரும் வெல்லரும் வலிபோய். (கங)

தெலுங்கர் நின்றுடல் குலுங்கினர் விலங்கினர் தேய்ந்தார்
கலிங்கா தம்முளங் கலங்கினர் புலிங்கவெங் கணையா
லிலங்கு கங்கருஞ் சிறையிலாக் கங்கமொத் திரிந்தார்
வலங்கொள் வங்கரும் வங்கமே குடியென வதிந்தார். (கச)

மகதர் மாகத ராயின ரடியிணை வழுத்திப்
பூகுக டாரர்க டாரமே யிழந்தனர் போனுர்

தொகுதி கொண்டபாய் மாப்படைக் கவுடர்போர் தோற்று
மிருப சிப்பிணிக் கவுடதந் தேடியே மெலிந்தார். (கரு)

உய்ந்தி டப்பகைக் குசலரு மசலமூற் றெளித்தார்
வந்தி கற்களம் புகுந்தவர் யாவரு மடிந்தார்
சந்தி ரக்குலத் துதித்தர னருள்பெற்ற தடந்தோ
ளிந்தி ரத்துய்மி னற்கெதிர் யாவர்சென் றேற்றார். (கசு)

நாவ லம்பெருந் தீவிற்றன் னாணையி னடவாக்
காவன் மன்னரை யிவ்வணங் கட்டறக் கடிந்து
தேவ ராலயப் பொன்மலை வடதிசைச் சென்றான்
மேவ லாருறை விறலியந் தீவினை வெல்வான். (கஎ)

வேறு.

உறுப தாதியோ டுவர்க்க டல்கடந்
திறைவி மானமேல் விறலி யென்றதீ
வறைத டந்திறை யருணை மாநதித்
துறையி னண்ணினான் சூடும் வேம்பினான். (கஅ)

அங்கண் வைகிய வரசர் யாரையும்
வெங்க ளத்துநீர் வென்று வம்மெனத்
தங்கு சேனையை யேவித் தாழ்ந்திடாத்
துங்க மன்னரூர் தூளி யாக்கினான் (கக)

நீடு மந்நதி நின்று மாமணி
கூட மால்வரைக் குடுமி யெய்தினான்
காடு நாடுமாக் கரந்த மன்னர்பே
ரோட வென்றவ ருயிரை வாங்கினான். (உ0)

மால்வ ரைக்கிருட் டிணைம ருங்கினிற்
கோல மாமணி கூட னாதனென்
றேலும் பேர்புனைந் திலிங்க மொன்றமைத்
தால கண்டனை யருச்சித் தேத்தினான். (உக)

அந்ந திக்கரை யமர்ந்த காசிபன்
பன்ன சாலையின் பாங்கர் சென்றவன்
பொன்னஞ் சேவடி முடிபு னைந்தனன்
றுன்னு சீலனின் றுசி சொல்லினான். (உஉ)

ஞான வற்புத நாட்ட மொன்றினுன்
மான விற்கையான் மரபு நாடினுன்
றேனு வைக்கொடு சேனை சூழ்தரு
மீன வற்குநல் விருந்த ளித்தனன். (உங)

நீதி மன்னனே டளவ ளாய்நிறை
சீத ளக்களாச் சிவனைப் போற்றுவான்
போது நாளையென் றிதுபு கன்றனன்
கோதில் வெஞ்சியா னென்று கூறுவான். (உச)

வேறு.

அத்தல மகத்துவ மறிந்தெவ ருரைப்பார்
மெய்த்தவ மியற்றின்மனம் வேட்டன கொடுக்குஞ்
சித்தமென மன்னனுரை செய்யவது கேளா
வுத்தம முனிக்குரிசி லுள்ளமகிழ் வெய்தி. (உரு)

வேந்தைமறு நாளினில் விடுத்துவிரை மென்பூ
மோந்தலை திரட்டுமறை முச்சுனை படிந்து
வாய்ந்ததிரு முக்களவி னுதனை வணங்கப்
போந்தனனந் நாணெறி புகுந்துமறை வல்லீர். (உசு)

வேறு.

அலகின் மெய்த்தவக் காசிபன் விடைகொடுத் தனுப்பக்
குலவு மாற்றல ருயிர்கவர் கூற்றெனக் கொதியா
விலகு வேலா சிந்திர சேனவெற் பிடைநின்
றுலவி யோடமோங் கீரச நதிக்கரை யுற்ருன். (உஎ)

அன்ன திக்கரை யிருமருங் கினுஞ்சிறப் பாக
மன்னு சீர்ச்சவு பத்திர தேசமன் னவருந்
துன்னு சாந்தமே சத்துறை நிருபருந் துவங்கித்
தன்ன தாந்திறை யளந்தடி தொழக்கதந் தணிந்தான். (உஅ)

கணங்கொள் வேலனுங் கீரச முனிதனைக் கண்டு
வணங்கி நின்றுபின் சசிசுதா தேவியை வணங்கி
யிணங்கு நற்கதை யிருந்தவ னுரைத்தனன் கேட்டுப்
பணங்கொள் பாப்பணி மோலியான் முக்களாப் பரப்பின். ()

உறையு மத்தல மகிமையை மன்னவ னுரைப்ப
நிறைத வத்தினு னேசித்துக் கேட்டுளங் கனிந்து

கறைய யிற்படை வேந்தனை யனுப்பியக் கணத்தின்
மறைநி லைத்தமுச் சுனையைவந் தடைந்தனன் மறையீர். ()

வேறு.

அருந்தவ னுகு மாங்கீ ரசமுனி யனுப்ப வாழி
யிருந்தரை முழுதுங் காக்கு மிசைத்தமிழ் நாட்டு வேந்தன்
பெருந்திரை சுருட்டுஞ் சாவித் திரியெனும் பெரிய வாற்றிற்
பொருந்தின னத்தே சத்தி லுத்தம னெனும்போர் வேந்தன்.

தென்னவன் வாவு கேட்டுச் சிறந்தநற் புகல்வி மாராம்
பன்னிரு பெயர்தம் மோடும் வந்தெதிர் பணிந்து போற்றி
யின்னவர் தமையுன் மைந்த ரீராறு பெயரும் வேட்க
நன்னயம் புரிவா யென்ன நன்றென மகிழ்ச்சி கொண்டான்.

முத்தவெண் ணகையார் தம்மை மைந்தர்க்கு முறையே வேட்டான், கைத்தல மீது நெல்லிக் கனியொன்று கிடைத்தாற் போல, வுத்தமன் மகிழ்ச்சி பெற்று னரசனு மூவந்து நோக்கிச், சித்தமின் புற்று நாளுஞ் சீரிதின் வாழி யென்றான்.

மேதையைப் புகழ்மே தாவி விருப்பொடு வேட்டு மேனுண்
மாதுரோ கணியை மேவும் வானக மதியை யொத்தான்
றீதிலாப் புண்ய கீர்த்தி சுகீர்த்தியாந் தேனை வேட்டுப்[ருன்.
போதில்வாழ் மாதை மேவும் பொருவின்மா தவனைப் போன்

புண்ணிய சுலோக னென்போன் கருணையாம் பொன்னை வேட்டு, வண்மைசேர் சாவி மேவும் வசிட்டமா தவனைப் போன்றான், பெண்மன சுவினி மின்னைத் தயாநிதி பெட்பின் வேட்டு, வெண்ணகைச் சசியை மேவு மேகவா கனனைப் போன்றான். (௩௫)

காவலன் குசல னென்போன் கலியாணி தன்னை வேட்டு
மாவடுக் கண்ணி சாவித் திரிசத்ய வானைப் போன்றான்
றாவிலா விமலன் மேன்மை தருசா சுபதி மேவப் [ன்.
பூவுறை செஞ்சொன் மானைப் புணாதிசை முகனைப் போன்று

வேறு.

கொற்ற வீரன்மே தகுசய லக்குமிக் கொடியினை மணஞ்செய்து, கற்றை மாமலர்க் காமவல் லியிற்றிகழ் கற்பகத் தருவொத்தான், வெற்றி வேற்படை விசுருதன் சுருதியா

மெல்லியல் காம்பற்றி, யுற்ற தேன்மழை சொரிதரும் போது
வேட் டொளிர்மணிச் சுரும்பொத்தான். (௩எ)

பரவு சீர்க்குலசேகரன் சுமதியாம்பசும்பிடி தனைமேவி, யரிமு ழுங்குசெங் தாமரை மலர்த்துகை யாதித்தன் றனைப் போன்றான், றெரிவை வங்கிச வதிதனைச் சித்திர சேனனின் புறவேட்டு, மரும லர்க்குழ லாள்சத ரூபியை மருவிய மனுப் போன்றான். (௩அ)

பொருவி லாதசு சீலையைச் சித்திர ரதனெனும் போர்வேந்தன், மருவி யோகமார் சித்தியா லானந்தம் வாய்த்த யோ கியைப்போன்றான், றருவி கர்த்தமார்த் தாண்டனுஞ் சுப்பிர சன்னையை மணஞ்செய்து, பரவு பாதலப் பணிமணி யழுத்திய பசியபொற் கலன்போன்றான். (௩கூ)

ஊனு லாவுவெள் வேல்வலத் தேந்திய வுத்தமன் முக னோக்கிச், சேனை யங்கடல் சூழ்தர வெழுந்துநின் றேயத்தே குதியென்றான், மீன கேதன மன்னனீ பொருதிக்கு விசய வெஞ் செருக்காண்பான், போன திக்கெலாம் வருவல்யா னென்றன னிசைந்தனன் புகழ்வேந்தன். (ச0)

**வேறு.**

ஓவி லாப்புக ழுத்தம வேந்தனும்
பாவு பல்படைப் பன்னிரு மைந்தருந்
தாவு வெந்திறற் றானையுஞ் சூழ்தரத்
தேவ மானமேல் வான்வழிச் செல்லுழி. (சக)

துஞ்சி டாப்புக ழிந்திரத் துய்மினு
மஞ்சு போற்படர் தானவ மாப்படை
வெஞ்சொ லாளி முகன்பொர விறலிற்
றஞ்சி னேமென் றமர ராற்றினர். (சஉ)

தோமி லாச்சுரர் சொற்றிடு வாய்மொழி
சேம வேற்படைத் தென்னவன் கேட்டலும்
பாம ரக்கொடுந் தானவர் பாறிட
நாம வெஞ்சிலை நாணெறிந் தானரோ. (ச௩)

வளைய வாங்கினன் வார்சிலை தானவர்
நெளிய வாயு நெடுங்கணை தூண்டலுந்

தளையு மப்படை சாயவத் தானவ
னளைய ராக்கணை யாலறுத் தானரோ. (சச)

காற்று வெங்கணை மாற்றிக் கடுவிட
மூற்று நாகக் கணைவர வொல்லையி
லேற்று வார்சிலை யிந்திரத் துய்மனன்
போற்று காருடத் தாலது போக்கினன். (சரு)

கண்ட தானவன் கண்கனல் சிந்திட
வண்ட ரஞ்சுறு மாசுர வெங்கணை
மண்டி யோடத் துரந்தனன் வானவழி
யெண்டி சாமுக மெங்கு மிருண்டதே. (சசு)

நிலைப டாவிரு ணேர்பட நோக்கிய
விலைகொள் வேலர சிந்திரத் துய்மினன்
கலைப டாதட ராசுரக் கார்க்கணை
தொலைய ஞானச் சுடர்க்கணை தூண்டினுன். (சஎ)

சங்கை யற்ற சமர்செய்த தானவன்
வெங்க ளத்தெதி ராடிய மீனவன்
புங்க வத்திரத் தாலுடல் போக்கிவான்
மங்கை யர்க்கு மணாளனு மாயினுன். (சஅ)

தலையற் றூர்சிலர் தாள்களற் றூர்சிலர்
சிலையற் றூர்சிலர் தேர்களற் றூர்சிலர்
நிலையற் றூர்சிலர் நின்றவர் பொன்றினூர்
மலையச் சாரல் வழுதிகை வாளியால். (சகூ)

ஆளி வத்திர ணுக்கையு மற்றவர்
மீளி பெற்றபொய்த் தானவர் மெய்களுங்
கூளி கட்குண வாக்கிய கூன்சிலை
வாளி யொப்புற நாண்விட்டு வாங்கினுன். (ருO)

ஈன மெய்க்கருந் தானவர்க் கீறுசெய்
தான வக்குலத் தானவன் மீனவன்
மேனி யுற்ற வியர்ப்பினை மாற்றினூர்
வான கத்தவர் தேமலர் மாரியால். (ருக)

ஆதி மான்கரத் தாக்கியைப் போற்றிசெய்
நீதி மானெறி மானெடு வான்மதிச்

சாதி மானதிச் சாவித்திரி பெற்ற
சோதி மானெனும் வெற்பிடைத் துன்னினன். (ருஉ)

தாம மாமணிச் சாவித் திரிக்கரைச்
சேம தேசத்து மன்னவர் தென்னவன்
மாம லர்க்கழல் சென்னி வணங்கிமுன்
பூம லர்க்கையிற் பொன்மலர் தூவினர். (ருங)

சுரர்க ளிப்புறு தூம்பிர வன்னமாம்
வரைகி ழித்து வருசத் தியவதிக்
கரையி னிற்செல் கௌரியன் மாதமொன்
றரசர் பற்பல ரஞ்சிட வைகினன். (ருச)

உரைகண் டார்புக ழோங்க வெழுந்துபோய்
வரைகண் டான்பல மால்வரை யாறுபாய்
நிரைகண் டான்பல நீள்கருப் பங்கடற்
கரைகண் டானுவ கைக்கரை கண்டிலான். (ருரு)

வேறு.

மன்னவர் மன்னவன் மான மேற்கொண்டு
கன்னலங் கடலினைக் கடந்து சான்மலி
யென்னுமத் தீவில்வந் திணையி ன மேருவின்
றன்மையா வளர்ந்துபொன் றழைக்குஞ் சன்மலி. (ருசா)

தருவினைக் கண்டுபொன் றயங்கு பூமியிற்
பெருநவ மணிமயம் பிறங்கி யோங்கிய
கருடனு லயந்தனைக் கண்டு தாழ்ந்து போய்ப்
பரமன்னர் யாவரையும் பணியப் பண்ணினன். (ருஎ)

மதியிர சனிசினி வாலி நந்தைவான்
றுதிபெறு குகுசர சுவதி யாவர்க்கு
மிதமுறு வாகையா றேழு மாடியே
கதுமென மதுக்கடற் கரையி லெய்தினன். (ருஅ)

அம்மதுக் கடல்கடந் தணிவி மானமேற்
செம்மல்பொன் னொளிர்குசைத் தீவை யெய்தினன்
வெம்முனைத் தரியலர் வெள்கி வந்துபொன்
மொய்ம்மணித் திரைதா முறுவல் கோட்டினன். (ருகூ)

இழுமெனத் திரைபொரு மிரச குல்லியைச்
செழுநதிக் கரையினைச் சேர்ந்து சேரலார்
முழுமதி லரணமும் வலியு முன்னினான்
பழமறை நாதனைப் பணியுஞ் சென்னியான். (கூ௦)

மதிருடன் கவிருகி நாவி மாமனு
வதிர்கழற் சத்திபா மாறு வேந்தர்க்குங்
கொதிசினக் கடுங்கணை குலவு மெண்டிசை
பொதிர்படத் தன்பெயர் பொறித்துப் போக்கினான். ()

வந்தவச் சுடுசர நோக்கி மன்னவர்
சிந்தையிற் கலங்கினர் செருவுக் கஞ்சுவார்
தந்தமக் குளவெலாந் தந்து மைந்தரை
முந்துற விடுத்திட முனிவு மாற்றினான். (கூஉ)

வேறு.

மழைத்தடக்கை விறல்வழுதி வாய்ந்தமனு குல்லியையாஞ்
செழித்தநதிக் கரையடைந்து திருடவிரு தரைச்சிறித்
தழைத்தெழுசக் கரசிருங்கக் கொடுமுடியைச் சார்ந்ததன்மே
விழைத்தனிசந் திரகாந்தத் திலிங்கமமைத் தருச்சித்தான். ()

தருநிறைசக் கரசிருங்கத் தடவரையை விட்டகன்று
பெருகியமித் திரபிருந்தைப் பெருநதிதீ ரத்திலென்றும்
விரவுகவிந் திரான வேந்தர்தமைப் பணிகொண்டாங்
கரனருள்பெற் றுயர்கபில னாச்சிரமங் கண்டணைந்தான். (கூச)

உவந்துதொழு தெழுந்தவென்றி யுடையானை யெதிர்நோக்கிச்
சிவந்தசடைப் பரம்பொருளின் றிருவருளா லுலகமெலாங்
கவர்ந்துபுரந் தனையிருந்து களித்திளைப்பா றுதியென்று
நிவந்ததவ முனிவிருந்து நேரநுகர்ந் தங்கிருந்தான். (கூ௫)

அங்கிருந்த கபிலமுனி யருமறைமுக் களவிலுறை
சங்கரனைச் சேவைசெய்து தாள்பணிய வாஞ்சித்தோ [துப்
மிங்குநின்றங் கேகுதுமென் றிசைத்திறைக்கு விடைகொடுத்
பொங்குமன மகிழ்ச்சியொடும் போந்தனனந் நாண்மறையீர்.

வேதமுனி வனைவலஞ்செய்திறைஞ்சிவிடைகொண்டெழுந்து
காதுபெரும் படையோடுங் கபிலவரை கடந்தப்பாற்

சீதமலர்ப் பொழிலோங்குஞ் சித்திரகூ டத்தடைந்தங்
கோதுபுகழ்ச் சத்தியர்தம் வீரசத்தி யொடுக்கினான். (சுஎ)

அவ்வரைநின் றெழுந்தொழுகியறைதிரைநெய்க்கடல்கிழிக்குஞ்
செவ்விதரு சுருதிவிந்துத் திருநதிநீ ரத்தடைந்து
வெவ்வியவே ஞபியராம் வேந்தரிகல் வென்றடக்கிக்
கவ்வைதரு திரைசுருட்டுங் கருப்பைநதி படிந்தகன்றான். ()

வளைமுழங்குங் கிருதச்சு மாநதிசேர் தங்குறையுங்
கிளைநிருபர் சொரிந்ததிறைக் கிரிபார்த்து நகைபூத்து
மிளிர்சிகர வுரத்துவரோ மாவென்னும் வெற்பேறித்
தளையவிழ்தார்ப் புயமன்னர் தாள்பிணையத் தளைபடுத்தான்.

மதுருகமாம் பூமிவனற் பதியிருடிச் சோதிவளத்
ததிகலங் தருகிருத பிருட்டமெனு வைவகையாத்
துதிதருதே சத்தரசர் துணைக்கரப்பங் கயங்குவித்து
நிதிசொரிந்து பணியமதி நெடுமரபை நிறுத்தினான். (எ0)

இடபமுப பருகணநற் சுதர்மைவர்த்த மானமெனுந்
தடவரைநான் கினும்புகுந்தத் தடவரைநின் றிருகரையு
மடரமிர்தோ தகையபைய தீர்த்தவதி யாரியைசீர்
படர்தருநந் தகையென்னு மைந்தாறும் படிந்தகன்றான். (எக)

தனற்பதிபோல் வணங்குமன்னர் தம்பதிக்கு வளநிறைத்துப்
புனற்பதியா வளம்பொருந்தும் பொருந்தாதா ரூரெல்லாங்
கனற்பதியாம் படிகனன்று கட்டுகளை கழற்காளை
வனற்பதிமா நதிசேர்ந்து வைகல்பல வைகினான். (எஉ)

அக்காலஞ் சிவநிசிவந் தணுகுதலு முக்களவை
யெக்காலும் பிரியாத விறைபெயரா லிலிங்கமமைத்
* துக்காள்கைத் தடத்தானை யுலகாள்பற் றிடத்தானைத்
திக்காடை படைத்தானைச் சிவக்கொழுந்தை யருச்சித்தான். ()

அயிர்கிடந்த வனற்பதிப்பே ரலையாறு பின்னிடவெண்
டயிர்கிடந்து திரைசுருட்டுந் தடங்கடலைக் கடந்தேறிச்
செயிர்கிடந்தார் கெடச்சாகத் தீவிலணைந் தானென்று
ருயிர்கிடந்து பதைபதைப்ப வுடல்குடைந்த சுடர்வேலான். ()

---

* உக்கு - நெருப்பு.

சாகத்தீ வினிலெழுந்த சருவதோ பத்திரமா
நாகத்தீ விளையாடு நருச்சோலை பலகடந்து
சோகத்தீ வினைதுடைக்குஞ் சுக்கிலமா நதிபடிந்து
வேகத்தீ விறலரசர் வெருக்கொள்ளச் செருக்கொண்டான். ()

வந்ததிற லார்மடிய வார்குருதி நிறைந்ததனு
ணந்ததிர்வெண் டயிர்க்கடலு நனிசிவந்த தடையார்பாற்
கந்திரப் பொரும்வேழக் கழற்கருணா கான்பயந்த
சந்ததியாம் பிரைசாரத் ததியான தவர்மனப்பால். (கூசு)

தோலாத மன்னவருந் தோற்றடைந்து திறைசொரியச்
சேலாருங் கொடியுயர்த்த தென்னவன்மா னத்தேற்றி
வேலாழி வாளாழி வில்லாழி புடைசூழப்
பாலாழி கடந்தடைந்தான் படர்பெரும்புட் கரத்தீவில். (எஎ)

புரவேகஞ் சிதையநகை பூத்தபிரா னருள்படைத்தோன்
சரவேகச் சுடுபொறிச்செந் தழற்சிகையாற் கழல்பரவார்
பரவேகப் பெருந்தேசம் படர்சுடலைப் பொடியாக்கிக்
கரவேகத் திரைவனகைக் கண்ணகன்பொற் கரைசார்ந்தான்.

வேறு.

அம்மாநதிக் கரைவைகிய வடையாரை யடக்கிக்
கைம்மாமலை கவனப்பரி காலாட்கடல் சூழ
மைம்மாரியைப் பொருமாறன் மனோவேக மெனும்பேர்ச்
செம்மானிலத் தொன்னார்சொரி திறைகண்டவ ணகன்றான்.

இறைவன்பயி லீசானதிக் கெதிர்நோக்கி யிறைஞ்சி
நறைதங்கிய பலபத்திர நாகத்தினி லெய்தி
யறைபைங்கழ லமரார்பய மகல்வித்தவ ணகன்று
னிறைதங்கிய தூமான நெடுந்தேச நடுங்க. (அ0)

அந்நாட்டவர் தென்னாட்டர சனுகுந்திற னறிந்தார்
கன்னாட்டிய வீவார்பெருங் கடற்றானையி னோடு
மைந்நாட்டிய கானோங்கிய வழியெங்கு மடைத்தா
ரெந்நாட்டையும் வென்றானிவ னெனவெஞ்சினங் கதுவி. ()

அழிகண்டகர் புரிவஞ்சனை யார்சொல்லவும் வல்லார்
மொழிகண்டசெந் தமிழ்நாடனம் முனிகானிடை வந்தான்
சுழிகண்டெறி திரைநீர்த்தடந் துறைகண்டெழு கடற்கும்
வழிகண்டவ னதிலெய்துறும் வழிகண்டில னம்மா. (அ௨)

அதுகாலையின் முரசார்த்தன வளையார்த்தன வவர்வாய்க்
கொதிகால்குரற் றெழியார்த்தன குனிக்குஞ்சிலைச் சிறுநாண்
முதிர்கார்மழை யெனவார்த்தன முதுகூடகன் றுருவக்
கதிர்கால்கணை பலகோடி கலந்தெய்தின மன்னோ. (அங)

முறிகால்வனத் திடைமாற்றலர் முடுக்குங்கடுங் கணையாற்
றறிகால்கொடு சிதைக்குங்கரி தகைவாட்படை யஞ்சி
வெறிகானறைத் தொடைமீனவன் விலக்குந்தொறு நில்லா
தெறிகால்படுங் கடலாமென விரிந்தோடின மன்னோ. (அச)

தூமானர் சினப்போரிடை தொலையாப்படை தொலைய
மாமான நிறுத்தத்தனி மானத்திடை நின்றான்
றீமான்மறி கரத்தேயுறத் திருமுக்கள வுறையுங்
கோமானருள் கணநாதரைக் கணத்தேபொரக் குறித்தான். ()

மருப்புப்படைத் துறைதிக்கய மலைப்புப்படைத் தயா
நெருப்புப்படைத் திடுகண்களு நெடுமூச்செறி விசையும்
பெருப்புப்படைத் திடுகால்களும் போழ்வாய்ப்பிறை யெயிறும்
பொருப்புப்படைத் தெனவந்தன பூதப்படை மாதோ. (அசு)

குறுத்தாட்பெரும் பூதப்படை கொடுங்காளகம் வேரோ
டிறுத்தார்த்தெழு மமரார்படை யிரியச்சிர நெறியச்
செறுத்தார்த்தவி னடித்துக்கிரி செந்தூள்படப் பொடித்துக்
கறுத்தாற்றிய வழியெங்கணும் வெளிகண்டன கணத்தில். ()

நெய்யாற்சுடர் சிகைவிட்டெரி நெருப்பாமெனச் சீறி
யெய்யாத்திறல் புரிபாரிட விகலாரெதி ரிகல
மெய்யாற்பலர் வாயாற்பலர் விசையாற்பலர் வீசுங்
கையாற்பலர் காலாற்பலர் கதையாற்பலர் மடிந்தார். (அஅ)

பூண்பெற்றுயர் புயபூதர பூதப்படை புக்குச்
சேண்பெற்ற கொடுங்கானிடை சிதையாப்படை சிதைப்பத்
தூண்பெற்ற தடந்தோளிறத் தூமானனக் காட்டு
மாண்பெற்றிகல் விறன்மன்னர் மலைந்தாருயிர் மாண்டார். ()

நாப்பற்றிய தழலோமுழை நாசிச்சுழ லழலோ
கோப்பற்றிய கனலோகணங் கொழுவப்பட ரனலோ
போய்ப்பற்றிய தெதுவோதிரி புரமுற்றிய செயல்போற்
றீப்பற்றி யெழுந்தொள்ளிய நீருணதத் தேசம். (஌௦)

மிகையாயின கணநாடுபு விழிமூடி விழித்தா
னகையாயின பிறைதோற்றிட நகுசாரதப் படையாற்
பகையாயின கெடமற்றவர் பரிக்கும்பல நாடும்
புகையாயின தழலாயின பொடியாயின கண்டான். (கூக)

வேறு.

இறையவன் விரிதூ மான மென்னுமத் தேசத் தெய்தி
நறைமலர் திரட்டி யோடும் பார்சிதை நதியை நண்ணி
யறைகழற் கணங்க ளான்முன் றுருயிர் வீந்த வேந்தர்
சிறுவர்க்கு மகுடஞ் சூட்டித் திறைதர முறுவல் பூத்தான். ()

வருசத கேச ரைப்பேர் மாநதி படிந்து போந்து
திருமகள் களித்துவாழுஞ் சித்திர ரததே சத்தி
லரசரைச் சமரில் வெல்வான் சதசிருங் காச லத்திற்
பெருகிய பார்சி தைப்பேர் பெறுநதிக் கரையில் வந்தான். ()

பூவலைக் கரத்தி லேந்திப் போதுமங் நதிதீ ரத்துக்
காவலர் சினப்போர் வென்று கயனெடுங் கொடிகின் றூட
நாவலர் புகழும் பஞ்ச நதிக்கரை தனிலோர் மாதம்
வாவுமாத் தானை சூழ வழுதிவங் திருந்தான் மன்னே. (கூச)

சித்திர ரததே சத்துத் திறல்வெகு ரூபி யாகு
மத்தமால் யானை வேந்தன் வந்தில னின்னு மென்று [றக்
முத்தமிழ் நாடன் செவ்வாய் முறுவலின் வெளுப்புத் தோன்
கைத்துளங் கறுப்ப வோடிக் கடைககண்கள் சிவந்த மாதோ.

குருதியோ டொளிரும் வெள்வேற் கொற்றவன் பற்றுன் முன்போய்ப், பரிதியோ மதியோ வென்னப் பன்மணி திகழ் பொன் மாரி, தருதியோர் வரைமே லோடிச் சார்தியோ சாரா தேற்றுப், பொருதியோ புகறி யென்று புகல்கெனத் தூது வி ட்டான். (கூரு)

தென்னவன் விடுத்த தூதர் சித்திர ரததே சத்து
மன்னவன் முன்ன ரெய்தி வருதிறன் வகுத்துக் கூற
வன்னவன் கேட்டுச் சூழு மமைச்சரை நோக்கி மாற்ற
மென்னென வினவி னுனங் கொருவனீ திசைப்ப தானன்.

நாவலந் தீவி னுள்ள நவகண்டத் தொருபால் வேந்தன்
மாவலம் புரிசி லாவும் வாரிதி பலவும் வாவிப்

பூவலர் தருதி வெங்கும் வென்றிங்குப் போந்தா னென்று
லாவலங் கொட்டிப் போர்மே லடுத்தலை விடுத்த னன்றால். ()

முனைமுகத் தெதிர்ந்த மன்னர் முறிந்துபோர்க் குடைந்த தல்லான், மனவலி படைத்து வாகை வனைந்தெதிர் வென்றோர் யாரே, சினவுறு வேகந் தீரத் தென்னவன் முன்போய்த் தூசுங், கனகமுங் கொடுத்துப் போற்றி வருவதே கருமமென்றான். (கூகூ)

மற்றுள வமைச்சர் தாமு மன்னதே வாய்ப்பா மென்று, சொற்றிடக் கேட்டவேந்தன் றுடித்திதழ் முறுவல் பூத்துக், கொற்றம்வெங் கரிக்குண் டாமோ கோளரிக் குண்டோ கோட்டம், புற்றலர்ச் செருப்ப தல்லாற் பணிவரோ வீர ரென்றான். (க00)

தகட்டுவாள் பிடித்து மஞ்சித் தாழ்வனே லொன்னார் மின்னு
ரகட்டுவாழ் கருவு மின்று மஞ்சுமென் னுணை யென்னும்
புகட்டுதி விடம்போற் கூறேல் பொருபடைகுழும நால்வாய்ப்
பகட்டுயர் பிடர்மே லேற்றிப் பணைமுர சறைக வென்றான்.

விரைசெறி நறுந்தார் வேந்த னேவலால் விண்ணு மஞ்ச
முரசெறி முழக்கங் கேட்டு மூதண்டந் தூளி போர்ப்பப்
புரைசமா களிறுந் தேரும் புரவியும் பொருகா லாளுந்
திரைசெறி கடல்வந் தென்னத் திசைவெளி யடைத்தமாதோ.

வேறு.

இருமருப்பினும் விசித்தவாண் மின்னொடு மெழிசெவிக் காலோடுஞ், சொரிமதப்பெரு மழையொடு மிடியடர் தொனியொடு நனிவந்த, சருவி றத்தறு கட்சிறு கட்கறைக் காத்திரப் பணைப்பூட்கைப், பருமணிச்சுட ரோடைபூண் மத்தகம் படைத்தகார்க் குலமம்மா. (க0௫)

நெருங்கு வாய்நுரைச் சீகரத் தானில மடந்தையை நீராட்டி, யாங்க மேற்படர் சோலர்ப் பழுமாஞ் சாய்த்தடர்த் திடச்சூழ்ந்த, விரங்கு மாமணிச் சதங்கைபல் லணத்துட னிசைக்கவி னமும்பூண்டு, தரங்கம் வீழ்ந்தெனச் சிரங்கவிழ் துரங்கமாஞ் சண்டமா ருதமம்மா. (க0௪)

பரிதி சுற்றுறத் தெற்றுபு நிமிர்ந்தபொற் பசுங்கொடி துவண்டாட, விருநி லத்திடை மேருவொன் றநேகமா யெழுந்

தன போல்வந்த, மருவ லர்க்குளங் கொதித்திடக் கதித்தெழும் வயப்பரி பலபூண்டு, சுருதி பெற்றுமுன் கடவிய சூதராற் சுலவுதேர்க் குலமன்னே. (க0ரு)

சிறைப டப்புடை படர்தரு மிகற்பெருந் திடர்கரைத் தெதிர்மோதிக், குறைப டுத்துற மச்சமேற் றவர்க்கெலாங் கொடுத்திடும் படிகூட, வறைத னிக்கழன் முழக்குற விழிக்கடை யூழித்தீ யனல்சிந்தக், கறைது ளித்தெறி யுறைகழித் தேந்துவாட் காற்படைக் கடலம்மா. (க0சு)

சீற்ற வெஞ்சமர் வேட்டெழு சதுரங்க சேனைகள் புடைசூழ, வீற்று வீற்றுவெண் சாமரை துயல்வர வெற்றிவான் கொடிதுற்றக், கூற்று மஞ்சுறும் விறல்வெகு ரூபியாங் கொற்றவ னிணைக்கோடு, தோற்று கைம்மலைப் பிடரின்மேற் கொண்டனன் பேரிதுந் துபியார்ப்ப. (க0எ)

இடந்து டித்தது தடம்புயம் விழிக்கடை யிவுரிபூட்டிய தேரின், வடக்கெதிர்த்தன முந்துகான் மடிந்தன வயப்பரி மதவேழ, நுடங்கு கேதன மிற்றன சூறையி னுண்டுகள் படைபோர்த்த, குடம்பை நின்றெழுந் தடிக்கடி கரைந்துகார்க் கொடிபல விடம்பாய்ந்த. (க0அ)

வேறு.

இருவ கைப்படையு மெதிர்சி னத்துருமி டித்தெ னச்சமர்செ யேல்வையிற், கரம றுத்தபல சிரம றுத்தபல கரிய றுத்தபல கவனவாம், பரிய றுத்தவெளி முகடு முட்டியெதிர் பட்ட தேர்பொடி படுத்தின, விருது கட்டுபல கொடிய றுத்ததமிழ் வேந்தன் விட்டபிறை விசிகமே. (க0கூ)

கல்வி யங்குபுய வீரர் சோரும்வகை காயம் வெள்ளிடை படர்ந்துருக், கொல்வி யங்குகணை மொய்ப்ப முட்பொதி குடப்பெ ருங்கனி நிகர்த்தனர், வல்வி யங்களெதிர் பாய்வ போன்றன விரத்தம் வார்தரு வயப்பரி, * சல்லி யங்கள்பல நின்ற போன்றன சரம்பொ திந்தமத தந்தியே. (கக0)

ஆல மாலமடு கூற்ற மாமெண வடர்த்த மாற்றல ரிடைப்புகாக், காலி னூடுசிலர் கதைசு ழற்றியடர் கையி னூடுசிலர் வெய்மதாம், வாலி னூடுசிலர் வாயி னூடுசிலர் வயிர வாட்ப

* சல்லியம் முட்பன்றி.

டை விசித்தவெங், கோல நீடுமிரு கோட்டி னூடுசிலர் பொன்ற நின்றமத குன்றமே. (கககக)

பாற்றின் வேகமு மிமைக்கு முன்னர்விரி பார டங்கலும் வளைத்திடுங், காற்றின் வேகமு மனைத்து நாடிய கருத்து வேகமொடு பின்னிடத், தோற்ற பேர்களுயிர் போற்றி யோட வெதிர் சுற்றி நின்றமர் விளைத்திடு, மாற்ற லாருயிர் குடித்து நாற்றிசையும் வட்ட மிட்டகன வட்டமே. (கக௨)

கொற்ற வெண்குடைகளம்பி யாகமத குஞ்சரப் பரிய கோடுகள், ப்ற்றி வீசுறு துடுப்பெ னக்கரை படக்கு விந்துயர் பிணத்திடை, யுற்ற சோரிம கரால யத்தினில் வியந்து வப்பவுயர் கூளிக, டுற்று சிற்றலகை யோட மிட்டுவிளை யாடி மூட்டியெதிர் துள்ளுமால். (கக௩)

குருதி யுண்டுபெடி கொடிசி வந்துகுடர் நால வாயினிடை கொற்றிய, நிரைத ரும்படி யெழுந்த *கம்பல விதான மாகவத னீழலிற், கருத லார்கள்சது ரங்க சேனையு மெதிர்ந்து பொன்றிய களத்திடை, யரிசி ரந்தரையின் விழவி ழாவகை கவந்த நின்றுபல வாடுமால். (கக௪)

வந்தெ திர்த்தவெகு ரூபி முன்னர்வரு சேனை சீறிவரி வில்லிடை. வெந்தி றற்கணைகள் கோடி கோடிதனி தனிதொடுத் தெதிர்வி டுத்தனர், செந்த மிழ்ப்பொதிகை மன்னர் மன்னன்விழை சேனை கண்டுநகை செய்தனர், சுந்த ரப்பகழி நூறு நூறுமுறை விட்டு விட்டவை துணிததனர். (கக௫)

வீர ரேவிவை விலக்கி யின்னுயிர் தரித்து வாழ்திரென வெங்கணை, சேர லாரிலஃதி சூரர் கண்கனலி சிந்த நின்றெதிர் செலுத்தினார், கோர மாகவரல் கண்டு வெய்யகணை விட்டறுத்துவிறல் கொண்டனர், காரெ ழாதுதளை யிட்டு வைத்தவொரு கௌரியற் பரவு சவுரியர். (கக௬)

புலவு கொண்டகர வீர மேந்தியிரு வோரு நின்றுபொரு காலையிற், பலகை கொண்டுதம தவய வங்களை யொளித்து விண்ணினிடை பாய்ந்துபோந், தலகில் விஞ்சைகள் பயிற்றி நின்றுவரு மற்ற நோக்குவ ரனற்பொறி, யிலகு கண்களிடை காணு ருவகை யெழுந்து சாரிகை, திரிப்பரால். (கக௭)

---

* கம்பலம் மேற்கட்டி.

மீறு போரினிடை வழுதி கூடவரும் வெய்ய பாரிடம் விரைந்துசென், றூறு செய்யும்வெகு ரூபி வேந்துபடை யூடு தாவியடர் வேலெயி, லாறு நூறுகணை சார தங்களிரு தோளின் மார்பினி லழுந்திடச், சீறி நின்றுவரி வில்லி லேற்றிமழை வந்த போலவெதிர் சிந்தினர். (ககஅ)

தீயின் வெய்யகணை வாயி னேற்றலகின் மென்று மிழ்ந்துபொரு சேரலா, ராயு தம்பல வொடித்தெ றிந்துசிர மூளை சிந்த வடித்திடு, மேய வீரரிரு வோரை நேர்பட நிறுத்தி மூட்டும்வகை யெற்றிடுங், காய்கொ டுஞ்சின நெருப்பு கும்படி நெருங்கு சாரத கணங்களே. (கககூ)

நாக்கி லங்குசமிட் டிர்க்கும் வீசிநெடு நாட்டும் வீரர்தலை கீழுறத், தூக்கு நீடுதிசை போக்கும் வெங்குருதி துள்ள மார்பிடை துவைத்திடுந், தாக்கு மியானைகொடு தேரை மாவினிரை சாய வோடியெதிர் பாயும்வே, ளுக்கு மாவியுடன் மாற்றலார்விற லழிக்கு மேலெழு நகைக்குமால். (கஉ0)

தலைமை பெற்றதமிழ் மலய வெற்பரசு சமர்வி ளைத்திடு களத்திடை, மலைவு பெற்றுவெகு ரூபி மன்னவனு மற்ற வெற்றிவய வீரரும், புலவு துற்றுபல படையு மற்றரிது போற்று மாக்கையையு மாற்றியே, கலவி கற்றசுர மகளிர் பற்றவவர் கைப்பி டித்தனர் கணத்தினிலே. (கஉக)

மதிகு லத்தரசு பகைய றப்பொருது வருச கத்திர முகத்திரு, நதியை யுற்றுறையு மளவின் மொய்த்தமரர் நகைகொழிக்குமலர் சிந்தினீள், பொதிய வெற்பிறைவ தரணி முற்றுமிகல் பெருகி வெற்றிபல் பூண்டனை, துதிப டைத்துறைதி யென்ன வானினிடை சொற்றல் கேட்டக மகிழ்ந்தனன். (கஉஉ)

பொருதி றந்தவெகு ரூபி மன்னனருள் புதல்வன் வந்தடி வணங்கலும், வருதி யென்றுமுடி சூட்டி வாட்டமற வாழ்தி யென்றவ ணகன்று போய்ப், பரிதி பம்பவளர் தேவ பாலகிரி யெய்தி யோர்பகல் வதிந்துசீர்ச், சிரகை யென்றவள நாட கன்றுநதி திருநிசத் துருதி சார்ந்தனன். (கஉங)

மாத மொன்றளவு மந்ந திக்கரை வதிந்து நீணதி கிளைத்தெழுஞ், சீத ளந்தரும கான தக்கிரி வளங்கொள் கீழ்த்திசை

யி லெய்தினன், சாத ரூபவரை போன்று கன்னிகை தழைத்த பொற்கமல வாவிகண், டாத ரம்பெருக வாடி னனிக லறுத்து வாகைமலர் சூடினன். (க௨௪)

அன்ன வாகன னருந்த வம்புரியு மடவி கண்டுதொழு தக்கிரி, மன்னு தென்றிசையில் வந்து வானிரவி வைய முற்றவெழுவாசியு, நன்ன யம்பெற வடைந்து தாகமற நாளும் வரர்புன லருந்திடும், பொன்னம வாவியெதிர் கண்டு முன்றொழுது போற்றி யாடிவினை மாற்றினன். (க௨௫)

வெற்பின் மேற்றிசையின் வந்து கற்பமுறை வித்த கந்திக ழிலிங்கமொன், றற்பு தம்பெற வமைத்து முக்களவி லாதி நாதர்மெய ரோதியே, யிற்பு றும்படி யுவந்து பூசனைசெய் தேழு நாளதி விருந்தனன், மற்பு யாசல வுதார தீரனுயர் வானளாவுபுகழ் மீனவன். (க௨௬)

பூத ரத்தின்வட பால ணைந்துகுண பாலெ ழுந்துவெளி போதரு, மாத வக்கடவு டேரி டத்துருளு மாழி யொன்றுதனி தோற்றலுஞ், சோதி யுற்றவரை வீதி யுற்றுவரு சுருதி கண்டக மகிழ்ந்தனன், கோதொ ழித்தகயன் மேரு வெற்பினிடை கோட்டு தீட்டுதமிழ் நாட்டினன். (க௨௭)

ஈடி லாவரையி னின்றி றங்கியுய ரிரயணக் கிரியி லேறியே, தேடொ ணுதவள மிவ்வ ரைக்குள தெனத் தெளிந்துநிறை செம்பொனு, னீடு தூணமதி லொன்றொ டைம்பது நிறுத்தி யொண்புகழ் நிறுத்தினன், றோடு சூழவளி கோடி கூடியிசை தோடி பாடமலர் தொங்கலான். (க௨அ)

புருட ராகமணி வெயினி லாவுறும் வரைப்பு றத்தினி லிறங்கியே, கருட வேகமுறு மான மேறிவிரி சுத்த நீர்க்கடல் கடந்துபோய், வருடை பாய்திகிரி வாள மால்வரையின் வருட மைந்தளவும் வைகினன், முருடு வாய்ந்தலவு சாந்த மேந்தருவி முத்தமிழ்ப் பொதிய வெற்பினன். (க௨௯)

நீறு பூசுதிரு முக்க ளாமிழலி லத்த னைத்தொழ நினைத்திடா, வூறு மன்பினவ ணின்று மேழ்கடலு முட்பு றங்களில் விளங்குறீ, வாறு நீங்கினன் மகேந்தி ரக்கிரி யடைந்து சேனையொ டிறங்கினு, னேறு மாறுபுரி வீறு பாறிவரை யேறவெறினெது ரேறினன். (க௩௦)

வான ளாவிய மகேந்தி ரக்கிரியி னின்று மாதவ மியற்று வோர், கான மானதி னுவந்து வந்துமகிழ் கண்ணு வன்பழை ய காசிப, ஞான நீங்கிய வுரோம சன்சரண் வணங்கி யோங்கி யவ ராசியாக் தேனு லாவுசெவி வாய ருந்திவினை சிந்தின மரின் முந்தினன். (கங-க)

இத்த கைப்பெரு நலத்தி னோடுபுனை கருணை மாநகரி லெய்தியே, யத்த னன்னையிரு தாள்வ ணங்கியவ ராவ லோ டெழு விக்கொளச், சித்த மின்பமுற மற்றை யோர்க்குமுறை செய்ய வேண்டுவன செய்தபின், மெய்த்த தாதைதொழு தாதை தாதொழ விரும்பி னன்மகி ழருந்தினன். (கங-உ)

தெள்ளி முத்தமிழ் கொழிக்கும் விக்கிரம சிங்க மாநகரி லெய்தியே, யள்ளி லைச்சுட ரயிற்ப டைக்குரிசி லுதை தா தையடி போற்றிசெய், துள்ள நெக்குருகி முக்க ளாவிழவி லொ ருவ னைப்பணிசெய் திருவினைக், கள்ள மாற்றிட விளங்கி னு னுலகு கௌரி தாதொழுத கௌரியன், (கங-ங)

பதினெட்டாவது இந்திரத்துய்மினன் திக்கு விசயச்
சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (ருஉஅ.)

---

## பதினெட்டாவது. இந்திரத்துய்மினன் திக்கு விசயச்சருக்கச்
## சுருக்க வசனம்.

நிலைபேறுடைய புகழாலோங்கிய இராசராச பாண்டியனாகிய அரசன் நாகராசனாகிய குமுதனென்பவன் பெற்ற கவுமதியென்னும் பெண்ணை விவாகஞ்செய்து பன்னிரண்டு புத்திரர்களைப்பெற்றுப் பி ன்பு வயிராசலிங்கத்தைத் தியானித்து வழிபாடுபுரிந்து திக்குவிசயஞ் செய்துவரும்படி அடியேனுக்குத் திருவருள் சுரக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அந்த இலிங்கத்தினின்றும் சிவபெருமான்வெளிப்பட் டு அரசனுக்குச் சேனையாகச் சிலபூதகணங்களையும் மாகாளனென்ப வரையும்இந்திரத்துய்மினன் என்னும் ஒருசிறப்புப்பெயரையும்பகை யரசரை வெல்லும் வலிமையையுங் கொடுத்துமறைந்தருளினார். உட னே ரதகசதுரகபதாதிகளாகிய நால்வகைச் சேனைகளுந் தன்னைச்சூ ழ்ந்துவரவும் கடல்முழக்கம்போலப் பலவிதவாத்தியம் முழங்கவும் அதிவேகமாகச்செல்லும் ஒருவிமானத்திமேலேறித் திக்குவிசயஞ்

றித்துச் சிங்களதேசத்தை நோக்கிப்பயணம் புறப்பட்டு இடையிடையேவந்தெதிர்த்த அரசர்களையெல்லாம் பொருதுவென்றுசென்று சிங்கள தேசத்திலும் சீனதேசத்திலும் சாகவதேசத்திலும் துளுவதேசத்திலும் குடகதேசத்திலும் கொங்கணதேசத்திலும் கன்னடதேசத்திலும் கொல்லதேசத்திலும் தெலுங்கதேசத்திலும் கலிங்கதேசத்திலும் கங்கதேசத்திலும் வங்கதேசத்திலும் மகததேசத்திலும் கடாரதேசத்திலும் குசலதேசத்திலும் இன்னும் நாவலந்தீவிலுள்ள எல்லாத்தேசங்களிலும் சென்று அங்கங்கேயுள்ள அரசர்களோடு போர்செய்து அவர்களைவென்று அப்பால் மகாமேருமலையை நோக்கிப்போய் விறலியென்னுந்தீவிலுள்ள அரசர்களையெல்லாம் வென்று திறைவாங்கிவரும்படி தன்சேனைகளை அனுப்பிவிட்டுக் கிருட்டிணை நதிக்கரையிலே ஒரு இலிங்கந்தாபித்து விதிப்படி சிவபூசை செய்து கொண்டிருந்தான்.

இவ்விதம் பூசைமுடித்தபின்பு இந்திரத்துய்மினன் ஆகிய அரசன் அந்நதிக்கரையியி லொருபுறம் தவஞ்செய்து கொண்டிருக்கிற கூசிபரிஷியால் ஆசீர்வதிக்கப்பெற்று, அவர்செய்த விருந்துக்கிசைந்திருந்து முக்களாமூர்த்தி திருவருட்பிரபாவத்தை யெடுத்து அம்முனிவருக்கு மிகவுஞ்சொல்லி விடைபெற்று இந்திரசேனமலையினின்று வரும் ஆங்கிரசநதிக்கரையைப்போய்ச்சேர்ந்தான். அந்தநதிக்கரையிரண்டுபக்கத்தினுமுள்ள அரசர்கள்வந்து வணங்கித்திறை அளப்பவாங்கிக்கொண்டு கோபந்தணிந்திருந்தான். பின்பு அரசன் அவ்விடத்திலுள்ள ஆங்கிரசமுனிவரைவணங்கி அவரிடத்திலும் வயிராசலிங்கத்தின் பெருமையெல்லாமெடுத்துக்கூறி மீண்டு சாவித்திரிநதிக்கரையைச்சேர்ந்தான். அந்நதிக்கரையிலுள்ள உத்தமனென்னும் அரசனுனவன் வந்து இந்திரத்துய்மினனைவணங்கி, மகாராசனே! என்னுடைய புத்திரிமார்கள் பன்னிருவரையும் உன்னுடைய புத்திரர் பன்னிருவருக்கும் விவாகஞ்செய்து கொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தான்; அதுகேட்டு இந்திரத்துய்மினன்மனமகிழ்ச்சி கூர்ந்து தன்புத்திரர் பன்னிருவருக்கு முறையேவிவாகமுடிப்பித்து, உத்தமனென்னும் அரசன்றன்னுடனே வரச்செல்லும்போது தேவர்கள் வேண்டுகோளுக்கிசைந்து ஆளிமுகமுடைய ஒரு அரசனோடுநெடுநேரம் யுத்தஞ்செய்து அவனைக்கொன்று தேவர்களுடையதுன்பத்தைத்தணித்து, சாவித்திரி நதிக்கரையிலுள்ள சேமதேசஞ்சென்று அரசர்களெல்லாம் திறைகொண்டுவந்து குவித்துவணங்க அவரவர்க

ளுக்கு அபயந்தந்து மீண்டு சத்தியவதிநதிக்கரையில் ஒருமாதகாலமி ருந்தான். அதன்மேல் அரசன் விமானத்தின்மேலேறிச் சன்மலிதீவி லேசென்று கருடனாலயத்தைத்தரிசித்துப் பகையரசர் தன்னைவணங் கச்சென்று அநேகநதிகளிலே ஸ்நானஞ்செய்து குசைத்தீவை அடை ந்து அங்குள்ளபகைவரைவென்று போய் இரசகுல்லியைக்கடந்து, மதுகுல்லிநதிக்கரையையடைந்து அங்குள்ள மாற்றாரோடு சண்டை, செய்துவென்று சக்கரசிருங்கமலையைச்சார்ந்து சந்திரகாந்தத்தால் ஒரு சிவலிங்கந்தாபித்துக்கிரமப்படி பூசைசெய்திருந்து மீண்டு சில நதிகளைக்கடந்து, கபிலமுனிவருடைய ஆச்சிரமத்திற்குப்போய் அவ ரைவணங்கி மூக்களாலிங்கர் திருவருளை வியந்துபேசி விருந்துநுகர்ந் து விடைபெற்றுக்கொண்டு சித்திரகூடமலையிற்போய்; அங்குள்ள பகைவரை ஒடுக்கி அப்பாற்போய் சுருதிவிந்து நதிக்கரையைச்சார்ந் து சத்துருசங்காரஞ்செய்து கருப்பைநதியிலே மூழ்கியெழுந்து சென்று கிருதச்சுமாநதிக்கரையைச்சேர்ந்து அங்குள்ள பகைவரை யெல்லாம் பொருது தளையிட்டுக்காவலிலே வைத்துவிட்டு அப்பாற் சென்று ஆங்காங்குள்ள சில அரசர்கள் வணங்கச்சென்று இடப முதலாகிய நான்கு மலைகளைப்பார்த்து, அமிர்தோகை முதலாகிய ஐ ந்து நதிகளிலேயும் ஸ்நானஞ்செய்து வனற்பதிநதிக்கரையைச் சே ர்ந்திருந்தான்.

அக்காலம் வந்த சிவராத்திரிதினத்தில் அந்நதிக்கரையில் மூக் களாநீழலில் முளைத்த சிவலிங்கப்பெருமான் திருப்பெயராலொரு சிவலிங்கந்தாபித்துப்பூசைசெய்து, அதன்மேல வெண்ணிறந்தங்கிய தயிர்க்கடலைக் கடந்துபோய்ச் சுக்கிலநதியிலே மூழ்கியெழுந்து ஆங் குவந்தெதிர்த்த பகையரசரைக் கொன்றுவிட்டுப் புட்கரத்தீவைப் போய்ச்சேர்ந்தான். அதன்பின்பு நெடுந்தூரம்போய்ப் பலபத்திரமலை யிலுள்ள பகைவரைவென்று தூமானதேசத்தையடைந்து அந்தத்தே சத்தரசனுடன் சிலநாள் யுத்தஞ்செய்தான். அவன்மிகுந்த பலமுள் ளசேனைகளையுடையவனாதலால் அவனை வெல்வதற்கு இனி நம்மா ல் முடியாது என்று மூக்களாலிங்கராற் கொடுக்கப்பட்ட பூதப்படை களை நினைந்தான் அப்படைகளெல்லா மொருங்கேவந்து பெரும்போ ர்செய்து தூமான தேசத்தரசன் சேனைமுழுவதுங்கொன்று திரிபுரச ங்காரம்போலத் தேசமுழுவதுந் தீப்பற்றியெரியும்படிசெய்து சாம்ப ராக்கிவிட்டன; அதுகண்டு இந்திரத்துய்மினனாகிய அரசன் பார்சி

தை நதிலயயடுத்து ஸ்நானஞ்செய்து தூமானதேசத்தரசன் புத்திரருக்குமகுடஞ்சூட்டி அவர்கொடுக்குந்திறைகளை வாங்கிக்கொண்டு சதகேசரை நதியைப்போயடைந்து அந்நதிக்கரையிலுள்ள வெற்றிவீரருடன் சண்டைசெய்து சயங்கொண்டு பஞ்சநதிக்கரையின் பக்கத்தையடைந்து ஒருமாதம்வரையும் அவ்விடத்தில் வசித்திருந்தான்.

இப்படி யிருக்குநாளிலே சித்திராததேசத்து அரசனாகிய வெகுரூபியென்பவன் றன்னைவந்துகண்டு திறைகொடுக்கவில்லை யென்று கோபங்கொண்டு ஒருதூதுவனையனுப்பினான் அந்தத்தூதுவன் வெகுரூபியென்னும் அரசனிடஞ்சென்றுவணங்கி இராசனே எங்கள் மகாராசன் இங்குவந்து ஒருமாதமாகியும் நீர்வந்து திறைகொடுத்து வணக்கஞ் செய்யாமலிருப்பதென்ன இனியாயினும் வந்து சமாதானஞ் செய்துகொள்ளும் இல்லாவிடில் யுத்தத்துக்காவது வாருமென்று தனது அரசனதுகட்டளையைக்கூறுதலும்,வெகுரூபியென்னும் அரசன் கேட்டு மந்திரிமாருடனே ஆலோசனைசெய்யும்போது மந்திரிமார் சொல்வழியில்லாது போருக்குத்தன்னுடைய அளவற்றசதுரங்க சேனையை யெழுப்பிக்கொண்டுபோய் இந்திரத்துய்மினன் சேனையை யிடைவிடாது வளைந்து கொடியயுத்தஞ்செய்தான். இந்திரத்துய் மினனும் இதுவரையும் இப்படிப்பலமுள்ள பகைவரில்லையென்று பெரும்போர்செய்து வெகுரூபி சேனையுடனே யிறக்கும்படிகொன்றான்.

இங்ஙனம் இறந்த வெகுரூபிமன்னனுடைய புதல்வன்வந்து திறைகொடுத்து வணங்கவும் உடனே அவனுக்கு மகுடந்தரித்து அரசாளும்படிவைத்துவிட்டுத் தேவபாலகிரியைப்போய்ச்சேர்ந்து அங்கு நின்றும் சிரகை என்றுசொல்லும் நாட்டைக்கடந்துபோய்த் திருங்கிசநதிக் கரையின்கட்சென்று அந்நதிக்கரையில் ஒருமாதமிருந்து அங்கு நின்றும் எழுந்து கீழ்த்திசையிலுள்ள ஒரு பொற்றாமரைத்தடாகத்திலே ஸ்நானஞ்செய்து அங்குநின்றும் போய்ப் பிரமதேவர் தவஞ்செய்துகொண்டிருக்கும் வனத்தையடைந்து, அவ்வனத்திலுள்ள மலையின் தென்பக்கமுள்ள பொற்றாமரைத்தீர்த்தத்திலே படிந்து மேற்றிசையிலே சென்று கற்பமுறைவழுவாமல் ஒரு சிவலிங்கந்தாபித்து அதற்கு வயிராசலிங்கமெனப் பெயரிட்டுப் பூசித்து வணங்கிச் சிலநாளிருந்து பல்வளங்களையும் பார்த்து மகிழ்ந்து, அம்மலையினின்றும் இறங்கி மிகவுயர்ந்த இரமணகிரியிலே யேறிப்பார்த்து இம்மலையின் வளமெங்கு மில்லையென்று சந்தோஷித்து அம்மலையின்மேலே பொன்னூலே ஐம்பத்தொரு புகழ்த்தம்பத்தை நிலை நிறுத்திவிட்டு அப்

பால் அம்மலையினின்றும் இறங்கிச் சுத்தநீர்கடலைக்கடந்து சக்கரவாளமலையை அடைந்து அங்கே ஐந்துவருடம் வரையுமிருந்தான்.

இப்படித் திக்குவிசயஞ்செய்து வெற்றிமாலையைத் தரித்துச் சந்தோஷித்திருக்கும் இந்திரத்துய்மினனாகிய பாண்டியன் முக்களாநீழலில் முளைத்த வயிராசலிங்க மூர்த்தியைத்தரிசிக்கும் ஆசையதிகரிக்க உடனே எழுசமுத்திரங்களையும் அதனுள்விளங்கும் ஆறு தீவுகளையுங்கடந்து மகேந்திரமலையை வந்துசேர்ந்து கண்ணுவர் காசிபர்முதலிய மகாமுனிவர்தவஞ்செய்யும் ஆச்சிரமத்தையடைந்து அம்முனிவரையெல்லாம் வணங்கி அவரது ஆசிபெற்றுக்கொண்டு மீண்டு தன்னுடைய கருணாபுரியென்னும் பட்டணத்தையடைந்து தன்னுடைய பிதாமாதாவைவணங்கி விக்கிரமசிங்க புரஞ்சென்று அங்கு நின்றும் பாவநாசத்திற்சென்று முக்களாநீழலிற்றோன்றிய வயிராசலிங்க மூர்த்தியைத்தரிசித்து உள்ளங்குளிர உரோமஞ்சிலிர்ப்ப உரைதடுமாறத் தோத்திரஞ்செய்து பரவசமடைந்து பேரானந்தமுற்று நாடோறுந்தியானித்துத்தன்னுடைய பிதாவின் பேராலே செய்தகருணாபுரியில் வந்து அரசாட்சிசெய்து கொண்டிருந்தான்.



## பத்தொன்பதாவது: இந்திரத்துய்மினன் சாபமெய்திய சருக்கம்.



பன்னு மைம்பது கோடியோ சனைப்பரப் பாகு
மின்னி லத்தைவெல் லிந்திரத் துய்மின னென்பான்
றன்னொ டேகுமா காளனார் சரித்திரந் தன்னைத்
துன்னு மாதவர் வினவவச் சூதனுஞ் சொல்லும். (க)

வேலி னானெடுந் திசைதொறுஞ் சென்றுவே றெதிர்ந்தோர்
கால னாகுமா காளன்றன் கணத்தொடு மீண்டு
பால வோசன முக்களா மூர்த்தியைப் பரவி
மேல வாய்தலி னிருந்தனன் விண்ணவர் வியப்ப. (உ)

என்று கூறலு மிந்திரத் துய்மின னென்னும்
வென்றி வேலினான் பின்செய்த தியாதெனை வினவச்
சென்றகாலமும் வருமெதிர் காலமுஞ் செல்லா
நின்ற காலமு முணர்ந்தவன் வகைபட நிகழ்த்தும். (ங)

பம்பு செஞ்சடை முக்களா மூர்த்தியைப் பரவிக்
கம்ப மாற்றிய வங்கிராக் கபிலமா முனியை
யிம்ப ரும்பரென் றிந்திரத் துய்மின னிறைஞ்சி
யம்பொன் மாளிகை சூழ்கரு ணாபுரி யடைந்தான். (௪)

விரவு சம்பந்த முன்செய்த வுத்தம வேந்தற்
கிரசன் பற்பல வரிசைசெய் தனுப்பவாங் கவனு
முரிய சேனையு மமைச்சரு முடனெழ வெழுந்து
திருமி ணந்தக லாததன் னாட்டினைச் சேர்ந்தான். (௫)

எண்ணி லாப்புக ழிந்திரத் துய்மின னென்பான்
விண்ண ளாவிய பொதியத்தை வலம்வர வேண்டித்
தண்ண ளுப்பொழி முக்களா வனத்திடைத் தழைத்த
வண்ணல் சேவடிக் கமலத்தை யன்பொடும் பணிந்தான். (௬)

வேற்க டற்படை நிறுத்தியே தனிப்பட விரைந்து
மாற்க டற்கலை மலையத்தை வலம்வரு காலை
நூற்க டற்கரை கடந்துநுண் ணறிவினர் மனநேர்
பாற்க டற்கரை கண்டன னன்னதி படிந்தான். (௭)

கோல நீடிரைப் பாற்கடற் குலநதிக் கரையிற்
கால காலனை மகேந்திர நாதனைக் கரிய
வால போசனத் தெந்தையைப் பணிந்தன னங்கோர்
நீல வெற்பென நின்றன னுளனொரு நெடுமால். (௮)

அன்ன திக்கரை தனிலிருந் தைம்புல னடக்கி
மன்னு முக்குணக் குறும்பினை யிறும்படி மாற்றித்
தன்னை யக்கண மறந்துபோய்த் தற்பரன் மயமாய்த்
தென்னன் மெய்த்தவம் புரிந்திருந் தான்சில காலம். (௯)

இறும ருங்குலென் றிளைக்கிலா விளமுலை யுலகாள்
பெறும ருங்கொரு பாதியாஞ் சோதியைப் பேணிக்
கறுமு னிந்தங்குச் செய்தவக் கைதவன் காணான்
மறுமு னிந்தநூற் குறுமுனி யவ்விடை வருதல். (௧0)

இமிழுந் தெண்டிரை நிலம்வென்று னெழுந்தில னென்ன
வுமிழ்செந் தீயெனக் கடுவெனக் கடிதெழு முயிர்ப்பா
லமிழ்தந் தானென வானந்த மயமென மும்மைத்
தமிழ்தந் தான்வனத் தடங்களி றுகெனச் சபித்தான். (௧௧)

ஓம்பும் யோகம்விட் டம்முனி வரவுகண் டுவந்து
கூம்ப லின்றியே யருக்கிய முதலிய கொடுத்து
வேம்ப ணிந்தபொன் மார்பினன் பூசித்து விடவாய்ப்
பாம்ப ணிந்தவற் கன்புசெய் முனிவனைப் பணிந்தான். (கஉ)

பணிந்து முன்னின்று பரவிய பத்தியாற் கோபந்
தணிந்த சிந்தைய னென்செய்தோ மெனவறத் தளர்ந்தா
னணிந்த வொண்கொடி மீனவ மானவ வசலந்
திணிந்த திண்புயத் தாயொன்று கேளெனச் செப்பும். (கங)

மோட்டி யானைமேன் முழங்கிய பேரியாய் முனிபுற்
காட்டி யானையாய்ப் போகெனக் கறுத்தனைச் சபித்தோ
நாட்டி யானையாந் திக்கய மேழொடு நான்கு
கோட்டி யானையுங் கும்பிடக் கொற்றங்கொண் டுறைதி. (கச)

ஆவென் றேபரு வாய்பிளந் திடங்கரா யடைந்து
கூவென் பாலொரு கின்னர னாதன் கூறும்
பாவஞ் சேர்தரு சாபத்தா னலருஞ்செம் பதுமப்
பூவுங் காவியும் பூக்கும்பூம் பொய்கையிற் கிடந்தான். (கரு)

ஆங்க வற்குமிங் குனக்கும்வெஞ் சாபம்விட் டகலத்
தேங்க டுக்கையா னருளினற் செங்கண்மா லெய்தி
யோங்கு சக்கர மோச்சிவன் மீனுயிர் வாங்க
வாங்கு காலொடு நீங்குதி சாபத்தை வழுதி. (கசு)

என்று ரைத்தலுங் கேட்டன னிழிமத தாரைக்
குன்று ருக்கொண்டான் குன்றுருக் கொடுநின்ற கோமா
னின்ற மெய்த்தவ னீங்கின னெடுஞ்சடை முடிநீர்
துன்ற வைத்தருண் முக்களா மூர்த்திதா டொழுதான். (கஎ)

தொழுது சந்திர பாண்டியன் வந்தடி தொழப்போய்
வழுதி வாழியென் றருளினன் பவளத்தின் வடிவாய்
விழுது விட்டசெஞ் சடைமுடிக் குறுமுனி வெயில்கால்
பொழுது சூழ்வரத் தக்கபொன் மால்வரை புக்கான். (கஅ)

பத்தொன்பதாவது. இந்திரத்துய்மினன் சாபமெய்திய
சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (ருசசு),

## பத்தோன்பதாவது இந்திரத்துய்மினன் சாபமெய்திய சருக்கச் சுருக்க வசனம்.

ஐம்பதுகோடி யோசனைவிசாலமுன்ளஇந்நிலவுலகத்திற்றிக்குவி சயஞ்செய்துவந்த இந்திரத்துய்மினனுடன் சென்ற கணநாதராகிய மாகாளனூர் சரித்திரத்தைச் சொல்லவேண்டுமென்று நைமிசாரணிய முனிவர்கள் கேட்கச் சூதமாமுனிவர் சொல்லுவார். திக்குவிசயஞ்செய்து அரசனுடனே கூடவந்து பூதகணங்களோடுபாவநாசத்தில் முக்களாநீழலிற்போய் வயிராசலிங்கத்தை நமஸ்கரித்துத்திருவருளால் அந்த இலிங்கமூர்த்தியின் ஆலயத்தின்மேலவாயிலிற் காவல்கொண்டிருந்தனரென்ன, முனிவர்கள்மீட்டும்வணங்கி இந்திரத்துய்மினன்பின்னர் யாதுசெய்தானென்றுகேட்கத் திரிகாலமுணர்ந்த சூதபுராணிகர் சொல்லுவார், முக்களாமுதல்வராகிய சிவபிரானைத்தரிசித்துமீண்டு அங்கிராமுனிவரையுங் கபிலமுனிவரையும்வணங்கி இந்திரத்துய்மினன் கருணாகரபுரியை அடைந்து அரசுசெய்துவரும்போது தன்னுடன் திக்குவிசயங் கண்வந்த சம்பந்தியாகிய உத்தமன் என்னும் அரசனுக்கு வேண்டிய் வரிசைகள்கொடுத்து அவனைத்தனது தேசத்துக்குப்போகும்படி அனுப்பிவிட்டுப்பின்பு பொதியமலையைப் பிரதக்ஷணஞ்செய்துவர உத்தேசித்து முக்களாநீழலிற் சிவபெருமானைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டு சதுரங்க சேனையுடன்போய்ப் பாற்சமுத்திரத்தின் கரைப்பக்கத்திலுள்ள பாலாற்றிலே தீர்த்தமாடிக்கரையேறி அங்கெழுந்தருளியிருக்கும் சிவபிரானைத்தரிசித்துப் பின்பு சமீபத்திலே நீலமேகம்போலத் திருமால்வந்துநிற்பதையும் பார்த்துத் தானும் ஐம்புலன்களையு மொடுக்கிச் சிவமயமாகத் தன்னைமறந்து தவஞ்செய்துகொண்டு சில நாளிருந்தான்.

அங்ஙனந்தவஞ்செய்திருக்கு நாளிலே ஒருநாள் அகத்தியமாமுனிவர் அவ்விடத்துக்கு வந்தனர். அவரைக்கண்டு எழுந்து வணங்கி இந்திரத்துய்மினன் அருக்கிய பாத்தியமுதலியவுபசாரஞ்செய்யாமையினாலே அகத்தியமுனிவர் திக்குவிசயஞ்செய்து விட்டோமென்ற இறுமாப்பிலிருக்கின்றானென்றுநினைந்து அவனைப்பார்த்து நீ காட்டானையாகுகவென்று சபித்தனர்; உடனே இந்திரத்துய்மினன்றெரிந்து அம்முனிவர் திருவடியின் கீழேவிழுந்து நமஸ்கரித்துச் சுவாமீ! அடியேன் அறியாதுசெய்தபிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கக் கோபந்தணிந்து நீ திக்கு யானைகளெல்லாம் வணங்க காட்டு யானையாக இருந்து நாரதமுனிவர் சாபத்தினாலே ஊகூ

வென்னும் ஒரு வித்தியாதரன் தாமரையலர்ந்த ஒரு தடாகத்திலே முதலைவடிவமாகிச் சுழன்றுகொண்டிருக்கிறான் அவனுக்கும் உனக்கு ஞ் சாபம் நீங்குமாறு பரமேசுரனுடைய திருவருளால் விஷ்ணுமூர்த் திவந்து உன்னுடயகாலைப்பற்றிய அந்தமுதலையைச் சக்கரத்தினாலே கொன்று விடுவார். அப்போது முழுதும் இச்சாபம் நீங்குமென்று சொல்லி அப்பாற்சென்று பாவநாசத்தில் வந்து மூக்களாலிங்கரைத் தரிசித்திருந்தனர். பின்பு அவ்விடத்தில் வந்து தன்னை வணங்கிய சந்திரபாண்டியனுக்கு ஆசிகூறி மகாமேருமலையின்கண்ணே சென் றார். இந்திரத்துய்மினனும் அந்தக்ஷணமே யானை யுருவங்கொண்டு திரிந்தான்.



## இருபதாவது: இந்திரத்துய்மினன் சாபமோசனச் சருக்கம்.



கன்ன மாமத தாரைக் கயேந்திர
மென்னு நாம மியானையின் பேரெனச்
சொன்ன மாதவச் சூதன் முனிவர்முன்
பின்னர் மோசனம் பேசத் தொடங்கினான். (க)

தான மொய்த்த தறுகட் கறையடி
யானை கட்கர சென்ன விசைந்ததால்
வான முட்ட வளரு மகேந்திர
மான வெற்பி லடைந்த கயேந்திரம். (உ)

அங்க மாறி யறிவுக்கு மாறின்றிப்
பொங்கு தென்றற் பொதியப் பொருப்பினை
மங்குல் போல வலம்வரு குஞ்சரஞ்
சங்க மோங்குந் தடங்கட லாடிற்றால். (ங)

தென்பு றக்கட லாடிய சிந்துரம்
பின்பு சூரியன் றன்னைப் பிரார்த்தியாத்
துன்ப நீக்கென்று சோதியைச் சிந்தைசெய்
தன்பு நீட வகத்திரு ணீக்கிற்றால், (ச)

குடக்கின் வந்து குலவிப் பொதியத்தின்
வடக்கி லெய்தி வளர்திரி கூடமாங்

தடக்கி ரிக்கு நடந்தது தாவியே
முடக்கு கைக்குண் முகில்பிழி வேழமே. (௫)

மந்தி பாயு மரங்களை மாற்றித்தேர்
*மந்தி யேக வளிவெளி கண்டதாற்
றந்தி யாகத்தந் தாவளங் கோடிசூழ்
தந்தி சென்ற தனிப்பெருந் தண்டமே. (௬)

† விண்டு வேந்திய ‡ விண்டுவில் விண்டுதைந்
தண்டர் நாட்டுக்கு மப்புறஞ் சென்றதால்
வண்டு பாய மகரந்தம் பாயவான்
கொண்டல் பாய்திரி கூடச் சிகரமே. (௭)

ப்ங்க மற்ற பலாப்பணை யின்கனி
தூங்க வானவ ரிற்றொறுந் தூக்குமான்
மங்குல் §வேங்கை மலையெனத் தாவுபோர்ச்
சிங்கம் வாழ்திரி கூடச் சிகரமே. (௮)

நித்த நாரதர் யாழி னிரம்பிசை
மொய்த்த கின்னரம் வாயின் முழக்குமால்
வித்த கப்பெருஞ் சித்தி விளங்கிய
சித்தர் வாழ்திரி கூடச் சிகரமே. (௯)

திரைகொ ழிக்குஞ் சிவமது கங்கையாய்க்
கரைபொ ருஞ்செண்ப காடவித் தீர்த்தமாய்ப்
பரவி யாடினர் பாவங் கழீஇயதவ்
வரையிற் சித்திர மாநதித் தீர்த்தமே. (௧0)

அயவி ருந்த வகன்றடங் கோயிற்
புயவி ருந்த நிறத்தனைப் போற்றித்தான்
மயவி ருந்த மடப்பிடி மால்கொளுஞ்
செயவி ருந்த கயேந்திரச் சிந்துரம். (௧௧)

சீத மேவச் சிலம்பி லநேககா
ளாத ரம்படைத் தானைக்கு ழாத்தொடுந்
தாது லாநறுஞ் சந்தன வெற்பினை
மாத மாதம் வலஞ்செய்து வந்ததால். (௧௨)

---

* மந்தி - வண்டு. † விண்டு - மேகம். ‡ விண்டுவில் - மூங்கிலால். § வேங்கை - மரம்.

இந்த வண்ண மெழுந்து செழுந்தமிழ்
மந்த மாருத வெற்பை வலஞ்செய
முந்து மவ்வழி மூக்கொடு தூக்குகைத்
தந்தி கண்டதோர் தாமரை யோடையே. (கங)

வேறு.

தெள்ளுஞ் சுவைமொழிகள் சேர்ந்தார்க்குச் செப்பிவஞ்சித்
துள்ளந் திரிந்தவர்போ லுள்ளேவன் மீனுலவக்
கள்ளுஞ் சுரும்புங் கமலமுஞ்செங் காவியும்வெண்
புள்ளுங் கலந்து பொலிந்ததந்தப் பூவோடை. (கச)

வாக்கு மனமுமொத்த மாதவரெப் போதுநண்ணித்
தேக்கும் புனல்படிந்து செய்கருமஞ் செய்தருளி
நோக்கும் பரம்பரனை நோக்கவவர் தம்பிறவி
போக்கும் படிக்குப் பொலிந்ததந்தப் பூவோடை. (கரு)

நீங்காச் சிறப்பு நிறைந்தநெடு வாவியிடைப்
பாங்காம் பிடிகள் பலசூழச் சென்றிறங்கித்
தேங்கா நறைக்கமலஞ் செங்குமுதம் பைங்கழுநீர்
பூங்காவி சாய்த்துப் புகுந்துவிளை யாடுதலும். (கசு)

வன்முதலை யொன்றுகண மாத்திரத்திற் காத்திரத்திற்
கின்னரத்தண் டென்னக் கிளைத்தநெடு வாலூன்றிச்
சென்னெலரி கூனிரும்பிற் செவ்வா யெயிறிலங்கக்
கன்னமத தாரைக் களிறலறக் கவ்வியதால். (கஎ)

திக்களவு மூக்களவிற் சிற்பரனைச் சிந்தைசெய்து
கைக்களபங் காக்கக் கடனுனக்குக் காப்பாயென்
றிக்களவு மென்சொலுல கீனறவள்பங் காவிடஞ்சேர்
மைக்களத்தா யென்றுநின்று வாய்திறந்து போற்றிசைப்ப. ()

தந்தியொலி கேட்டிரங்கித் தந்தியுரி மெய்போர்த்த
வந்திநிறத் தெந்தை யருளவிடை கொண்டேகிக்
கந்திருவர் பாடக் கருடப் பிடரேறி
யுந்தியுந்தி பூத்த வொருகடவு ளாங்கணைந்தான். (கசு)

ஊழிவாய் நின்றோ னுருவா யுணர்ச்சியொடுஞ்
சூழிவாய் வந்த துழாயணிந்த மாலோச்சு
மாழிவாய் கீறிடத்தன் னுருயிர்போ யீருருவாய்ப்
பாழிவாய் விண்டு பகுந்ததந்தக் கார்முதலை. (உ0)

தூயமறை நாரதன்முன் சொற்றகொடுஞ் சாபமது
காயமடு வூடு கராவாக வந்துதித்த
தீயவுரு மாயமுன்னைத் தேவவடி வாகிவந்து
மாயவனைக் கண்டு வணங்கினனூ கூவென்பான். (உக)

பம்முதலை யெய்தப் பருமுதலை வந்துகவ்வ
விம்முதலை நீங்க விடுவித்த போராழிக்
கைம்முதலை யேத்தியதாற் காட்சிதரு முக்களவி
னம்முதலையுள்ளத் தகலா மதவேழம். (உஉ)

ஆனையுருப் போய்முன் னரசுருவ மெய்தினனம்
மீனவனுஞ் சக்கரக்கை விண்ணவனைப் போற்றிசைத்தான்
வானவர்கள் சூழ மழவிடைமே லேறியங்குக்
கானமக லாமுக் களாமூர்த்தி வந்தணைந்தான். (உங)

கண்ணனொடு வேந்தனிசைக் காந்தருவன் றாழ்ந்திறைஞ்சி
யண்ணலடித் தாமரைகண் டார மகிழ்பூத்தார்
மண்ணுலகு காக்கும் வழுதியொடு செஞ்சடைமேற்
றெண்ணிலவு வைத்தான் றிருவாய் மலர்ந்தருள்வான். (உச)

பூண்டபிரா ரத்தவினை போகா தனுபவிக்க
வேண்டியதான் மூண்டசின வேழத் துருவெடுப்ப
வாண்டுனக்குச் சாப மணுகக் குறுவடிவி
னீண்டசடை யோனு னிகழ்த்தியது நாமோகாண். (உரு)

மன்னுயிரைத் தன்னுயிர்போல் வாய்ந்த மனுநீதியினு
வின்னலற வெண்ணி யிருநிலமெல் லாங்குளிர
வொன்னலர்நின் றஞ்ச மொருகுடையின் கீழ்ப்புரந்து
தென்னவனீ பின்ன ரெமதுபதஞ் சேருதியால். (உசா)

என்றுரைத்து வேண்டும் வரங்கே ளெனவியம்ப
மன்றமக லாத மலரோடைத் தண்கரைமே
னின்றநெடு மாலோடு நீயிருப்ப மாமலயக்
குன்றமக லாது குறுமுனிவன் வந்துறைய. (உஎ)

இன்னலற வுன்னடிப்போ தெப்போது நீங்காதென்
மன்னுமுளப் போதின்மிசை வைக்கவருள் செய்கவெனத்
தென்ன னுரைப்பவருள் செய்துமறைந் தானரசன்
கன்னல்செந்நெல் சூழுங் கருணு புரியடைந்தான். (உஅ)

வாண்மாறன் கேட்ட வரம்பழுது போகாமற்
கோணும் மதியக் குழவிதவழ் செஞ்சடைமேற்
பூணுகத் தான்கமலப் பொன்னுரத் தானோடுஞ்
சேணுடர் போற்றச் செழுங்கரையின் வைகினான். (உக)

அம்மா தலத்தி லமர்ந்தருளி யாயிரங்கட்
பெய்ம்மாரி யூர்தி பிரமகத்தி தீர்த்தருளுங்
கைமா வுரித்தடர்த்துக் காராழி நஞ்சமுண்ட
வெம்மானை நாறும்பூ நாதனென வேத்துவரால். (நு)

வண்ணமணி கண்ட வயிராச லிங்கமென்னும்
விண்ணவனை நண்ணி விழுந்துபணிந் தேகியப்பாற்
கண்ணகன்பூஞ் சோலைக் கருணை புரியெய்தி
யண்ணல் வழுதி யரியா சனத்திருந்தான். (நுக)

இருபதாவது இந்திரத்துய்மினன் சாபமோசனச்சருக்கம்
முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கூஎஎ.)

---

## இருபதாவது இந்திரத்துய்மினன் சாபமோசனச் சருக்கச் சுருக்கவசனம்.

நைமிசாரணிய முனிவர்களுக்குச் சூதமுனிவர் சொல்லுவார். ஓ! முனிவர்களே அகத்திய முனிவர் சாபத்தினாலே இந்திரத்துய்மினன் யானைவடிவங்கொண்டு கயேந்திரம் என்னும் பெயரையடைந்து மற்றையானைகளுக்கெல்லாந் தலைமையெய்தி மகேந்திரமலையினின்றும் பொதியமலையைப் பிரதக்ஷணஞ்செய்யச்சென்று தென்புறத்திலுள்ள சமுத்திரத்திலே ஸ்நானஞ்செய்து சூரியனைப்பிரார்த்தனை செய்து மேற்றிசைக்குச்சென்று பொதிய மலையின் வடபக்கத்திலுள்ள திரிகூடம் என்னும் அநேகவளநிறைந்த திருக்குற்றுமலையின் கட்சென்று சிவமதுகங்கை சித்திரநதிகளிலே ஸ்நானஞ் செய்து ஆலயத்திற்சென்று, நீலமேகநிறம்பொருந்திய விஷ்ணுமூர்த்தியை வணங்கி அங்கேசிலநாள் வசித்து மாதந்தோறும் பொதியமாமலையை வலஞ்செய்துவந்தது. இந்தவிதம் பிரதக்ஷணஞ்செய்து வருநாளில் ஒருநாள் வழியிலே ஒரு தாமரைத்தடாகத்தைக்கண்டு அதனுள்ளேயிறங்கி ஸ்நானஞ்செய்து அங்கணுள்ள தாமரை நீலோற்பலமுதலிய பூக்களைப்பறித்தெறிந்து விளையாடிக்கொண்டிருக்கும்போது, அத்த

டாகத்தினுள்ளே நாரதர் சாபத்தாலே நெடுநாளாகச்சஞ்சரிக்கும் ஊ௬௯ வென்னும் வித்தியாதரனுகிய முதலைவந்து கயேந்திரம் என்னும் யானையின் காலைக்கவ்வியிழுத்தது. அந்தச்சமயம் யானை வருத்தமுற்று முக்களாலிங்கரைத் தியானித்துத் தோத்திரஞ்செய்து கதறியது. உடனே அதுகேட்டமுக்களாலிங்கர் திருவருளாலே விஷ்ணுமூர்த்திசென்று சக்கராயுதத்தை விடுத்து முதலையை இருகூருகப்பிளந்தார், பின்னர் முதலைக்கும் யானைக்கும் உருவமாறிப்பழையவுருவங்கிடைத்தலும் யானையாயிருந்த இந்திரத்துய்மினன் எதிரே நின்ற விஷ்ணுமூர்த்தியைத்தரிசித்து முக்களா முதல்வராகிய சிவபெருமானைநினைந்து தோத்திரஞ்செய்தனன். அந்தத்தோத்திரங்கேட்டவுடனே சிவபெருமான் அவ்விடத்துக்கெழுந்தருளினர். இந்திரத்துய்மினனும். ஊ௬௯ வாகிய வித்தியாதரனும் விஷ்ணுமூர்த்தியும் ஆகியமூவரும் வணங்கித்துதித்தார்கள். பின்பு இந்திரத்துய்மினனை நோக்கி யுனக்குவேண்டியவரத்தைக் கேளென்று சிவபிரான் அருளுதலும் சுவாமீ! * இந்தத்தடாகக்கரையிலே தேவரீரும் விஷ்ணுமூர்த்தியும் எழுந்தருளியிருக்கவேண்டுமென்று அரசன் பிரார்த்தித்தினன். உடனே அவ்வரங்கொடுத்துச்சிவபிரான் மறைந்தருளினுர். பின்னர் அரசன் பாவநாசத்தையடைந்து வயிராசலிங்கத்தைத் தரிசித்துத் திருவருள் பெற்றுக்கருணுபுரிவந்து சேர்ந்து சிங்காதனத்திலிருந்து அரசாட்சிசெய்து வந்தான்.



## இருபத்தொன்ருவது: பஞ்சக்குரோசத் தெல்லையுரைத்தசருக்கம்.



காது சீற்றக் கயேந்திர சாபமுஞ்
சோதி வானச் சுரேந்திர னெய்திய
தீது நீக்குந் திருமடு முக்களா
வாதி வாழ்பதிக் கெத்திசை யாகுமால். (௧)

பிரம கத்தி பிடித்து மகத்துவச்
சுரர்ப திக்குமுன் ருேற்றிய தெவ்விதம்

---

* இந்தத்தடாகக் கரையிலுள்ள கோயிலிருக்கிற நகர்தான்- அத்தியாழ் நல்லூர்.

விரவு மத்துயர் வீடிய தெம்முறை
யுரைசெ யென்னவச் சூதன்முன் னோதினர். (உ)

துன்னு மாதவர்க் கம்முனி சொல்லுவான்
மன்னு சீச்சுதன் மையெனும் மச்சபை
தன்னில் வானவர் சாரணர் சூழ்வரப்
பொன்னு லோகப்புரந்தரன் வைகினன். (ங)

அரம்பை நின்று நடித்தன ளந்நடம்
விரும்பி நோக்கி வியந்துறை காலையில்
வரம்பில் கல்விக் குருவங்கு வந்தனன்
சிரம்ப ணிந்து வணங்கிலன் றேவர்கோன். (ச)

மான மெய்தி மறைந்தனன் மந்திரி
போன போது பயந்தனர் புங்கவ
ரான செய்தி யறிந்து தொலைந்திடா
தீனம் வந்ததென் றிந்திர னஞ்சினன். (ரு)

பிசித போசனர் தேவரைப் பீடிக்க
வுசித காலமென் றெண்ணின ரும்பர்கோ
னசைவி லாத்துவட் டாவருள் சேயெனும்
விசுவ ரூபனும் வித்தகத் தேவனை. (சு)

பொருவி லாத புரோகிதஞ் செய்கென்று
ரைச னுக்கக் கணம்விட் டுருவமா
வொருத னிக்கவ சஞ்செய் துதவினன்
றருதி யென்னத் தரித்தன னிந்திரன். (எ)

கவசம் பூண்டு கடவுள ராதிப
னவச மெய்த வசுரரை வென்றனன்
றுவச மாவுரு மேந்தினன் றோற்றிடத்
திவசந் தோறு மசுரர்கள் சிந்தித்தார். (அ)

புந்தி கூரும் புரோகிதன் றன்னையோ
ரந்த ரங்கத் தழைத்தெங்க டங்கையாம்
பைந்தொ டிக்குநீ பாலக னகையா
னிந்தை யெங்கட்கு நீக்குதி யென்றனர். (கூ)

மாக லோகர்க் கொளித்து மறைத்தவிப்
பாக மத்திதி பாலர்க் களித்தனன்

வேக வீரமத் தானவர் மேவினர்
நாக மாகிய நாட்டுக் கதிபதி. (௧0)

விளங்கு ஞான விழிகொண்டு நோக்கியே
யுளங்க ளங்கத்தை யுற்ற புரோகிதன்
களங்கொண் முச்சிரங் காய்ந்து தடிந்தனன்
றுளங்கு மத்தலைச் செய்தியைச் சொல்லுங்கால். (௧௧)

வேறு.

ஒன்றுசுரா பான முறுஞ்சோம பானமொன்று
நின்றதனை மாந்து *நிரையாத முத்தலையுஞ்
சென்றுகல விங்கங் கபிங்கலமூந் தித்திரியு
மென்றபெயர் கொண்டுசிறைப் புள்ளா யெழுந்தனவால். (௧௨)

மந்திரிகோ பத்தால் வரும்பிரம கத்திதள்ள
விந்திரனிப் பூதலத்தி லெய்திமன நொய்துபட்டா
னந்தரத்து வானவர்க ளானவர்கள் வந்துகண்டு
பந்தவினை நீங்கும் படிக்குமனத் தெண்ணினரால். (௧௩)

மாதரையை மாதரைத்தண் வார்புனலை வானளவும்
பாதவத்தை வேண்டுகோள் பண்ணியிறை பாதகமாந்
தீதுதனை நான்காக்கி யங்கவர்பாற் சேர்வித்தார்
கேதம்விடுத் தந்நால்வர் கேட்டவரங் கொடுத்து. (௧௪)

பாங்குபெற விண்ணுலகிற் பண்ணவர்கோன் சென்றடைந்தா
னோங்கு துவட்டாதன் னொருமகவைப் போக்கியதாற்
றேங்கமழ்தா ரிந்திரனைச் சென்றுவெல்லும் பிள்ளையொன்றை
யாங்கடையும் வண்ண மரியமகஞ் செய்தனனால். (௧௫)

செந்தழலி னின்றோர் திறலசுரன் வந்துபிறந்
திந்திரசத் துருவிருத்தி ராசுரனென் பேர்பூண்டு
வந்தெதிர்க்க வன்னவனும் வானரசுந் தேவருடன்
சந்ததமு நீங்காச் சமர்விளைத்து நின்றனரால். (௧௬)

தேவவரு டத்தா யிரவருடந் தீராத
தாவுசினப் போர்புரிந்த தானவற்குத் தோற்றோடிப்
பூவகத்து வீற்றிருக்கும் புத்தேளைச் சென்றடைந்து
மேவலரை வெல்லும்வகை விண்ணரசு கேட்டனனால். (௧௭)

* நிரையாத-ஒழுங்கில்லாத.

வேறு.

தேங்கு ஞானத்திற் பெருந்தவம் விரும்புத தீசிதன் முது கென்பை, வாங்கி னுலந்தத் தானவ னுவியை வாங்குதலெளி தாகு, மாங்கு நீசென்று கேட்குதி யெனமலர்ந் தந்தண னு ரைசெய்தான், பாங்கு பெற்றந்த முனிவன்வீற் றிருந்தருள் பன்னசா லையில்வந்தான். (கஅ)

பாக சாதனன் றனக்குப சாரங்கள் பலபல முனிசெய் தான், ருக சோகங்க டவிர்ந்துநின் முதுகென்பு தருகுதி யெ னக்கேட்பச், சேகு கூர்தரு மிருப்பிர் சாயன பானஞ்செய் திடலாலே, யாகும் வல்விரும் புருக்கொண்ட முதுகெலும் ப ளித்துயி ரொளித்தானல். (கக)

பேத மாவெது கேட்பினுங் கொடுப்பது பெரியவர் கட னகு, மாத லாலந்த முனிவர னளித்தரு ளங்கத்தை யிமை யோர்க, டூதி லாமுனை வச்சிரா யுதமெனச் செய்குென மய ன்செய்தான், காது போர்ப்படை கொண்டன னுயிரங் கண் ணுடைப் புருகூதன். (௨௦)

இரியல் போகிய விந்திர னமையினி யென்செய்வா னெ னவேமாந், தரிய யோகத்தில் விருத்திரா சுரனிருந் தருந்தவம் புரிகாலை, யுரிய வொற்றர்வந் துணர்த்திட வுணர்ந்தனன் கது மெனச் சென்றுற்றான், பெரியர் மாமகம் புரியினு மவர்தவம் பிடழித்திட வல்லான். (௨க)

முன்பு சென்றிடில் விழிக்குமென் றெண்ணினன் முகம றைத் துடல்கூனிப், பின்பு சென்றடி பேணிவைத் தருகுநின் றவன்றலை பிடரோடுந், தன்ப யம்பின்ன ரிழுத்திட முழுத்த வத் ததீசிமா முதுகின்றண், டென்பெ னும்படை கொண்ட ரிந் தான்றடி யிடிக்கொடி முடிக்கோமான். (௨௨)

பொருந்த வவ்வுழிப் பூமழை பொழிந்தது பூதலத் தொடு வானுந், திருந்த நன்மைபெற் றோங்கின வச்சிரஞ் செயிர்த்தெ றி மகவானு, விருந்த வத்தினி விருந்தவ மிழைத்தவ னிறந்தன னெனக்கேட்ட, வருந்த வர்க்கும்வா னவருக்கும் மகிழ்ச்சியு ண் டாக்கின தக்காலம். (௨௩)

தூர்த்த ரப்புரந் தரன்றனை விருத்திரா சுரகத்தி பிடித்தன் ஞென், கரந்து போயினு முன்வரும் பின்வருங் கடும்பயங் கர

ங்காட்டு, மாந்தை கொண்டுடல் கரிந்திட விரிந்தவா யாவென வங்காக்கும், பரந்த வெத்திசை யெய்தினு மத்திசை பற்றிவிட் டகலாதால். (உச)

வேத னைப்படும் விண்மூழு தாளியிவ் வெந்துய ரொழி யாதோ, வேதி னிச்செய லெத்தலத் தெய்தினு வித்துய ரக ன்றேகும், போத லெத்திசைக் கெனவெண்ணித் தெளிந்தன ன் பொதுத்தொறு நடித்தாடும், பாத னைத்திரு முக்களா நாத னைப் பணிவதே பயனென்ன. (உரு)

அருந்த மிழ்க்கிரிப் பாவவி நாசத்துக் கைங்குரோ சத்தூ ரத், திருந்த வாவிவா யெய்தினன் விருத்திரா சுரகத்தி யெனு ம்பாவம்; பிரிந்து தன்னுளந் திரிந்துடல் கரிந்தறப் பொரிந் தெங்கும் பெருந்தீப்பட், டெரிந்து போயது சாம்பருங் கண்டி லனெண்ணிலா மகிழ்பூத்தான். (உசா)

அத்த டம்புகுந் தாடினன் குணதிசை யமலனைப் பூசித் தான், மைத்த டம்பொழின் மலயத்தை நோக்கினன் வந்தன ன் மறைக்கூரு, முத்த டம்புக்கு மூழ்கினன் முக்களா மூர்த் தியை வழிபட்டான், கைத்த டங்கலுந் துறந்தவர் பெறும்ப யன் கணப்பொழு தினிற்பெற்றான். (உஎ)

மின்றொ டும்பொலி வடிவினன் றிருவடி விருப்பொடும் பணிந்தேகி, முன்றொ டங்கியே மறைந்தவா சான்றனை முன் கண்டு பணிந்தேத்தி, யுன்றொ டும்பகைத் துய்ந்தவர் யாரெ ன வுவப்பயின் றுரைத்தந்தப், பொன்றொ டுங்கஞ்சப் பொன் னக லாததன் பொன்னுல கினிற்போனான். (உஅ)

தேன்கு தித்தெழுங் கொன்றையான் செந்தமிழ்ச் சிங் கையம் பதிசூழ, நான்கு திக்கினு மைங்குரோ சத்தெல்லை நற் கதி தருமெல்லை, மீன்கு திக்குமத் தடங்கள்சு ரேந்திரங் கயே ந்திர வீடென்றே, வான்கு தித்தெழு கங்கையு மதிக்கும்பேர் பெற்றன மறைவல்லீர். (உகா)

வேறு.

வரந்தருமுக் களவினுக்கு வாயுகோ ணத்திசையி
னிரந்தரமா யெவ்வுலகு நிறைந்து நின்ற நிருமலனைக்
கரந்தையணி சடையானைக் கண்ணுதலை யெண்ணியுளத்
துரந்தைகெடுத் தருந்தவஞ்செய் தத்திரிமா முனியிருந்தான்.

அம்முனிவ னிருந்தவனத் தடியவர்க்கு முடியாத
மும்மலமு முடித்தருளு மூர்த்தியெதிர் காட்சிதாக்
கைம்மழுவு மிளமறியுங் கறைக்களமுஞ் சிறக்கநின்ற
செம்மலைப்போற் றினஞ்சிந்தை திரியாவத் திரியானேன். ()

தென்னவனுக் கொருகுருவாய்ச் சேர்தியக சூயையொடும்
பின்னொருகா லத்துமலர்ப் பிரமாதி மூத்தேவ
ருன்னிடத்து மைந்தர்களா யுற்றிடவும் பெறுதியென
வனனமுனி யெதிர்நோக்கி யமலனருள் செய்தலுமே. (௩௨)

தெவ்வர்புரஞ் சிரித்தெரித்த தீர்த்தனே யித்தீர்த்த
மெவ்வுலகு மென்பேர்கொண் டிசைக்கவரங் கொடுக்கவென
வவ்வரநாந் தந்தனமென் றருள்புரிந்து வரைபயந்த
மௌவனைக் கொடிபாகன் மறைந்திலிங்க வடிவானான். ()

எம்பெருமான் பரஞ்சோதி யிலிங்கவடி வாகியபின்
வம்பலருந் தும்பையொடு மணியிதழி மலர்சாத்திச்
செம்பொனடி யேத்தியனு தினம்பூசை புரிந்துதவத்
தைம்புலன்வென் றத்திரிசெஞ் சகங்குழையு மக்காலம். (௩௪)

வைக்குமனு நீதிமுறை வகுத்துரைக்குங் குருவிரும்பி
மிக்ககரு ணாகரன்போய்க் காசிபனை வேண்டுதலு
முக்குறும்பு மெறிந்தவனத் திரிமுனியை முன்வேண்டச்
செக்கர்நெடுஞ் சடைமௌலிச்சிவனருளென்றதற்கிசைந்தான்.

அடிவணங்கு முடியாசற் காதிமனு முறையோதிப்
பொடியணிந்தத் திரிசிவனைப் பூசித்தா னவ்வனத்தே
யிடியணிந்த கொடிவேந்து மிமையவருஞ் சாரணரும்
வடிவமைந்த வவ்விலிங்கம் வணங்கிவரம் படைத்தனரால். ()

வேறு.

மாசி லாதமணி போல மனப்பெற்
றாசை வேற வடக்கி யிருந்தான்
மூசு வண்டுறையு முக்க ளவுக்கோ
ரீச திக்கினிலு ரோமச னென்பான். (௩௭)

முந்தை நாள்விதி படைப்பது முன்னி
வந்து பூசனை புரிந்து வணங்கு
மெந்தை யானபிர மேசனை நாளுஞ்
சிந்தை யன்பினொடு பூசனை செய்தான். (௩௮)

அலங்கு பூவிலுறை யண்ணல் விரிஞ்ச
லிலிங்க மென்றுதொழு தேத்திறை தாளி
னலங்கொ ளன்புசெயு ரோம சனுளுங்
கலங்கு பல்பிரம வூழிகள் கண்டான். (நுக)

வேறு.

சுந்தி ரக்கொழுந் தணிந்தவன் முக்களாத் தலத்தை
யிந்தி ரத்துய்மி னன்சொல லறிந்துள மெழுப்ப
வந்து புக்கவக் காசிபன் மறையொருமூன்றுஞ்
செந்த டத்தினி லாடினன் வணங்கினன் சிவனை. (சும)

தோன்று முக்களாச் சோதியைப் பணிந்தருள் படைத்து
மூன்று கூப்பிடு தூரத்தின் மொய்த்தபூ வனத்தி
லான்ற கீழ்த்திசை தன்னிலாச் சிரமமொன் றுக்கி
யேன்ற வுத்தம மெய்த்தவம் புரிந்துவீற் றிருந்தான். (சுக)

ஆறு டற்பகை யடக்கியைம் புலக்குறும் பறுத்து
மீறு ளத்தந்தக் கரணங்க ளனைத்தையும் வென்று
சீறு முக்குண மொழித்திரு வினைத்துகள் சீத்து
மாறு மாணவ மொன்றையும் வேரற மாற்றி. (சுஉ)

வாச பேயமே முதலிய வரம்பெறு மகங்க
ளாசி லாமறைத் தவரொடு முறைவழா தாற்றிப்
பேசு பற்பல மகந்தொறும் பிழைபடாப் பலமுந்
தேசு லாவவிப் பாகமுஞ் சிவனுக்கே கொடுத்தான். (சுரு)

கனங்கு லாந்தமிழ் வரைவட சாரலிற் கவினும்
புனங்கு லாவிப முக்களா நிழனின்றும் போந்து
மனங்கு லாவிய யோகியா யிருந்தநாண் மதனை
யனங்க னாகென முனிந்தவன் முனிமுன்ன ரானான். (சுச)

தோற்று செங்கதிர் கோடிகூண் டொருவழி தொக்காங்
கேற்றின் மேல்வரு மெம்பிரா னிணையடி யிறைஞ்சி
யூற்று கண்ணினீ ரொழுகிட வானந்த முவட்டச்
சீற்றஞ் செற்றுயர் நற்றவன் றுத்தியஞ் செய்தான். (சுரு)

கணங்கொண் மும்மலக் காட்டினை வேரறக் கடிந்தாய்
குணங்கொண் மாமகப் பலனெலா மெமக்கெனக் கொடுத்தா
யிணங்கு நல்வரங் கேட்குதி யளிக்குது மென்ன
வணங்கு மம்முனிக் கருளினன் வரைமுனி வளைத்தான். ()

வேண்டு நல்வரம் பிறிதிலை யடியவர் வினைதீர்த்
தாண்ட நின்பதத் தன்பக லாமையே யடியேற்
கீண்டு வேண்டுவ தென்றலுஞ் சிவனதற் கிசைய
மீண்டு மின்னமோர் விண்ணப்ப முண்டென விளம்பும். (சஎ)

கூன்சு மக்கின்ற சிலைக்கொடுஞ் சூரனுற் குமைப்புண்
டூன்சு மக்கவோ வுயிர்சுமக் கின்றதென் றுயிர்த்து
மீன்சு மக்கின்றார் சுரரென வெதும்பிவெந் துயராங்
கான்சு மக்கின்றான் கண்சுமை சுமக்கின்ற காயன். (சஅ)

ஆயி ரங்கணன் றுயரிரு கண்கள்கண் டழிந்து
தாயி ரங்கவு நானிரங் கவும்வருந் தரமோ
போயி ரங்கிநான் யார்க்குரைப் பினுமிது போமோ
நீயி ரங்குதி யென்றன னிசைந்தன னிமலன். (சகூ)

இதம கன்றிடுஞ் சூரன்வெம் போர்புரிந் திகலுங்
கதம கன்றிட வெந்திறல் கன்றிடக் களிக்கு
மதம கன்றிட மதமக லாதகைம் மலையூர்
சதம கன்றனக் குய்யவந் தடுத்தது தருணம். (ருo)

பண்மு கத்தசொற் கௌரியைப் புதல்வியாப் பயக்கும்
விண்மு கத்தெழு மிமகிரி வேண்டநாம் வேட்டாங்
கொண்மு கத்தபூஞ் சரவணப் பொய்கையுற் றுலவச்
சண்மு கத்தொரு குழவியைத் தருகுவந் தந்தால். (ருக)

அயிலும் பற்பல படைகளு மறுமுகற் களிப்போ
மெயிலுஞ் சூரனும் பொடிபட வாங்கவ னேகிப்
பயிலும் போரிலத் தறுகண னுடலயில் பகுப்ப
மயிலுஞ் சேவலு மாகவம் மாவுரு மாறும். (ருஉ)

ஆத லாலுளந் துளங்கலை யெனவுரைத் தருளி
மாது பாகத்து னவத்தவ னிலிங்கத்துண் மறைந்தா
னேத நீக்கிய காசிப னுவகைகொண் டென்றுந்
தீதி லாச்சிவா னந்தத்திற் றிளைத்தன னந்நாள். (ருங)

சிரித்தெ ரிந்திடத் திரிபுரஞ் சீறிய சிவன்று
ளருத்தி கொண்டவக் காசிப னுசிக ளியப்ப
விரித்த வெண்குடை நீழலின் மேதினி யெல்லாம்
பரித்தி டுங்கரு ணாகரன் வந்தடி பணிந்தான். (ருச)

வந்த மன்னனே டளவளாய் மன்னவ வந்த
சிந்தை யாதெனப் புரோகிதன் வேட்டனைச் சேர்ந்தே
னிந்தை தீர்குரு வருளெனக் காசிப னினைந்தா
னந்த நாளாக சூழையோ டத்திரி யடைந்தான். (ருரு)

மனங்க லங்குருமுனிவரக் கண்டுளமகிழ்ந்தான்
சினந்து றந்தவ ரெதிரெதிர் முகமன்கள் செப்பிப்
புனம்பெ றும்பன்ன சாலையிற் புக்கினி திருந்தார்
நினைந்த காரிய நிகழ்த்தெனக் காசிப னிகழ்த்தும். (ருசா)

மதிக் குலத்தினில் வருங்கரு ணாகர மன்னன்
விதிக்கு மாமனு நீதிசொல் குரவனை வேட்டான்
கதிக்கு நீதியிம் மனுபதிக் குரைத்தனின் கடனென்
றுதித்த தென்மனத் தென்னலு மிசைந்தன னூரவோன். (ருஎ)

வழுதி வேந்தனு மந்திரி பதத்தினை வணங்கும்
பொழுதி லாசிகள் சொல்லியம் முனியொடும் போக
விழுது விட்டசெஞ் சடையினன் விடுத்தினி திருந்தா
னிழுதை நெஞ்சினே டிந்திர னுங்குவந் திருந்தான். (ருஅ)

பாக சாதனன் காசிப னடியிணை பரவி
வேக வார்கணைச் சூரனல் வெருவின னென்ன
யாக மொன்றமைத் திகற்கரு ணாகர னேடும்
போகி யைச்செல விடுத்தனன் மகிழ்ச்சியுள் பூப்ப. (ருக)

இந்தி ரன்றனை விடுத்தவ னிருந்தன னிறலி
நந்து தீவினிற் கிருட்டிணை நதிக்கரை நண்ணிச்
சந்த மால்வரை முக்களா மகத்துவஞ் சாற்று
மந்த விந்திரத் துய்மின னுங்குவந் தணைந்தான். (சா௦)

அணைந்த மன்னற்கு விருந்தளித் தளவளாய் விடுப்பப்
பணிந்து போயவன் பதிபுக்குப் பற்பல வைக
லிணங்கு சேனையோ டிருந்தெழுந் தொருதினத் திவனை
வணங்கி னன்றனை மலயத்தை வலம்வர விடுத்தான். (சாக)

என்று மிவ்வன மமரரு முனிவரு மிகன்மேல்
வென்றி கொண்டடு வேந்தருங் குழீஇவந்து விரவ
நன்று பெற்றவர் வேட்டன வேட்டன நல்கி
யொன்று சிந்தையோ டிருந்தன னுறுபெருந் தவத்தீர். (சாஉ)

## வேறு.

மாசில் வரம்பெறு காசிப மாமுனி வாழு
மாசிர மத்தினுக் கக்கிளி திக்குள தம்மா
காசில் குணம்பெறு கண்ணுவ மாமுனி நண்ணும்
பூசல் சுரும்பின மூசி மூரன்ற பொதும்பர். (சுங)

அப்பொழி லூடு தவஞ்செய்த கண்ணுவ ஞானோன்
மைப்படி கண்டனை வந்தனை செய்தடி வாழ்த்த
முப்புரம் வென்றொரு முக்கள லூடுறை மூர்த்தி
கொப்பினை யொப்புறு மாதொடு காட்சி கொடுத்தான். (சுச)

விட்டு விளங்கிய செஞ்சடை யீசனை வேண்டி
மட்டறு சித்தி வழங்கென வண்ணல் வழங்க
வட்டம சித்தியு மப்பொழு தெய்தின னம்மா
வுட்டெளி வெய்த மகத்துவ வேத மூணர்ந்தீர். (சுரு)

இருபத்தொன்றுவது பஞ்சக்குரோசத்தெல்லையுரைத்த
சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கூசஉ).

---

## இருபத்தோன்றவது பஞ்சக்குரோசத் தொல்லையுரைத்த சருக்கச் சுருக்கவசனம்.

நைமிசாரணிய வாசிகளாகிய இருடிகள் சூதமுனிவரைநோக்கி ச் சுவாமீ! தேவேந்திரனுக்குப் பிரமகத்திதோஷம் வந்ததும் அத் தோஷம்நீங்கிய விதமும் அருளிச்செய்யவேண்டுமென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லுவார். தேவர்களுஞ் சாரணருந் தன்னைச்சூ ழ்ந்துநிற்க ஒருநாள் தேவேந்திரன் சபாமண்டபத்திலே கொலுவீற் றிருக்கும்போது அரம்பையென்பவள் நடித்த நடனத்திலே தன் க்ருத்தைச் செலுத்தித் தேவேந்திரன் அச்சமையம் அங்கேயெழுந் தருளிய குருவாகிய வியாழபகவானை வணக்கஞ்செய்யாமலிருந்தான். உடனே குரு அவமானமெய்தி அவ்விடத்தைவிட்டு அப்பாற்சென் றார். செல்லவே தேவர்களெல்லாரும் நடுநடுங்கினார்கள். இந்திரனும் பின்புதெரிந்து நமக்குக்குற்றம் பெரிதும் வந்ததென்று மிகப்பயந் தான். இவையனைத்துந்தெரிந்து அசுரர்கள் இந்திரனைச்சயிப்பதற்கு

இதுதான் சமையமென்று சந்தோஷித்தார்கள். இந்திரனும் அசுரர் குலத்தலைவனாகிய துவட்டாவென்பவன் புத்திரனாகிய விச்சுவரூபனைத்தனக்குக் குருவாக நியமனஞ்செய்துகொண்டான். இதனைத் தெரிந்த அசுரர்கள் விச்சுவரூபனைநோக்கி நீயெங்களுடைய தங்கைபுத்திரனாக இருக்கையால் எங்களுக்குச் சாதகமானகாரியங்களைச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். அவனும் அவர்கள் கருத்துக்கிசைந்து ஒப்பற்ற வஞ்சகரூபமாகிய ஒரு கவசத்தைச் செய்து இந்திரனுக்குத் தரித்துக்கொள்ளும்படி கொடுத்துப் பின்பு ஒருயாகஞ்செய்து அந்தயாகத்திலே தேவர்களுக்குக்கேடும் அசுரர்களுக்கு ஆக்கமும் உண்டாகும்படி சிந்தனை செய்தான்.

அதனை ஞானத்தினாலே இந்திரனறிந்து விச்சுவரூபனுடைய மூன்றுதலைகளையும் அறுத்தெறிந்தான். அறுபட்ட அத்தலைகள்மூன்றும் மூன்றுபறவைகளாகிப் பறந்துபோய்விட்டன. இங்ஙனமாகக் குருநிந்தனைசெய்ததால் இந்திரன் பிரமகத்திதோஷத்தால் பீடிக்கப்பட்டு மிகவும் அளவுகடந்த வருத்தமடைந்தான். இந்தத்துன்பத்தை நீக்கவேண்டுமென்று தேவர்களெல்லாரும் யோசனைசெய்து பூமிக்கும், பெண்களுக்கும், சலத்துக்கும், மரத்துக்கும் வேண்டியவரங்களைக்கொடுத்து இந்திரன் பிரமகத்தியை நான்குபாகமாக்கி நீங்கள்நால்வரும் ஏற்றுக்கொள்கவென்று கொடுத்துவிட்டார்கள். பின்புபுத்திரனையிழந்த துவட்டா ஆனவன் இந்திரனை வெல்லும்பொருட்டு ஒருபிள்ளையைப்பெற யாகம் ஒன்றுசெய்தான். அந்தயாககுண்டத்தினின்றும் விருத்திராசுரனென்னும் ஒரு அசுரன் பிறந்து இந்திரனோடு நெடுங்காலம் யுத்தஞ்செய்துகொண்டிருந்தான். அந்தயுத்தத்துக்குத் தோற்று ஓடிப்போய் இந்திரன் பிரமதேவனையடைந்து விருத்திரனைக்கொல்லுதற்கு உபாயம் யாதென்று வினவலும், பிரமன்சொல்லுவான் வாராய் இந்திரனே! ததீசிமகாமுனிவர் இருப்பிரசாயன போசனமுடையவராதலால் அவருடைய முதுகெலும்பு மிகப்பல முள்ளது அதனை நீ போய்க்கேட்டால் உடனே கொடுத்துவிடுவார்; அவ்வெலும்பைக்கொண்டு வந்து வச்சிராயுதஞ்செய்தால் அதுகொண்டு விருத்திரனுடைய உயிரைப்பிரிதது விடலாமென்று கூற உடனே இந்திரன் கருணையேவடிவமாகிய ததீசிமுனிவரிடஞ்சென்று வந்தகாரியத்தைத்தெரிவித்தான் அம்முனிவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் தன்முதுகெலும்பைக்கொடுக்க வாங்கிவந்து மயனிடங்கொடுத்து வச்சிராயுதஞ்செய்து அவ்வச்சிராயுதத்தால் இந்திரன் விருத்திராசுரன் தவஞ்செ

ய்து கொண்டிருக்குமிடஞ் சென்றுபோர்செய்து அவன் தலையை அறுத்தெறிந்தான்.

உடனே விருத்திராசுரனைக்கொன்ற தோஷம் பிடித்துச்சகிக்க முடியாத துயரத்தையடைந்து இத்துன்ப முழுவதும் நீங்குவது எவ்வாறென்று யோசனைசெய்து பாவநாசத்தலத்திலே முக்களா நீழலில் முளைத்த முழுமருந்தாலே தான் நீங்குமென்று துணிந்து, பாவநாசத்தை நோக்கிப்புறப்பட்டு வரும்போது பாவநாசத்துக்கு ஐந்துகுரோசதூரத்தெல்லையிலே யிருக்கிற ஒரு தீர்த்தத்தின் சமீபமாகவரும்போது தன்னைப்பிடித்த பிரமகத்திதோஷம் நீங்கி அக்கினியிற் பட்டபஞ்சுபோலப் போய்விட்டது. இந்திரன் அந்தத்தீர்த்தத்திற் படிந்து குணதிசையிலே சிவலிங்கபூசைசெய்து பொதிய மலையைநோக்கிவந்து வேததீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து முக்களாநீழலிலெழுந்தருளி யிருக்கிற சிவலிங்கப்பெருமானைத் தரிசனஞ்செய்து கணப்பொழுதிலே வேண்டியவரங்களைப்பெற்று மீண்டு தேவலோகஞ்சென்று வெளிப்படாதிருந்த குருவாகிய வியாளபகவானைத்தரிசனஞ்செய்து, முன்போல அரசுசெய்திருந்தான். இங்ஙனம் இந்திரனுக்கருள்புரிந்த முக்களாமூர்த்தியினுடைய விக்கிரமசிங்க புரத்துக்கு நான்குபக்கமுமுள்ள ஐங்குரோசத்தெல்லையேநல்ல மோக்ஷந்தருமெல்லையாகும். இந்த எல்லையிலுள்ள இரண்டுதடாகங்கள் சுரேந்திரமோக்ஷம் என்றும் கயேந்திர மோக்ஷம் என்றும் பேர்பெற்றன. வேதங்களுணர்ந்த முனிவர்களே! இன்னுங்கேளுங்கள் வேதவடிவமாகிய முக்களாவுக்கு வாயு கோணத்திலே பரமேசுரனைநோக்கி அத்திரிமுனிவர் தவஞ்செய்துகொண்டிருந்தார்; அவரெதிரே சிவபெருமானெழுந்தருளிப் பாண்டியராசனுக்கு ஒரு குருவாகப்போயிருப்பாய் பின்னர் திரிமூர்த்திகளும் உனக்குப் பிள்ளையாக வருவார்களென்றும் பலவரங்களையுந் தந்தருளினார்.

முக்களாவுக்கு ஈசானத்திலே பிரமாவினாலே பூசிக்கப்பட்ட விரிஞ்ச இலிங்கத்தை உரோமசமுனிவர்பூசித்துத் தவஞ்செய்து கொண்டு பலவூழிகாலமிருந்தார். முக்களா மூர்த்தியைவந்து வணங்கிஅம் முக்களாவுக்குக் கீழ்த்திசையில் மூன்று கூப்பிடுதூரமுள்ள இடத்தில் காசிபமுனிவர் தவஞ்செய்துகொண்டிருந்தார்; அவரெதிரே பொதியமலையின் வடசாரலில் யோகியாயிருந்து மன்மதனை யெரித்த வயிராசலிங்கப்பெருமானெழுந்தருளி அசுரர்களை யொழிப்பதற்கு வேண்டியவரங்களைத் தந்தருளிமறைந்தனர். இந்த வரங்களையெல்லாம்

பெற்றுத்தவஞ்செய்திருக்குங் காசிபமுனிவரிருக்குமிடத்துக்கு அக்கினிதிக்கிலே பன்னசாலைசெய்து கண்ணுவமாமுனிவர் தவஞ்செய்துகொண்டிருப்பது கண்டு பாவநாசப்பெருமான் உமாதேவியாரோடும் அவரெதிரெழுந்தருளுதலும், கண்ணுவமுனிவர் வணங்கித் தோத்திரஞ்செய்து அட்டமாசித்திகளும் அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அப்பிரார்த்தனைப்படி வரந்தந்து சிவபிரான் தமதிருப்பிடத்துக்குச் சென்றார்.



## இருபத்திரண்டாவது : தக்கன்வேள்வி சிதைத்த சருக்கம்.



மிகத்தெளி வுளத்துப் படைத்தமெய்ஞ் ஞான மெய்க்தவக் காசிபன் முதலோர், மகத்துவ முரைத்தேன் முத்தமிழ் வளர மலயத்தில் வந்துவீற் றிருந்து, சகத்தினுள் ளதத்தைத் திருத்தியே காக்கத் தாமிரைநதிதனை யாக்கு, மகத்தியன் பெருமை யறிந்தவா றுரைக்கேன் யாருரைப் பாரவன் மகிமை. (க)

மேதினி யுயர்ந்த வேதுவே தந்த மேதினி சமதல மாகப், போதமா முனிவன் போந்தவா றென்னை போந்தவன் றிரும்பவும் போகா, தோதுமா மலயத் திருந்தவா றெவன்கொலுரையென முனிவரர் கேட்பச், சூதமா முனிவன் வகையொடும் விரித்துச் சொல்லின னற்புதந் தோன்ற. (உ)

காசிபன் றனக்குக் கலைமதி புனைந்த கண்ணுதல் கொடுத்தருள் வரத்தை, வாசவனவையி லுரைத்திடக் கேட்டு மகதியாழ்முனிவரன்வரலும், பாசம்விட் டகன்று பணிவரை நோக்கிப் பணிந்தது பணிந்தான் மகிழ்ந்து, தேசுபெற் றோங்குங் கனவுப தேசஞ் செப்பவந் தனமென வுரைத்தான். (ங)

எளியனே னியற்றுந் தவப்பய னாகி யிங்கெழுந் தருளினை கனிவா, யளிசிறந் துரைத்தி யெனவுனக் கினிமே லம்பிகை புதல்வியாய் வருவாள், வளியினையடக்கி மூவைந்தா மெழுத்து மந்திர மூலமந் திரத்தோ, டொளிபெற வருளித் தவம்புரிக் திருத்தி யெனமுனி யுரைசெய்து போனான். (ச)

நாதபூ தரமா மிமயமன் னங்கா ணூரதன் சொற்றசொற் படிக்கு, மாதவம புரிந்து வனத்திடை யிருந்தா னம்பிகை மத லையாய் வருதற், கேதுமுன் னடந்த காதையொன் றுளதா மன்னதை யறிந்தவா விசைத்தும், போதகத் துறையும் வேத னைப் பொருவும் புரிசடை யந்தண்ணீர் கேண்மின். (ரு)

வே று.

சேமியம் படையி னுன்ற னித்தியப் பிரளயத்தின்
மாமலர்க் கடவுளாதி மன்னுயிர்த் தொகுதி யெல்லாந்
தோமறத் தன்னு ளாக்கிச் சூழ்மகா சலத்தி னுப்பண்[தான்சு.
காமனைக் கறுத்தான் றன்னைக் கருத்தில்வைத் தனந்தர் செய்

அவ்விராப் புலர்ந்த காலை யாழியா னுந்தி நாப்பண்
செவ்விய கமல மொன்று திளைத்ததக் கமலந் தன்னின்
மௌவல்வா ணகைப்பா மாதை மணந்தவன் வந்து தோன்றி
யெவ்வமில் சனக னாதி யீரிரு புதல்வர்ப் பெற்றான். (எ)

ஆக்கவர் தம்மை நோக்கி யகிலலோ கங்க ளெல்லாம்
பாங்குறப் படைத்தி ரென்றான் பரம்பர னருளா லன்னோர்
தீங்கறு ஞானம் பெற்றா ராதலான் மறுத்தல் செய்தா
ரோங்கனல் சிநத வேத னுருத்தன னுருத்த காலை. (அ)

மலரவன் புருவ நாப்பண் மணிகண்டன் வந்து தோன்றி
நிலவிய சீற்ற மாற்றி நிகரிலா வுருத்தி ரேசர்
பலர்தமைப் படைத்தா னன்னோ ருக்கிரப் பகுதி நோக்கிக்
கலைமகள் கணவ னஞ்சிக் கடவுளைப் பணிந்து சொல்வான். ()

பனகவார் சடில நாத படைத்தலை விடுத்தி யென்றான்
சனகனா தியர்தம் மோடுந் தற்பரன் கயிலை சார்ந்தா
னனகனே கியபின் வேத னையிரு புதல்வர்ப் பெற்றுக்
கனகவா னாதி யன்னோர் படைத்திடக் கருணை செய்தான். ()

பதின்மரிற் றக்கன் பானு ராயணிப் பசுந்தேன் றோன்றிச்
சதியெனு நாமம் பூண்டாள் வளர்ந்துழித் தக்க னல்கப்
புதுமலர் மாலை சூட்டும் பூங்குழற் சதியை வேட்டான்
சதிபெற நடித்து மின்னார் சரிதாச் சரிக்குச் சென்றான். (கக)

மறையவ னுதவும் பாலன் மகஞ்செய நினைத்துப் பூமா
னிறையவ னாதி தேவ ரிருந்தவ ரெவரு மெய்த

முறைமுறை யழைத்தான் மாம ஞமெனு முறையை நோக்கிக்
கறைமிடற் றிறைவன் றன்னைக் கனவினு நினைத்தா னில்லை. ()

திருமகள் தாதை செய்யுஞ் செய்தியைத் தேவி கேட்டுப்
பரமனைத் தொழுது தாதை புரிமகம் பார்த்தல் வேட்டே[ண்
னருமறைப் பொருளே போதற் கிசைந்தருள் புரிவா யென்று
மருமலர்க் குழலாய்சென்றால் வருமுனக் கவதி யென்றான்.()

சிற்பர னுரைத்தல் கேட்டுத் திருமுகங் குழைந்தா ணோக்கித்
தற்பரன் வருந்தேல் போதல் கருத்தெனிற் சார்தி யென்று
னிற்புற விடைகொண் டேகி யிடபவா கனமேற் கொண்டு
பற்பல கணங்கள் சூழப் பல்லிய முழங்கச் சென்றாள். (கச)

பரிபுரஞ் சிலம்ப வேள்விப் பந்தரில் வந்தாள் வந்த
திரிபுரை முகநோக் காது சீறின னிந்தை செய்தா
னெரிபுரை முகத்தைப் பார்த்தா ளிவனுக்கோ மகளு மென்று
புரிபுரம் வெந்து செந்தீப் பொடிசெயக் கனன்று நீத்தாள். ()

சித்திர பானு மூட்டித் திருவுருத் தேவி நீத்தல்
வித்தக வீணை யேந்து நாரதன் விளம்பக் கேட்டு
மத்தக விழியான் சீறி வார்சடை நிலத்தில் வீசப்
பத்திரம் படைத்து வீர பத்திர னுதித்தா னன்றே. (கசா)

அன்னவ னெழுந்து நாத னடியிணை பணிந்து போற்றிப்
பன்னகப் பணியா யேது பணிவிடை யென்ற போது
கன்னவி லுருளாய் தக்கன் காமுறும் வேள்வி யன்றே
யின்னலுற் றழுங்கும் வண்ண மீறுசெய் யெழுதி யென்றான்.

வேறு.

வேக வெங்கணஞ் சூழ விரைந்துபோ
யாக சாலையி லாரையுந் தண்டித்துப்
போக வாளி கொடுமுடி போக்கியே
* சாக சேகரந் தக்கனுக் காக்கினான். (கஅ)

மற்ற வானவ ரஞ்சி மருளுறப்
பற்ற கர்த்தும்வெம பாணியு நாசியு
மற்று வீழ வறுத்தும்வெஞ் சீற்றத்தாற்
புற்றில் வாளர வென்னப் புழுங்கினான். (கக)

---

* சாகம் - ஆடு.

நெறித்தி ருந்து நெருப்பினெய் தாரையாக்
குறித்து விட்டுக் குலவு முனிவரைத்
தறித்து நாட்டிய யூபத் தறியெலா
முறித்து வேள்வி கணத்தின் முடித்தனன். (உ௰)

கன்று கோபந் தணிந்து கயிலையிற்
சென்று காமனைச் செற்ற பரமனை
நின்று போற்றி நெருங்கு கணம்பல
வென்றும் வாழ்த்த வினிதிருந் தானரோ. (உக)

இருபத்திரண்டாவது தக்கன் வேள்விசிதைத்த
சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (சுசுரு).

---

இருபத்திரண்டாவது தக்கன் வேள்வி சிதைத்த
சருக்கச் சுருக்கவசனம்.

மெய்ஞ்ஞானத்திற் றெளிந்த வுள்ளத்தினையுடைய காசிபமுனிவர் முதலோரது மான்மியத்தைச்சொன்னேன் இனிப் பொதியமலையில்வந்திருந்து உயர்ந்த வடபூமியைச்சமமாக்கித் தாமிரநதியைவரவிடுத்த அகத்தியமாமுனிவரது பெருமையைச் சொல்லுகிறேனென்று சூதமுனிவர்சொல்லச் சிபருப்பதமலையின்கண்ணே கூடியமுனிவர்கள்கேட்டுச்சுவாமீ! பூமி உயர்ந்தகாரணம்யாது? அப்பூமிசமமாக அகத்தியமாமுனிவர் பொதியமலைக்கு வந்தகாரணமும் திரும்பப்போகாது பொதியமலையிலே யிருந்தகாரணமும் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தலும், சூதமுனிவர்சொல்லுவார். காசிபமுனிவருக்குப் பாவநாசத்திலெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமான் கொடுத்த வரத்தை இந்திரன்சபையிலே நாரதமுனிவர்கேட்டு இமயமலையரசனிடம் வந்துசொல்லி அரசனே! யினிமேலுனக்கு உமாதேவி புத்திரியாகவருவாளென்று கூறுதலும் இமயராசன் கேட்டு மிக்கசந்தோஷமடைந்து அவ்விதம் உமாதேவி புத்திரியாக வருதற்கு நான் செய்யவேண்டிய தவம் யாதென்றுகேட்க, நாரதமுனிவர்சொல்லுவார் பதினைந்தெழுத்துக்களையுடைய மந்திரத்தை மூலமந்திரத்துடனே செபஞ்செய்து தவம்புரிந்திரு என்று அருளிச்செய்தலும் அந்தப்படியே இமயராசன் தவஞ்செய்துகொண்டிருந்தான். இனி உமாதேவி புத்திரியாகவ

ருதற்கு முன்னடந்த கதையொன்றுள்ளது அதைச்சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சூதமுனிவர் பின்னுஞ் சொல்லுவார்.

விஷ்ணுமூர்த்தி தன்னுடைய தினப்பிரளயத்திலே பிரமதேவர் முதலிய எல்லாவுயிர்த்தொகைகளையுந் தன்னுள்ளே யடக்கிப் பரமேசுரனைத் தியானஞ்செய்து திருப்பாற்கடலிலே நித்திரைசெய்தார். அன்று இராத்திரி விடியும்போது விஷ்ணுவினுடைய உந்திக்கமலத்திலே பிரமதேவன் றோன்றிச் சனகர் முதலாகிய நான்கு புத்திரரைப்பெற்றுப் படைப்புத்தொழில் செய்யும்படி சொன்னான். அப்புத்திரர்கள் பரமேசுரன் றிருவருளால் யோகத்தை யடைந்து பிதாவின் சொல்லை மறுத்துவிட்டபடியால் பிரமன் அதிக கோபங்கொண்டான். அந்தச்சமயம் அவனுடைய புருவமத்தியிலே நீல்கண்டத்தையுடைய சிவபிரான் றோன்றிப் பிரமதேவனது கோபத்தைமாற்றி அனந்தம் உருத்திரரைப்படைத்தார். அவர்கள் மிகுந்த உக்கிரமுடையவர்களாக இருத்தலைப் பிரமதேவன் கண்டு பயந்து படைப்புத்தொழிலை விட்டுவிடவேண்டுமென்று சிவபிரானை வணங்கிப் பின்னும் பத்துப் புத்திரரைப்பெற்றுப் படைப்புத்தொழில் செய்யும்படி நியமித்தான். அப்புதல்வர்களுள்ளே தக்கனென்பவனிடத்திலே நாராயணியாகிய உமாதேவி புத்திரியாகவந்து சதியென்னும் பெயரையடைந்து சிவபெருமானை விவாகஞ்செய்து கொண்டிருந்தாள்.

அதன்மேல் தக்கன் ஒருயாகஞ்செய்ய நினைத்துச் சகல தேவரையும் வரவழைத்தான். பரமேசுரனைத் தன்னுடைய மருமகன்றானேயென்று அவமதித்து வரவழைத்தானில்லை. இவ்விதம் தந்தையாகிய தக்கன் யாகஞ்செய்வதை உமாதேவி தெரிந்து அந்தயாகத்தின் சிறப்பைப் பார்த்துவரவேண்டுமென்று சிவபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு யாகசாலைக்கு வந்தனள். அதுகண்ட தக்கன் தன்னுடைய மகள்தானேயென்று நிந்தித்து உமாதேவிக்கு மரியாதை செய்யாதிருந்துவிட்டான். அப்போது உமாதேவிக்குக் கோபம் அதிகரிக்க இந்தப்பாவிக்கு நாம் புத்திரியாயிருத்தல் தகாதென்று நினைத்துத் தன்னுடைய திருவுருவை நீக்கிவிட்டு அப்புறஞ் சென்றாள். இவையெல்லாம் நாரதமுனிவராலே சிவபிரான் தெரிந்து மிகச்சினந்து தம்முடைய சடையை நிலத்திலே அறைந்தார். அறைந்த இடத்தினின்றும் வீரபத்திரர்தோன்றிச் சிவபிரான் கட்ட

ஊப்படி யாகசாலைக்குவந்து அங்குள்ளார் யாவரையுந் தக்கவாறு தண்டனைசெய்து தக்கனுடைய தலையை ஒருபாணத்தினால் அறுத்தெறிந்து யாகசாலையையும் அழித்து யாகத்தம்பசதையும் முறித்தெறிந்துவிட்டுக் கோபந்தணிந்து கணங்கள் சூழ்ந்துவரக் கயிலாசத்துக்குச்சென்று சிவபெருமானை வணங்கி வீற்றிருந்தனர்.



## இருபத்துமூன்றுவது: பார்வதி திருவவதாரச் சருக்கம்.

அந்த யாகத்தி லாகத்தை வேகத்தால்
வெந்து வீழ வெறுத்தருள் கோமளை
புந்தி கூர்தவம் வேட்டுப் பொருப்பிறை
வந்த கானக வாவியி லெய்தினாள், (க)

ஏரி நாப்ப ணிரண்டு குழவியாய்
வேரி வாரிச மீது விளங்கினாள்
பூரி யாநின் றெடுத்துப் பொருப்பிறை
பாரி மேனகை பாற்கொடுத் தானரோ. (உ)

வேறு.

உயருமைங் நாக மெனம்வொரு புதல்வ னுதித்தன னுபயகன் னியர்க்குஞ், செயிரறக் கங்கை பார்ப்பதி யெனும்பேர் புனைந்தனன் வளர்த்துளஞ் செழித்தான், வயிரவாட் படையால் விண்முழு தாளி வரைச்சிறை யரிந்தன னங்கா, ளயர்வுறத் தளர்ந்து விரைந்துமைங் நாக மாழியி லமிழ்ந்திய தம்மா. (ங)

செங்கரங் குவித்துத் தினந்தொறும் பணிந்து தீவினைத் துகளறத் துடைப்போ, மிங்கெமக் களிப்பா யெனவிம வானை யிந்திர னிரத்தலுங் கொடுத்தான், பொங்குபே ருவப்பிற் கொண்டுபோய்ச் சிறந்த பொன்னகர் புகுந்துபூ சிக்கக், கங்கையப் பூசை மகிழ்ந்தவன் பாவ வழுக்கெலாங் கழீஇயினி திருந்தாள். (ச)

வடிக்கின்ற மழலை வாயமு தோடு மலைமன்னன் மணிமுன்றி றவழ,வடிக்கின்ற பந்து மம்மனை கழங்கு மாடுமூ சலுூ

ம்பயின் றிடுநாட், கடிக்கின்ற பாம்பை மதியொடு முடிக்குங் கணவனுர் திருமணங் கூடி, முடிக்கின்ற பருவம் வரவரக் கூந் தன் முடிக்கின்ற பருவமவங் துளதால். (௫)

இருப்பிறை யிடத்து வடிவெனப் படைத்தா னிணையிலாப் பெருந்தவ மிழைகரும், பொருப்பிறை பெறவும் வளர்க்கவு மூதிதத பொற்பிறை யாயினுண முகத்தே, கருப்பிறை முடிய முடித்தவன் முடிக்குங் கலைப்பிறை தனக்குமவான் பிறைக்கும, திருப்பிறை தனக்கும் வேற்றுமை தருமே திலக வா ணுதன்மணிப் பிறையே. (௬)

சுரும்புரு வமைந்த துணைவிழி மேனை தொட்டிவிட் டாட்டிமுத் தாட்ட, விரும்புரு வமைந்து வளர்ந்தவண் முகத்தே வியப்புறு மூவமையை விலக்கி, யருபபுரு வங்க ளம்புரு வஞ்சேர்த் தங்கசன் செங்கரத் தேந்துங், கருமபுரு வமு மொன் றிரண்டுநா மென்னக் காட்டுமே கரும்புருவங்கள். ()

வெண்ணிறம் படைத்துச் சேயரி பரந்து வித்தகக் கருமணி விளங்கித், தண்ணிலா நீற்று வெளுப்புமெய்ச் சிவப்புந் தனிக்களக் கறுப்புமோர் படலாம், கண்ணனுங் கமலக் கண்ணனும் பலவாங் கண்ணனுங் காண்கிலா மூன்று, கண்ணனைத் தங்கண் யாவருங் காணக் காட்டுமே வாட்டடங் கண்கள். (௮)

மறுவிலா மேனை வருகென வழைப்ப வளரிள நகைநிலாக் கொழித்துச், சிறுதமி ழிலங்கத் தோட்டிணை யிலங்கச் செல்லுவாள் செவ்விவாய்த் திடலா, லறைசிறைச் சிம்புளாயினேஞ் சகோர மாயினே மில்லையென் றெண்ணக், குறைமதி புனைவார் நிறைமதி சூறை கொள்ளுமே குளிர்முக மதியம். ()

பணந்தவா விடவாய்ப் பாம்பரைப் பரமன் பனிவரை யுயிர்க்குமுன் பாகத், தணந்தநா ளொருகைக் கிளைசரித் திலங்கு மம்பிகை யழகிய கோலங், தணந்தநா ளொருகைக் கிளை படைத்தெண்ணித் தளர்ந்தன்றோ தவஞ்செய்தா னெழில்வாய்த், திணந்ததே யிருகைக் கிளையிது கண்டாலென்செய்வா னென்றறி கிலமே. (௧௦)

ஒருவரை வளைத்து மூவரை யிகலு மொருவரை யுருவரை யுருவி, லருவரை யளவி லறிவரை வரைமே லவரையீங் கழைக்குது மென்றோ, தருவரை வணங்கும பனிவரை

தந்த தற்பரை பொற்புறு மார்பத், திருவரை தயங்க வுளர நாட் கொளுமே யிணைத்தடிக் கொளுமுலைக் குரும்பை. (கக)

துறுமணிச் *சுழியஞ் சுடிகையோ டசையுந் தொங்கல் பொற் பணிச்சுமை யோடு, நறமுகைக் கோங்கைச் சுமைசுமந் தாலு நாடிக்காண் பதற்கரு மையினு, லுறுபெரும் புவன மொக்கவுந தாங்கி யுணரொணு வொருவனே யல்லா, லிறுமின் றுமெனவு மிறுபடா மருங்குற் கெம்மருங் குவமைபெற் றிசைப்பேம். (கஉ)

எண்கலை படச்சி றிடுங்கலை யுரியு மிகற்புலி யதளும் போர்த் துடுத்த, வண்கலை யிறைக்கு மயங்கலை யளிக்கு மான்கலை கருக்கண்மங் கலைமுன், வெண்கலை மிலைந்த. முடிமுதற் புகுந்து விளங்கலை யடைந்தநா ளுடுத்த, வொண்கலை குறைநா ணிறைகலை யெனுமே யொக்கலை யுடுத்தபொற் கலையே. (கங)

திரவரை பரவு மிமகிரி யுதவுந் திரிபுரை யானசேவடிழைக்கு, விரிதரும் பஞ்சு மனிச்சமென் போதும் வெம்பரலென்னமே வியதாய்ப், பரிபுரம் புலப்பச் சிலம்புசெஞ் சதங்கை பாடகம் பணிபல தாங்கி, யரன்முடி தேடு மன்னமு நடைகற் றறியுமா றடிநடை தருமே. (கச)

இவ்வகைப் பருவந் தழைத்தது நோக்கி மேனையு மிறையிம வானு, மவ்வகை யறிந்து மணமபெறுங் கால மடுத்ததென் றகமகிழ் பூத்தார், மௌவல்வாண் முறுவற் பார்ப்பதி தனக்கு மவுணனை யடைவுறுங் காலஞ், செவ்விதி னெண்ணத் திருவுளத் தறிந்து திருத்தந்தைக் கினைன செப்பும. (கரு)

பொன்னெடுங் குன்ற மொருகரத் தேந்தி வெள்ளியம் பொருப்பில்வீற் றிருக்கு, மன்னனும் பவள வரையினை யளவில் பணம்பெறு மணிப்பணிப் பொருளை, யன்னமுங் கிரியுமின்னமு மறியா வளப்பரும் பெருமையி னானை, யென்னகத் திருத்தித் தவஞ்செய நினைத்தே னிங்கிதற் கிசைதிநீ யெந்தாய். (கசு)

என்றலுந் தாதை யிசைந்தனன் மேனை யிசைந்திலா ளொருவழி யிசைந்தா, ளொன்றிய சேடி மாரொடுந் தவத்து

* சுழியம் - குறுக்கல் விகாரம்.

க் குரியன வுதவினன் விடுப்பத், துன்றுபூஞ் சோலை புகுந்தவத் தோகை தொடங்கின ளருந்தவ மிப்பால், வென்றிவெள்விடையோன் யோகத்தி லிருந்த வினைவெலாம் வியப்புற வுரைப்பாம். (கஎ)

இருபத்துமூன்றாவது பார்வதி திருவவதாரச்
சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (கூ௮௦).

---

## இருபத்துமூன்வறாது பார்வதி திருவவதாரச் சருக்கச்சுருக்க வசனம்.

மேலே சொல்லிய தக்கனுடைய யாகசாலைவெந்து சாம்பராய்ப் போகும்படி கோபஞ்செய்து வெறுத்துவிட்ட உமாதேவியானவள் இமயமலை யரசன் தவஞ்செய்துகொண்டிருக்குங் காட்டினிடத்துள்ள தடாகத்தின் கரைப்பக்கஞ்சென்று அந்தத்தடாகத்தின் மலர்ந்த தாமரைப்பூவின் மேலே இரண்டு பிள்ளைகளாகத் திருவுருக்கொண்டிருந்தாள். அதைக்கண்டு இமயமலை யரசன் சந்தோஷமுற்று அப்பிள்ளைகளிரண்டையும் எடுத்துத் தன் மனைவியாகிய மேனை என்பவள் கையிலே கொடுத்து ஒரு பிள்ளைக்குக் கங்கை என்றும் ஒருபிள்ளைக்குப் பார்வதியென்றும் பெயரிட்டு வளர்த்துவந்தான். அதன்மேல் இமயமலைக்கு மைந்நாகம் என்னும் ஒரு பிள்ளை பிறந்தது. அதுவும் வளர்ந்து இந்திரன் வச்சிராயுதத்துக்குப் பயந்து கடலிலேபோ யொளித்துக்கொண்டது. பின்பு இந்திரன் இமயமலை யரசனிடம்வந்து யாசித்து எங்களுடைய தீவினையெல்லாம் நீக்கும்படிக்குக் கங்கையாகிய புத்திரியைத் தரல்வேண்டுமென்று கேட்டு வாங்கிக்கொண்டுபோய்ப் பொன்னுலகத்தில் வைத்துப் பூசித்திருப்ப, அப்பூசனையைக் கங்கையானவள் மகிழ்ந்து இந்திரன் முதலியோர்கள் பாவங்களைக்கழுவி அங்கேயிருந்தாள். இதுநிற்க பார்வதிதேவி பந்து அம்மானை கழங்கு ஊசல் முதலிய விளையாடல்களைச் செய்து பேதைப்பருவங்கடந்து எல்லா அவயவங்களு மங்கைப் பருவத்துக்குரிய அழகுகாட்ட, வளர்ந்துவருங்காலத்தில் இமவானும் மேனையும புத்திரியைநோக்கி மணப்பருவம் வந்துவிட்டதேயென்று இவளுக்குத் தக்க நாயகன் வருஞ்சமயத்தை ஆராய்ந்திருந்தார்கள். அதைப் பார்வதிதேவி குறிப்பாலறிந்து தன் பிதாவை

நோக்கிக் கைலாசமலையி லெழுந்தருளியிருக்குஞ் சிவபிரானை என்னுள்ளத்திலே வைத்துத் தவஞ்செய்யவேண்டுமென்று விடைபெற்றுக்கொண்டு நெருங்கிய ஒரு பூஞ்சோலைக்குள்ளே புகுந்து தவஞ்செய்யமுயன்று கொண்டிருந்தாள். இது இப்படியிருக்க இனி சிவபிரான் யோகத்திலிருந்த சிறப்பெல்லாம் மனமகிழ்ச்சி உண்டாகச் சொல்லுவோமென்று சூதமுனிவர் மற்றை முனிவர்களுக்குச் அருளிச்செய்தார்.



## இருபத்துநான்காவது : சிவன் யோகச்சருக்கம்.



அனகாபர ஞான மளித்தரு ளென்னச்
சனகாதியா நால்வரும் வந்தடி தாழ
வெனகாரண மோகன யோகி லிருந்தான்
கனகாசல வில்லுடை யான்வெகு காலம். (க)

அன்னாளடு சூர னடர்த்திட வஞ்சிப்
பொன்னாடி புரந்த புரந்தர னென்பா
னின்னாவொடும் வானவர் தம்மொடு மெய்திச்
சொன்னான்மறை யோனொடு மத்துயர் சொன்னான். (உ)

யோகத்தி லிருந்த சிவன்கனி வோடும்
போகத்தை விரும்ப மலர்ப்பொலி புங்க
மாகத்தி லழுந்த வடர்த்திட வில்வேள்
வேகத்தொரு வெஞ்சமர் சென்று விளைத்தால். (ஙு)

வரைமாதை மணந்தொரு மாமக வைத்தந்
தூரமேபெறு சூருயி ருண்குவ துண்மை
விரைவோடிது செய்கென வேதன் விடுப்பச்
சுராதிபன வேளை யழைத்திது சொன்னான். (சு)

அச்சொற்செவி யூடழ லாகி யழற்ற
விச்சிற்றறி வெவ்வண மெய்தினை யெந்தா
யுச்சிப்பிறை வைத்த வொருத்தனை வெல்லக்
கொச்சைச்சிறி யோர்கள் குறிப்பது கோளோ. (ரு)

எனமாறி மறுப்ப மறுப்ப விரந்துஞ்
சினமீறி வெகுண்டு முணர்ச்சி சிதைத்தான்

முனைவானவர் கோமகன் மான்மகன் மோகத்
தனதாண்மை செலுத்த விசைந்து சமைந்தான். (சு)

பூந்துங்க நெடுங்கணை முட்டிய புட்டில்
வாய்ந்தங்கொர் புறத்தில் விசிப்ப வலத்தே
காந்துங்கட கக்கை கருப்புவி லேற்ற
வேந்துங்கை கிடந்து துடித்த திடத்தே. (எ)

வேறு.

கொட்ட லின்றிக் குளிறு முரசினு
னிட்ட காம்பற் றெழுந்த குடையினன்
றுட்ட ருஞ்சிறை பட்ட துரங்கத்தான்
வெட்டு வாய்மடி வாள்புடை வீக்கினன். (அ)

கதிர்கொள் வில்லறு கால்பெற்ற நாணினு
னுதய னைக்கண் டொளிக்கின்ற யானையான்
முதிய நாக முகந்துண்ண வெங்கதி
சிதைய மாய்ந்திடுந் தேர்மிசை யேறினன். (கூ)

பின்னு கூழைகொள் பேதைப் படையினன்
கொன்னி சைந்திடு மீனக் கொடியினன்
கன்னங் காரெனுங் காரிக்குத் தான்பின்ன
சின்ன மாகி யரற்றிய சின்னத்தான். (க0)

நண்ப னான வசந்தனு நால்வகைத்
திண்ப டைக்கலச் சேனையு முன்னெழ
வெண்ப டைக்கின்ற யோகத் திருந்தமுக்
கண்ப டைத்தமைக் கண்டன்முன் னெய்தினன். ()

ஐயன் வைகுந் தனிமையு மன்பிலா
னெய்ய வெய்துங் கொடுமையு மெண்ணியோ
வெய்ய வம்புகண் ணீர்த்துளி வீழ்க்குமே
கைகொள் கார்முகங் கண்முத்தஞ் சிந்துமே. (கஉ)

அளிக்கு ணத்தை யடைந்த தனுத்தனை
வளைத்து வாங்கி மதுமலர் சிந்தினன்
களித்த யோகக் கடவுண் மலர்க்கடல்
குளித்து மாமலர்க் குன்றெனத் தோன்றினன். (கஙு)

சோக வாரியிற் றோயமென் முல்லைய
சோக மாதி துரப்ப நுதற்கணல்

வேக நாதன் விழித்தன னக்கணம்
வேக மாமத வேளெரிந் தானரோ. (கச)

இரதி காந்தன் மலர்க்குவை யிட்டது
மரனெ ரித்தது மவ்விடை நோக்குங்காற்
பரவு தொண்டர் பணியும் பவமறுத்
துருவொ ழித்தமெய்ஞ் ஞானமு மொக்குமே. (கரு)

மாறு பட்டு வருமத வேள்வெந்து
நீறு பட்டதை நேர்பட நோக்கியே
யூறு பட்ட விரதிமை யுண்கணீ
ராறு பட்ட தடலைவெப் பாறவே. (கசு)

திரண்டெ ழுந்தபொற் செப்பிளங் கொங்கைமே
லிரண்டுகையெடுத் தெற்றி யிரதிதான்
முரண்ட ருங்கனன் மூழ்கின பூதிமேற்
புரண்டு சோர்ந்து புலம்பத் தொடங்கினள். (கஎ)

நாறு பூம்பொழி னந்த வனத்திடை
வேறு வேறு விளங்கிய போதினு
லாறு சூடியை யர்ச்சனை செய்யவோ
நீறு பூத்தது நின்றிரு மேனியே. (கஅ)

கன்னல் வில்லி கனவரை வில்லியாற்
சின்ன மாயங்கந் தீப்பட் டெரிவனென்
றுன்னு டன்பிறந் தானென துச்சிமே
லின்ன லெய்த வெழுதின னுங்கொலோ. (கசு)

கரும்பை யுஞ்செங் கரும்பினிற் பூட்டிய
சுரும்பை யுஞ்சுரும் பார்த்திடத் தூண்டிய
வரும்பை யுங்கை யழகையுங் காண்பனோ
விரும்பை யும்புரை யாக்குநெஞ் சேழையேன். (உ௦)

முன்னி லாது முனிவரு மோகிப்ப
வன்னி யேறி மலர்க்கணை தூண்டுவாய்
மூன்னி லாவை முடித்தவ னன்னுதல்
வன்னி யேறி மறிந்தனை யென்கொலோ. (உக)

விந்தை யார்தன வெற்பொடு மேவியென்
சிந்தை யாருநின் செய்தியைக் கேட்பரே

னிந்தை யூர்தரநெட் டுயிர்த் தம்மவோ
தந்தை யாருந்தா யாருந் தரிப்பரோ· (உஉ)

கோக்கு மாமலாக் கூர்ங்கணைக் கொண்கன்வெந்
தீக்கு வாலிடைத் தீந்தனன் றீப்பட
நோக்கு வானரு ணோக்கில னென்னுயிர்
போக்கு வேனென நின்று புலம்பினாள். (உங)

முடிவி லாத்துய ரக்கடன் மூழ்கினேன்
விடுவ னாவியென் றெண்ணுமவ் வேலைவே
ளடைவ னுன்னை யரனரு ளாலென
நெடிய வந்தர வாணி நிகழ்ந்ததால். (உச)

சிறந்த வாணி செவியிடைச் சார்தலு
நிறைந்த வன்பொடு நேர்சென்றி யோகத்தி
லுறைந்தி ருந்த வொருவனைப் போற்றிசெய்
திறந்த கோபந் தணிந்தருள் வாயென்றாள்· (உரு)

பிழைபொ றுத்தல் பெரியவர் செய்கையா
மிழிவு பட்டெதி ராடி யிறந்துள
கழைவ ரிச்சிலைக் காந்தனை யென்னுயிர்
தழையும் வண்ணநீ தந்தருள் வாயென்றாள். (உசு)

என்று போற்றி யிரங்கு மிரதிக்காக்
கொன்றை யிந்துக் கொழுந்தொடு சூடினான்
பொன்றும் வேள்வர வின்னருள் பூத்தனன்
வென்றி மாரனு மெய்யின்றித் தோன்றினான். (உஎ)

அங்க மின்றி யநங்கனென் றாகிய
பங்க நீக்குதி யென்னைநின் பார்வைக்கூத்
துங்க மெய்யொடுந் தோன்றுவன் மற்றவர்க்
கெங்கு மங்கமி லாதவ னாவனால். (உஅ)

என்று நாதன் விடுப்ப விரதியும்
பொன்றி மீண்டபைம் பூங்கழை வில்லியுந்
துன்று வார்சடைச் சோதியைத் தாழ்ந்தெழுந்
தன்று தம்முல கத்திடை யண்மினார்· (உகூ)

கூன வான்மதி கொண்டணி வேணியான்
மோன மெய்த்தவ முற்றி யெழுந்துபோய்

ஞான மார்கண நாதர் குழாங்கள்சூழ்
மேன்மை சேர்வெள்ளி வெற்பிடை யெய்தினன்.

ஐயன் செய்தி யறிய வறைந்தனம்
பொய்யில் கேள்விப் புரிசடை யந்தணீர்
மையு லாங்கண் வரையர சீன்றவள்
செய்த மெய்த்தவச் செய்தியைச் செப்புவாம். (ஙக)

இருபத்துநான்காவது சிவன்யோகச்சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (எகக.)

---

## இருபத்துநான்காவது சிவன்யோகச்சருக்கச் சுருக்கவசனம்.

சனகாதியர் நால்வரும் வந்துவணங்க நெடுங்காலம் பரமேசுரன் யோகத்திலிருந்தார். அப்படியிருக்குங் காலத்திலே சூரபன்மன் முதலிய அசுரர்கள் செய்யும் துன்பம்பொறுக்கமாட்டாமல் தேவர்களுடனே இந்திரன் பிரமதேவனிடத்திலே வந்துசொன்னான். பிரமதேவன் கேட்டு யோசித்துச்சொல்லுவான் யோகத்திலிருக்குஞ் சிவபெருமான் பருவதராசன் புத்திரியாகிய பார்வதியை விவாகஞ்செய்து ஒரு புத்திரனைப்பெற்றால் அப்புத்திரனால் இந்தத்துன்பம் நீங்கும். ஆதலால் மன்மதனை அழைத்துப் புட்பபாணத்தைச் சிவபிரான் மேலே பிரயோகம்பண்ணும்படி செய்யென்று சொல்ல. அந்தப்படியே இந்திரன் மன்மதனையழைத்துச் சொல்லுதலும், மன்மதன் சகலலோகநாயகராகிய பரமேசுரனை நம்போலியர்கள் வெல்லவல்லரோவென்று மறுத்தான். மீட்டும் இந்திரன் சாமபேததானதண்டத்தால் மன்மதனை வசப்படுத்திச் சம்மதிக்கும்படி செய்தான். உடனே மன்மதன் கரும்புவில்லும் புட்பபாணங்களும் எடுத்துக்கொண்டு தென்றலாகிய இரதத்தின்மேலேறிப் பெண்கள் சேனைசூழப் போர்க்கோலங்கொண்டு சிவபிரான் யோகஞ்செய்யு மிடத்துக்குச் சென்று மலைபோலேகுவியும்படி அநேக மலர்ப்பாணங்களை யேவினன்.

இது தெரிந்து சிவபிரான் நெற்றிக்கண்ணைத் திறந்துபார்த்த அளவிலே மன்மதன் எரிந்து சாம்பராகியிறந்து போனான். இது கண்ட மன்மதன் மனைவியாகிய இரதிவந்து எரிந்து கிடக்குஞ் சாம்பரிலே புரண்டு பலவாறு புலம்பி அழுது சிவபிரான் திருவருள்புரியாவிடில், நானும் இறந்து விடுவேனென்று வருந்துகின்ற சமையத்

தில் மன்மதன் வந்துவிடுவான். நீ இறந்துபடாதே என்று ஒரு அசரீரிவாக்கு நிகழ்ந்தது, நிகழவே இரதியானவள் யோகத்திலிருக்குஞ் சிவபெருமான் முன்பு சென்று வணங்கிச் சுவாமீ! கோபந்தணிந்து கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க சிவபிரான் திருவருள் சுரந்து மன்மதனை வரும்படிநினைத்தலும், உடனே மன்மதனும் அங்கமில்லாமல் அநங்கனாக எதிரேவந்து சுவாமியைவணங்கி அடியேன் பிழையைப்பொறுத்தருளுக என்று துதித்து நின்றான். இரதிதேவி என்னுடைய நாயகன் அநங்கனாக இருக்கும் குற்றத்தை நீக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள் அதுகேட்டுப் பரமேசுரன் இரதியே! உனக்கு மட்டும் உருவத்தோடு தோன்றுவான் மற்றவர்களுக்கெல்லாம் அருவமாகவே இருப்பானென்று கட்டளையிட்டு அவ்விருவரையுந் தமதிடத்துக்கனுப்பி விட்டு யோகத்தைமுடித்துத் தம்மைச்சகல கணநாதர்களுஞ் சூழ்ந்துவரக் கயிலாசமலையிலே தமதிருப்பீடத்துக்கு வந்துசேர்ந்தார். இனி பார்வதி தவஞ்செய்த கதையைச்சொல்லுவோங் கேளுங்கள் முனிவர்களே! யென்று சூதமுனிவர் சொல்லினர்.



## இருபத்தைந்தாவது: பார்வதிதவஞ் செய்த சருக்கம்.



வாவுந் திரைபொன் கொழிப்ப வருசா னுவித்தண் டுறைவாய்த்
தூவு மதுவும் பூவுஞ் சுரும்பு நிரம்புஞ் சாலை
மேவும் புளினத் திடையே விரிபா சடையாற் சமைத்தார்
பாவும் பசிய மணியைப் பகைக்கும் பன்ன சாலை. (க)

நாளும் புதிதாய் விளங்கு நறும்பூஞ் சோலை நாப்ப
ணாளு மனமுங் குயிலு மணிபூங் கிளியு மகலத்
தாளு மிடறு மிதழுந் தழுவுந் தொழில்விட் டிருகண்
வாளுங் குழையும் படைத்தோர் மயில்வந் திருந்தா லென்ன.

தவளத் தூளஞ் சாத்தித் ததரக் கரும்பூங் குழலைத்
துவளச் சடையா நாற்றித் தோன்றிப் பூவுங் கோங்கும்
பவளத் தெழில்கூர் முருக்கும் பனிவெண் டளவுங் குமிழுந்
துவளைப் போதும் பூத்தோர் கொடிவந் திருந்தா லென்ன.(ரு)

பொருந்தும் பரமா னந்தப் புளகம் வடிவிற் பொலியக்
காந்தை சூடி வடிவங் கருதி யுளநெக் குருகப்
பாந்த கரணஞ் சுருங்கப் பயிலும் பதுமா தனமிட்
டிருந்தா ளிறைவி தவத்தி லிறைவ னவண்வந் தனனால். (௪)

வெற்றிச் சினவே றின்றி விரைவாய் வருவான் முடிமே [மும்
லொற்றைப் பிறைபோ னுதல்விட் டொளிருந் திரிபுண் டர
பற்றிக் குவியுங் காமும் பயிலுந் தவமும் பவளக்
கற்றைச் சடையு நெற்றிக் கண்ணுங் குளிரக் கண்டான். (௫)

கதிர்வெம் மழுவும் மிளமான் கன்றும் வடிவுங் காந்தா
னதிருங் கழலு மதிரா தரவு நெடுமூச் செறியா
துதிரும் படுவெண் டலையு முடிவான் மதிபோ னகையா
தெதிர்வந் தயலே மறைந்தா னின்ன வின்ன நினைந்தான். (௬)

வேறு.

அமுதமென் றெழுந்த நஞ்சை யடக்கிய களத்தா னங்கண்
சமுகமாய் நோக்க லாலே தனித்தனி மாறி யேயோ
கமுகநேர் மிடற்றாள் வீழிக் கனிவாயுங் கையு மான
குமுதமுங் கமலப் போதுங் குவிந்தது போலு மென்பான். ()

தண்பனிக் கொன்றை சூடுஞ் சடைமுடிக் கடவு ளானோன்
பண்பொடு கனிந்த செஞ்சொற் பார்வதி குழலை நோக்கி
விண்படர் திமிர மெல்லாம் வெருவந்து நமது மூன்று
கண்படர் பார்வைக் கொல்கிக் கன்னிபின் காந்த தென்பான்.

வனங்குலா மரவம் பூண்ட மார்பினான் சீய மாயச்
சினங்குலாஞ் சிம்பு ளானோஞ் சேவகஞ் சிதைக்குங்கொல்லா
மனங்குலா நடையாண் மார்பத் தடிக்கொண்டுபுடைத்துவிம்
தனங்களா யிறுமாந் தோங்குஞ் சக்கர வாளமென்பான். [மூங்

இவ்வகை பலவு மெண்ணி யிருபிறப் பாள னாகி
யவ்வனத் தடிகள் ளாடி யங்கையி லொருதண் டேன்றித்
திவ்விய வடிவ மெங்குந் திரையொடு நரையுந் தோன்றக்
கொவ்வைவாய் மடநல் லாமுன் கூனொடுங் குறுகி னானால். ()

வாடிய வடிவந் தாங்கி வனத்திடை வருத னோக்கிச்
சேடிய ருவகை பூப்பச் செங்காங் கூப்புங் காலைக்
கூடிய யோக முற்றிக் கோமளை விழித்து முன்ன
ராடிய பதந்தள் ளாடு மதிதியை யெதிர்கண் டாளால். (கக)

பொருக்கென வெழுந்து சென்று போற்றினள்பணிந்துநின்று
விருத்தராம் வடிவி ரிந்த வெவ்வனத் தெவ்வா றுற்றீ [க்
ரிருக்குநும் பதியா தியார்மாட் டெய்துதல் வேண்டு மென்ன
குருத்திள நிலவு சூடுங் கொழுஞ்சடை முதல்வன் கூறும். ()

அன்னமும் பிடியு நாணு மணிநடைக் கருங்கண் மானே
முன்னர்நம் மனைவி கோப முருங்கழன் முழுகிப் போனாள்
பின்னொரு மனைவி வேட்டுப் பெருந்தவ முயன்று வந்தோ
மன்னுமிவ் வனத்திற் கண்டோ மணமினிக் கூடு மென்றான்.

தளரிடை யதனைக் கேட்டுச் சலங்கொண்டு விருத்தரானீ[ள்
ரிளமைபெற்றவர்சொன்மாற்ற மியம்புதன்முறையோவென்று
கிளரும்வெண்ணரையான்மேலாங்கிழவனுமெனினுங் கன்னல்
வளைசிலை மதனை வெல்லு மகத்துவ நமக்குண் டென்றான். ()

மானைநேர் விழியாள் கேட்டு மணிநிலா முறுவல் பூத்து
வேனிலான் றன்னை வெல்லு மேன்மைநுங் கண்ண தானற்
பானிலாப் போலு மெய்யிற் படர்ந்தவெண் ணரையி னேடுங்
கூனொடுந் திரையி னேடுங் குறுகிய தென்னை யென்றாள். ()

இருந்தவ னதனைக் கேளா வெழினடை யன்ன மேநின்
முருந்திள நகைநி லாவின் முழுகுத னரையென் றுமோர்
மருங்குலின் வளைவு நோக்கி வளைவது கூனே கம்பந்
திருந்துநின் னழகை நோக்கித் திகழ்கம்பமன்றோவென்றான்.

உரைத்தவம் மொழியைக் கேட்ட வொண்டொடி மணத்தை
நரைத்தவன் றன்னை நோக்கி நாடுமென் விரதங் கேளீர்[நாடி
திரைப்பகீ ரதியைச்சூடுஞ் சேவகன்புயத்தி னல்லால்[ன்றாள்.
விரைத்தொடை புனைய வேண்டேன் வீண்மொழி விடுதிரெ

ஈதுரை கேட்டு நின்ற விருபிறப் பாளன் சொல்வான்
பேதையென் னினைந்தா யந்தப் பித்தனே கணவ னுவான்
றாதையுந் தாயு மில்லான் சாம்பர்பூச் சுடைதோல் போர்வை
மீதுமோர் துவக்கிட் டானை விரும்புத லழகி தென்றான். ()

என்றலு மெங்கோ மானை யிகழ்ந்துரை செய்தான் வானாள்
சென்றவ னுரைத்த தெல்லாஞ் சேடிமீர் கேட்கின் றீரோ
நின்றிவ னின்ன மின்ன நிந்தியா தூந்தி யுந்திக்
கீன்றிய மனத்தி னனைக் கடிதப்பா லகற்று கென்றாள். (கக)

அன்னசொற் கேட்ட மின்னா ரப்பணி தலைமேற் கொள்ளப்
பன்னக சாலை தன்னிற் பார்ப்பதி செல்லுங் காலைக்
கொன்னுனை மலரம் பேந்துங் கோடிமன் மதரோன் றான
தன்னுருக் காட்டி மூப்புத் தருவுரு வொழித்து நின்றான். ()

நின்றருள் பரமன் றன்னை நெடுந்தடங் கண்ணா னோக்கித்
துன்றிய புளகத் தோடுஞ் சொரிதருங் கண்ணீ ரோடு
நன்றுற வணங்கிப் போற்ற நாணம்வந் தூடு தோன்றத்
தன்றிரு வதனஞ் சாய்த்தாள் சயிலமீன் றெடுத்த தையல். ()

என்பிறப் பகலும் வண்ண மிருபிறப் பாள ராகி
முன்பிறப் பில்லா மூர்த்தி முன்வரத் தவமும் பெற்றே
னின்புற முனிவ ரான வெழுவரை யிமய வேந்த
னன்புற விடுத்து வேட்ட லழகுநின் னருளுக் கென்றாள். ()

மாணிழை யுரைத்தல் கேட்டு மனமகிழ் கொண்டு நின்ற
தாணுவெள் விடைமேற்கொண்டுசெயிலவெண்கயிலைசார்ந்தான்
வேணவா வுள்ளத் தோடுந் தவமுற்றி மின்னா ரோடுஞ்
சேணுப ரிமய வெற்பிற் பார்ப்பதி சென்று சேர்ந்தாள். (உ௫)

இருபத்தைந்தாவது பார்வதி தவஞ்செய்த சருக்கம்
முற்றிற்று.

ஆசத் திருவிருத்தம் (௭௧௪.)

---

### இருபத்தைந்தாவது பார்வதி தவஞ்செய்த சருக்கச் சுருக்கவசனம்.

அலைகளெல்லாம் பொன் சொரிகின்ற கங்கை நதிக்கரையின் பக்கத்திலே தேனொழுகாநின்ற பூஞ்சோலைகளினுடைய ஒருமணற் குன்றினிடத்துப் பன்னசாலைசெய்து அச்சாலையின் நடுவில் பதுமாசனத்தின்மேல் விபூதி, உருத்திராக்ஷம் முதலாகிய சிவசின்னந்தாங்கி ஒரு மயில் வந்திருந்தாற்போலப் பார்வதி வந்திருந்து சிவபிரானைத் தனது திருவுள்ளத்திலிருத்திப் பரமானந்த மேற்படத் தவஞ் செய்துகொண்டிருந்தாள். இதைத்தெரிந்து சிவபெருமான் இடபாரூடராய் எழுந்தருளிவந்து நின்று பார்வதி தவக்கோலத்தைத் தமது நெற்றிக் கண்ணுங் குளிரும்படி பார்த்துப் பலவாறுநினைந்து புன்முறுவல்கொண்டு தமது திருவுருவத்தை மறைத்து ஒரு விருத்த

வேதியர் வடிவமாகித் தளர்ந்த நடையுடையும் வளைந்த முதுகும் நரையும் திரையும் உடையவராய் ஒரு தண்டேன்றிக்கொண்டு பார்வதி முன்னே நின்றார். பக்கத்திலே தோழிப்பெண்கள் வேதியரை யுப சரித்து வணங்குஞ் சமையத்தில் பார்வதி விழித்துப்பார்த்துத் தா னும் அவரைத்துதித்து வணங்கிச் சுவாமீ! நீ ரிந்த விருத்த வடிவத் துடன் இந்த வனத்துக்கெவ்வாறு வந்தீர். உம்முடைய இருப்பி டம் எது? யாரிடத்துக்குப் போதல் வேண்டுமென்று கேட்க விருத் தராகிய வேதியர் சொல்லுவார்.

பெண்ணே! என்னுடைய மனைவி முன்னொரு காலத்திலே கோபத்தினால் அக்கினிப் பிரவேசமாகிப்போனாள். ஆதலால் இன் னும் ஒரு மனைவியை விரும்பித் தவஞ்செய்து இங்கு வந்தோமென் று தம்முடைய கருத்தைச் சொல்லினர். பார்வதி கோபங்கொண்டு நீர் யெளவனமுடையார்சொல்லும் வார்த்தையைச்சொல்லுதல் மு றையோவென்று கூறுதலும், பெண்ணே! நான் விருத்தனானாலும் மன்மதனை வெல்லும் வலிமையுடையேனென்று வேதியர் பார்வதி கேட்டதற்கெல்லாம் மறுமொழி கொடுத்தனர். சுவாமீ! கேளும் கங்காநதியைத்தரித்த சிவபிரானையே மணஞ்செய்ய நினைந்திருக்கி றேனென்று பார்வதி கூறினாள். பெண்ணே! தாய் தந்தை யில் லாதவனாய்ச் சாம்பர்பூசித் தோலை மூடித்திரியும் பித்தனோ உனக்கு நாயகனென்று வேதியர் சொல்லினர். அதுகேட்டுப் பார்வதி கோப ங்கொண்டு சிவநிந்தைசெய்கிற இவனை இவ்விடத்தைவிட்டு அப்பா லே துரத்துமென்று சேடிப்பெண்களுக்கு உத்தரவு கொடுத்துவிட் டுப் பன்னகசாலைக்குள்ளே சென்றாள். அதுகேட்டவுடனே வேதி யர் ஆகிய சிவபெருமான் விருத்தவடிவத்தை மறைத்துக் கோடி மன்மதர் ஒன்றாகத்திரண்டெழுந்தாற்போலும் தமது இயற்கைத்திரு வுருவோடுவந்து எதிரேநிற்றலும் பார்வதிகண்டு தரிசித்துச் சரீரமெ ல்லாம் புளகங்கொள்ள ஆனந்தக் கண்ணீர் சொரிய நாணத்தோடு தலை கவிழ்ந்து நின்று சுவாமீ! சத்தரிஷிகளையும் இமயமலை யரச னிடந் தூதாக அனுப்பி என்னை விவாகஞ் செய்துகொள்ள வேண்டு மென்று சொல்லித் தன்றவத்தை முடித்து இமயமலைக்குச் சென் றான். சிவபிரானும் மனமகிழ்ந்து இடபவாகனத்திலேறிக்கொண்டு திருக்கயிலாசமலை போய்ச்சேர்ந்தார்.



# இருபத்தாறுவது: பார்வதி திருக்கலியாணச் சருக்கம்.

அகத்தியன் வசிட்ட னங்கி ராக்கவு தமன்மார்க் கண்டன்
சகத்திய னல்கு மேன்மைக் காசிப ஞன தக்கோ
னிகத்திய னயப்பின் ஞானப் புலத்திய னென்பா ரேழு
மகத்தியன் முனிவர் மஞ்சார் வரையா சிடத்து வந்தார். (க)

எய்திய முனிவர் தம்மை யெதிர்கொண்டு போற்றிப் பூசை
செய்தனன் செய்து வந்த செய்திநீ ருரைமி னென்னு
மெய்திக ழிமவான் கூற வேலைவா யால கால
மைதிகழ் கண்ட னேவ வருந்திறம் வகுத்துச் சொல்வார். (உ)

தேமது மாரி யென்னச் சிறப்புற மணியாழ் வாங்கித்
தோமினு ரதன்ற னோடு தும்புரு நின்று பாடப்
பூமழை கணங்கள் வாரிப் பொழிந்திடக் கயிலை மேவிக்
காமனை வென்று மீட்ட கடவுள்வீற் றிருக்குங் காலை. (ங)

தூங்கிய கரங்கள் சென்னி சுமந்துகீழ் விழுந்து தூரத்
தேங்கிய மனத்தி னோடு மிமையவர் குழுக்கொண் டேண்டித்
தாங்கரி தைய னேநின் சரணமக் கரணென் றுற்றோந்
தீங்குசெய் சூர னுவி சிதைத்தெமைப் புரத்தி யென்றார். (ச)

தொழுதெழும் வானோர் துன்பந் துடைத்திட வருட்க ணோக்
மெழுதரு மழக னெம்மை யிமவரை யிடத்தி லெய்திப் [கு
பழுதறு மிளமை வாய்த்த பார்ப்பதி மணம்வேட் டோமிப்
பொழுதது கேட்டு மீண்டு வருகுதிர் போதி ரென்றான். (ரு)

சந்திரக் கொழுந்து சூடுந் தற்பர னருளா லிங்கு
வந்தன மென்னக் கேட்டு மணியணி வலையப் பந்தி
சிந்தமற் புயம்பூ ரித்தான் சிறந்தவா னந்தக் கண்ணீர்
முந்தமெய்ப் புளக முந்த முனிவரை நோக்கிச் சொல்வான். ()

எத்தவஞ் செய்தேன் வெற்பி லிருந்தவ னிளமா னேந்துங்
கைத்தலக் கடவு ளெம்மான் காந்தளஞ் செங்கை பற்ற
வுத்தர மினிவே றில்லை யுணர்த்துமி னிசைந்தா னென்ன
மைத்திரள் கண்டற் கென்றான் வழுவறு மெழுவர் போனார்.

மாதவர் போய பின்னர் வரைக்கிறை மயனுல் வெற்பைக்
கோதறப் புனைந்த கோலங் கூறுதற் கெளிதோ வம்மா
போதினுன் மணியி னுற்செம் பொன்னினுல் விளங்குஞ் செந்தீ
யாதவர் மதியங் கோடி யணைந்ததை யொத்த தன்றே. (அ)

அரம்பையர் முனிவர் மாத ரனைவரு மிமய மீன்ற
கருந்தடங் கண்ணிக் கின்று கடிமண மென்னக் கேட்டு
விரும்புபே ருவகை யோடு மேனைவாழ் மனையி லெய்தித்
திருந்தெழி லிறைவி செம்பொற் சிறடி தொழுது சூழ்ந்தார். ()

மெய்ப்பணி தரணி தாங்கி மெலிந்திடா வண்ண மேபோ
லப்பணி சடையி னுருக் கரும்பணி யாவாண் மெய்ம்மேற்
செப்பணி முலையார் சூழ்ந்து திருப்பணி புனைந்தா ரன்னு
ரெப்பணி பூட்டி னுலு மிடைப்பணி பொறுக்கு மாதோ. (௧0)

இவ்வகை புனைந்தா ரிப்பா லெழுமுனி வரரு மெய்திச்
செவ்விதி னுரைப்பக் கேட்டுத் திருமணக் கோலம் பூண்டான்
பௌவமின் றெழுந்தா லென்னப் பண்ணவர் கணங்கள் சூழ
மௌவலங் குழலை வேட்க வந்தவா றுரைத்து மாதோ. (௧௧)

## வேறு.

சிந்து தேனிறை வனத்தினுல் வனசத்தாற் சிறந்த
வந்த மாலைகள் சிறையடிக் காற்றினு லாட
முந்து வேகவெங் கருடன்மே லெகினமேன் முளரி
யுந்தி யானுமவ் வுந்திமே லானும்வந் துற்றூர். (௧௨)

பாயும் யானையு மாடுமொப் பன்றெனும் பான்மை
யெய்வ தின்றியொப் பாமென யாவரு மிசைப்ப
மேய வாகன மிரண்டினு மேற்கொண்டு விளங்கி
யாயிரங் கண்ணி னுனெழு நாவினு னணைந்தார். (௧௩)

தரும னுங்கிரு தியும்வரு ணனுஞ்சதா கதியு
முரிய வாந்தத்தம் வாகனத் தேறிவந் துற்றூர்
விரவு நண்புறு மனத்தினும் விரைந்தெழும் வேக
மருவு புட்பக மானமேற் பிங்கலன் வந்தான். (௧௪)

நீண்ட கையொடும் பையொடு மெண்டிசை நிலவிப்
பூண்ட நாகமீ ரெட்டுநல் லுருக்கொண்டு போத
வீண்டு மாரியும் வாரியும் மானவீ ரேழும்
வேண்டு மன்பொடு வானவ ருருக்கொண்டு மேவ. (௧௫)

தேவர் முப்பத்து மூவருஞ் சித்தர்விஞ் சையருந்
தாவி லாதபொன் னுலகத்தில் வாழுமைந் தருவுங்
கோவு மேம்படு மணியுமற் றிருநிதிக் குலமும்
யாவும் விண்ணவ ருருவெடுத் தடைந்தன ரிமைப்பில். (கசு)

மாய னேமுதல் வானவர் யாவருங் குழுக்கொண்
டேயு மெல்லையோர் பூதமோ ரடிவைக்க விடமாப்
பாய பேருரு வெடுத்திடும் பாழிவாய்க் கணங்க
ளாயி ரம்பதி னுயிரம் வெள்ளம்வந் தணைந்த. (கஎ)

பழுதி லாசியிற் புகழ்தலில் வருமொலி பரப்பக்
குழலி னுடவிற் பாடலி னெழுமொலி கொழிப்பத்
தழுவு பல்கண நடையொலி படையொலி தழங்க
முழவு தூரியம பேரிய முதலிய முழங்க. (கஅ)

மாலை யாதியோர் வந்தன ரெனநந்தி வணங்கிச்
சீல மோடுரை செய்தலுந் திருவுளத் தறிந்தா
ஞால மாகிழ லிருந்தொரு நால்வருக் கருள்கூர்
கோல மாதவங் கொண்டவன் விடையின்மேற் கொண்டான்.

இரும ருங்கினு மருவிபோற் சாமரை யிரட்டக்
கரிய மாசறு மதியென வெண்குடை கவிப்ப
வுரிய வானவர் கொடிநடு விடைக்கொடி யோங்க
வரையெ லாந்தொழும் பனிவரைச் சாரலின் வந்தான். (உo)

அளிமு ரன்றபூங் கொன்றையான் வரவுபார்த் தறிந்து
துளிநி றைந்ததேம் போதுபொற் போதொடுந் தூவிக்
குளிர்த ரும்பனி மால்வரை யரசெதிர் கொண்டு
தெளியு மன்பொடு பணிந்தெழ மணப்பந்தர் சேர்ந்தான். ()

செம்பொன் வெற்பினை வளைத்தவன் றிருமணங் காண்பா
னும்ப ரிம்பர்வா ழனைவரு மொருங்குவந் துறலால்
வம்பு லாமலர் நாற்றிய மணப்பந்தர் நாப்ப
ணெம்பி ரான்மணி யாசனத் திருந்தரு ளேல்வை. (உஉ)

கோத்த பன்மணிக் கழலினான் றிருமணக் கோலந்
தேத்த மிழ்க்கிரி காண்கவென் றுயர்ந்ததோ தென்பார்
காத்த ளித்தருள் கன்னியைக் கைப்பிடி கோலம்
வாய்த்த பாதலங் காண்கெனத் தாழ்ந்ததோ வடபால். (உங)

இருபெ ருந்திசை யிரண்டினு முயர்ந்துதாழ்ந் திடலா
லரிவி னைந்திது வென்கொலென் றுனைய னயர்ந்தான்
றெரியு மிந்திர னடுங்கினன் றேவர்கள் யாரும்
புரியுஞ் செய்தொழின் மறந்தன ரறிந்தனன் புனிதன். (உச)

அருந்த வக்குறு முனிவனை யருட்கணு னோக்கித்
திருந்து தென்றிசைக் கேகெனக் குறிப்பினாற் றெருட்டப்
புரிந்த நல்வினை யிதுகொலென் றுளத்தொடும் புகன்று
வருந்தி னான்முகம் வாடினான் செழுந்தமிழ் வள்ளல். (உரு)

மோன மாதவன் றுயரறிந் தருந்தமிழ் முனிகேள்
வான ளாவிய தென்றிசை சமதலம் வாய்த்து
நானி லக்கிரி திருந்திடத் தென்றிசை நடந்து
தேன முச்செழும் பொதியத்திற் சென்றினி திருத்தி. (உசா)

நன்ன யத்தமிழ்க் கிரியிடைப் பாவவி நாச
மென்னு மாதலத் தெய்திய சித்திரை முதனாட்
கன்னி தன்னைநாங் கைப்பிடி திருமணக் காட்சி
யுன்னு ளங்களி கூர்தரத் தருதுமென் றுரைத்தான். (உஎ)

சிந்தை யவ்வுரை கேட்டுவந் தெனக்கொரு தீர்த்த
மெந்தை நல்கெனத் தாமிரை பன்னியென் றிசையான்
முந்து தீர்த்தத்தைக் கொடுத்திட வணங்கியம் முனிவன்
மந்த மாருத வரைத்திசை நோக்கினன் வந்தான். (உஅ)

மயக்கின் மாதவன் போனபின் வரைதொழு மிமவா
னயக்கு மேனையோ டிறைஞ்சினன் யாவர்க்கு நாதா
வியக்கு மெங்குலம் விளங்கவந் தாய்மயன் விதியா
லியற்று மாமண வேதிகைக் கெழுந்தரு ளென்றான். (உகூ)

தடக்கொ டித்திரள் குழுமிய வேதிகைத் தலஞ்சேர்
விடைக்கொ டிப்பரன் புயத்துமின் னார்தொழ விழைவா
யிடைக்கொ டிக்கொரு சுமையெனு மிருதனக் குவட்டு
மடக்கொ டிப்பிடி புனைந்தனள் பொன்மலர் மாலை. (௩0)

கரந்தை சூடிக்குக் கன்னிபூந் தொடைபுனை காலைப்
பரந்த பேரிதுந் துபிமுரு டாகுளி படக
நிரந்த சங்கொலி முழங்கின வாசிக ணிறைந்த
புரந்த ராதிய ருவந்தனர் பூமழை பொழிந்தார். (௩க)

எங்கு முள்ளவர்க் கன்னியைக் கொடுத்திடு மேல்வை
யுங்க ணீதிபோல் வாழ்திரென் றுவகைகொண் டுரைத்தா
ரங்கமா யெங்ஙன் வாழ்த்துகே னெனவரைக் கரசு [ன்.
மங்கை செங்கையைச் சிவன்கைமேல் வைத்துநீர் வார்த்தா

கோட்டு வான்மதிக் குழந்தைவாழ் சடைமுடிக் குழக
னேட்ட ருங்கம லத்துறை வான்சடங் கியற்ற
வாட்ட டங்கணுண் மாலையு மாலையுங் கூட்டிப்
பூட்டும் வல்லிக்கு மங்கலச் செம்பொனுண் புனைந்தான். (௫௩)

முறையி னச்சுதன் முதலியோர் பணிந்துகை முகிழ்ப்ப
நிறைக ழற்பெருங் கணப்படை யருந்தவர் நெருங்க
விறைவி தன்னொடு மணப்பந்த ரிடத்துநின் றெழுந்து [டான்.
விறல்வ ரைக்கிறை விடைகொள விடையின்மேற் கொண்

சிலைய ளித்தருள் சிலைநுதற் சேயிழை மணத்தி
னிலையு ரைத்தன நிலையிலா வைம்புல னெருக்கங்
கலைய முத்தமிழ்க் கலையருள் கலையமா முனிவன்
மலைய வெற்பினில் வருந்திற மினிவகுத் துரைப்பாம். (௫௫)

இருபத்தாறுவது பார்வதி திருக்கலியாணச் சருக்கம்
முற்றிற்று.
ஆசத் திருவிருத்தம் (எசுக)

---

**இருபத்தாறவது பார்வதி திருக்கலியாணச்சருக்கச் சுருக்கவசனம்.**

அகத்திய முனிவர் முதலாகச் சொல்லப்பட்ட சத்தரிஷிகளும், இமயமலையினிடத்து வந்துசேர்ந்தார்கள். அம்முனிவர்களை இமயமலை யரசன்கண்டு வணங்கிப்பூசைசெய்து நீங்கள் இங்குவந்தகாரணம் யாதென்றுகேட்க, சத்தரிஷிகள் சொல்லுவார்கள். சிவபெருமான் யோகத்திலிருந்து மன்மதனை யெரித்தபின்பு நாரதர் தும்புரு நின்று வீணை வாசிக்கத் திருக்கயிலாசமலையி லெழுந்தருளியிருக்குங்காலத்திலே சகலதேவர்களும் வந்து வணங்கிச் சுவாமீ! உம்முடைய திருவடியே எங்களுக்குக் காவல் சூரன் செய்யுந்துன்பம் பொறுக்கமுடியவில்லையென்று விண்ணப்பம் செய்தார்கள். உடனே கயிலாசபதி திருவருள் செய்து எங்களைநோக்கிப் பார்வதியை விவாகஞ்செய்ய நினைத்திருக்கின்றோம், நீங்கள்போய் இமவானுக்குத் தெரிவித்

து வாருங்களென்று விடைகொடுக்க இங்கே வந்தோமென்றார்கள். இச்செய்திகேட்டு இமவான் புளகாங்கிதங்கொண்டு மிகமகிழ்ச்சியடைந்து சருவலோக நாயகராகிய சிவபெருமான் என்னுடைய புத்திரியை விவாகஞ்செய்ய என்னதவஞ் செயதேனென்று சொல்லிச் சம்மதித்து அம்முனிவர்களைக் கயிலாசமலைக் கனுப்பிவிட்டு இமயமலை முழுதும் பொன்னாலும், மணியாலுங் கோடிசூரிய ருதித்தாற்போலும் அலங்காரஞ் செய்வித்தான், இந்தச்செய்தியைத் தேவப்பெண்களும் ரிஷிபத்தினிகளுங் கேட்டுச் சந்தோஷித்து மேனையிடத்துவந்து சோபனம் விஞ்விப் பார்வதியை நவரத்தினங்களாலிழைக்கப்பட்ட ஆபரணங்கள் பூட்டி அலங்காரஞ் செய்தார்கள்.

கயிலாசத்துக்குச் சென்ற சத்தரிஷிகளும் சிவபிரான் சந்நிதியிற் சென்று வணங்கி இமவான் புத்திரியைக்கொடுக்கச் சம்மதித்தானென்று விண்ணப்பஞ்செய்தலும் சிவபெருமான் மனமகிழ்ந்து மணக்கோலந் தரித்துக்கொண்டிருந்தார். உடனே அரிபிரமேந்திராதியர்கள் திக்குப்பாலகர் முதலிய சகலதேவர்களும் முனிவர்களும் கணநாதர்களும் பூதசேனைகளும் எண்ணிறந்தவர்கள் வந்து நெருங்கிச் சூழ்ந்தார்கள். அதன்மேல் நந்திதேவர் சிவபிரான் திருமுன்னர்ச் சென்று இமயத்துக்கெழுந்தருளும்படி பிரார்த்திக்கச் சிவபிரான் திருவுளமகிழ்ந்து ரிஷபவாகனத்தி லேறிச்சென்று சகலவாத்தியங்களுங் கடல்போல முழங்க இமயமலைச்சாரல்போய்ச் சேர்ந்தனர்.

அதுகண்டு இமவான் எதிர்கொண்டுவணங்கி மணப்பந்தருக்கு அழைத்துக்கொண்டு வந்தான். அப்போது எல்லாவுலகத்திலுமுள்ள சகலதேவர்களுமணக்கோலந் தரிசிக்க வந்தகாரணத்தால், உத்தர பூமி தாழ்ந்தும் தெக்ஷணபூமி உயர்ந்தும் இருத்தலைக் கண்டு பரமேசுரன், அகத்தியமுனிவரை யழைத்து வடபூமியுந் தென்பூமியுஞ் சமமாகும்பொருட்டுத் தென்றிசைக்குப்போய்ப் பொதியமலையின் கண்ணே நீ யிருத்தல்வேண்டும் உனக்கு இந்த மணக்கோலத்தைப் பொதியமலைச் சாரலிலிருக்கும் பாவநாசத்திலே சித்திரை மாதப்பிறப்புத்தினத்திலே வந்து காட்சி கொடுப்போமென்று உத்தரவுகொடுக்க அகத்தியமுனிவர் விடைபெற்று வரும்போது அடியேனுக்கு ஒரு தீர்த்தம் வேண்டுமென்று தாமிரைபன்னி நதியை வாங்கிக்கொண்டு தென்றலங்குன்றாகிய தமிழ்வரையை நோக்கி நடந்தார். அப்பால் இமவான் சுவாமியைத் திருமணவேதிகையி லெழுந்தருளச்செ

ய்து துந்துபி முதலிய வாத்தியமுழங்கத் தேவர்கள் புட்பமாரிபொழிய வேதவிதிப்படி தன்புத்திரியாகிய பார்வதியை விவாகஞ் செய்துகொடுத்தான். உடனே சிவபெருமான் பார்வதி தேவியுடன் ரிஷபவாகனத்தி லெழுந்தருளிச் சகல கணங்களுஞ்சூழக் கயிலாசத்துக் கெழுந்தருளினர்.



## இருபத்தேழாவது: அகத்தியர் வாவுரைத்த சருக்கம்.



தேங்கமழ் கடுக்கையணி செம்மலருள் பெற்றே
நீங்கியிம யக்கிரியி னின்றுவழி கொண்டா
னோங்குமுனி யெய்துதலு மண்டவெளி மாற்றி
யோங்குகிர வுஞ்சவரை யொன்றையெதிர் கண்டான். (க)

வெவ்வழி படைத்துழலும் வேசைமன மென்னச்
செவ்வழி கொடுத்திடை சிதைந்தவழி யாகி
யெவ்வழியு மற்றவரை யெங்குமிருள் காட்ட
வவ்வழி மயக்கினை யகத்திய னறிந்தான். (உ)

கைக்குறிய தண்டினை யெறிந்துவழி கண்டாங்
கக்கண மகன்றசுர னவனை நோக்கி
யிக்கொடிய குன்றுருவ மெய்துதி கிடந்தால்
மெய்க்குமர னுன்னைவடி வேல்கொடடு மென்றான். (௩)

பூரியனை வெப்பொடு புகன்றமுனி வாறிச்
சீரிய குணத்தொடு சிறந்தமுனி வந்தான்
சூரிய னடக்கும்வழி தூர்த்துமுகில் போர்த்து
மேருவை நிகர்க்கவளர் விந்தவரை கண்டான். (௪)

சந்தவரை நோக்கிவரு தண்டமிழ் முனிக்கோ
னிந்தவரை விந்தவரை யென்றுகை யமிழ்த்த
வந்தவரை முன்புற வணங்குவது மான
வந்தவரை பூமிவரை யாகியது மாதோ. (௫)

தாவில்வரை நாமிவண் வருந்தருண மட்டு
நீவிரைவி னேங்கலை கிடத்தியென நீங்கி

வீவிலுட லோடுழலும் வில்வலனும் வெல்வா
தாவியு மிருந்தக ணகன்றபொழில் கண்டான். (கூ)

சொல்வலன் மணந்தழுவு சோலைபுகு காலை
வில்வல னிறைந்ததவ வேடமொடு வந்தான்
மல்வல னுறுங்கொடிய மற்றவனொ டாடாய்க்
கொல்வது நினைந்துதழை கொண்டகுள குண்டான். (எ)

வந்தனை யொடுந்தனை வணங்கியபொய் வேட
னிந்தனையை வந்தனை யெனத்தனி நினைந்தான்
சந்தனை யுயர்ந்தகதி சாலையிலெய் தென்னச்
சிந்தனை தெளிந்தமுனி தீயனொடு புக்கான். (அ)

பித்தனெனை நல்கினர் பிதிர்த்தின மரும
வித்தின மிருந்தமுது செய்யென விசைந்து
பொய்த்தவ னடிக்கடி பொருக்கென வணங்க
மெய்த்தவர் தொழத்தகும் விழுத்தவ னிசைந்தான். (கூ)

கோட்டினொ டெலும்புகள் குளம்புசிதை யாதவ்
வாட்டினை யறுத்தவ னமைத்தகறி யோடும்
வேட்டமுறு போனகம் விழுத்தவனை யுண்ண
வூட்டின னுகர்ந்தன னுணர்ந்திலனி தொன்றும். (க0)

பாவிபல பேசியொரு பள்ளையுரு வாம்வா
தாவிவரு கென்னவவ னங்குருவ மெய்தி
மூவினையு மற்றவ னகட்டினிடை முட்ட
மேவுமிவர் வஞ்சனையை வித்தக னறிந்தான். (கக)

வன்கொடிய மேடமென வந்தவன் வெதும்பத்
தன்கைசுழி யுந்தியிடை தைவர வெரிந்தான்
முன்குலவு வஞ்சனை முனிந்துமுனி நோக்க
மின்குலவு கண்கனலின் வில்வல னெரிந்தான். (கஉ)

கையருயி ரோடுடல் களைந்தவ னகன்று
மையுலவு பற்பல வரைக்குவை கடந்தான்
வெய்யகிர வுஞ்சமொடு விந்தமென மீறுஞ்
சையமற வென்றமுனி சையவரை கண்டான். (கஙு)

பூன்பதை தொழத்தகும் வரைக்குடுமி யெய்திப்
பொன்பொலி கமண்டலமொர் பூமியிடை வைத்துத்

தன்குறை முடிக்கமுனி சார்தலு மடைந்தீ
னன்பர்பணி யைங்கரனுேர் காகவுரு வாகி. (கச)

வந்துகர கப்புனல் கவிழ்த்தயலின் வைக
வந்தமுனி சீறுதலு மானைமுக னாகி
முந்தையுரு வெய்திட முனிந்தசின நீங்கி
யெந்தைவர வென்னென விறைஞ்சவுரை செய்வான். (கரு)

நந்தன வனப்பயிர் நறும்புன லிலாமல்
வெந்தன வெனத்தனி வெதும்பியெமை வேண்டி
யிந்திரன் வழுத்திட விசைந்திவ ணடைந்தே
சிந்தின முளத்திடை திரிந்தயர லென்றான். (கசு)

மூன்றுவிழி யைங்கரன் முனிக்கிது துரைத்தே
யான்றமுனி போற்றியபி னவ்விடை மறைந்தான்
வான்றழுவும் வெற்பிடை மணிக்கரகம் வாயாற்
கான்றபுன லோடியது காவிரிய தாகி. (கஎ)

காமர்கலை யொன்றில்விரி காவிரி விடுத்துத்
தாமிரை பொலிந்தகர கந்தனி யெடுத்து
மாமுகில் வழங்குபல வெற்பின்வழி வந்த
கோமுனி யுயர்ந்ததிரி கூடவரை கண்டான். (கஅ)

காரணவு வெற்பருகு நின்றகட லொப்ப
வாரணமுன் வந்தநெடு மாதவன் வதிந்தா
ஞரண னெடுஞ்சின கரத்தையெதிர் நாடி
யாரணம் விரும்புகுறு மாதவ னணைந்தான். (கக)

ஆகமிறை நீற்றொடு மடைந்தவனை நோக்கிப்
பாகவதர் வெவ்வுரை பரப்பினர் துரப்ப
வாகுபெறு மம்முனி மறைந்தவர்கள் வேட
மோகமுற வெய்தினன் முகுந்தன்மு னடைந்தான். (உ0)

அந்தநெடு மாயன்முடி யங்கையி னமிழ்த்திச்
சுந்தர விலிங்கவடி வாக்கிமலர் சூட்டிச்
சந்ததமு மன்பர்புரி சைவநெறி நிற்பப்
புந்தியி னுவந்தபடி செய்துமுனி போனான். (உக)

அண்டருல கத்தைநிக ரன்றென நிறுத்தி
யெண்டிசையி னுள்ளனவு மில்லனவு முண்டாய்க்

கண்டவர் விரும்புகரு ணாகர மெனும்பேர்
கொண்டவள மண்டுநகர் கும்பமுனி கண்டான். (உஉ)

ஆடுகொடி மாளிகைக ளண்டவெளி மாற்ற
நீடுபுரி சைப்பதியை நீங்கியயல் செல்வான்
சேடுபெறு விக்கிரம சிங்கபுரி சூழு
நாடுதரு நல்வள நயந்தன னடந்தான். (உ௩)

புண்டரிக நந்துலவு பூரண நிலாவார்
தண்டரள வண்டல்கரை தள்ளுதிரை துள்ள
விண்டவிதழ் கண்டதில் விழுந்துழுது பாடி
வண்டுமது வுண்டுபயில் வாவிபல கண்டான். (உச)

ஆடுமயில் பாடுகுயி லன்னமுத லான
தேடுமிசை கூடவிசை புள்ளொலி சிலம்ப
நீடுமிள வாழைகனி சாடிமது நீரோ
டோடிவிளை யாடுமல ரோடைபல கண்டான். (உரு)

எள்ளரிய கொம்பினி விருல்பல பிழிந்துண்
டொள்ளிய பலாச்சுளை கவுட்புடை யொதுக்கி
மள்ளர்வெறி கொள்வதென மந்திபல குந்தித்
துள்ளிவிளை யாடவளர் சோலைபல கண்டான். (உசா)

சீருலவு வெண்முளை திருந்துபசு நாறு
சார்கதிர் சிவந்தகுலை சாலிபெறும் வண்ண
மாருநவ மாமணி யழுத்துநிரை பெற்றே
பார்மகள் பதக்கநிகர் பண்ணைபல கண்டான். (உஎ)

மங்குல் பொதிகோபுர மணித்தலைதன் வாயாப்
பங்கமில்வெண் மாடநிரை பற்றியது டம்பா
வங்குவளர் செம்பொனை யணைத்தலி னுவந்த
சிங்கநிகர் விக்கிரம சிங்கநகர் கண்டான். (உஅ)

இச்சையொடு மூழ்குமவர் தீவினை யெரிக்கு
முச்சுருதி யானமடு மூன்றுமெதிர் தோன்ற
விச்சைதரு மாமுனி வியந்ததனி லாடிக்
கச்சர வணிந்தவிறை முக்களவு கண்டான். (உகூ)

மூவரை யொழித்தசுரர் முப்புர மெரித்து
மூவரைய ராகமுயன் முக்கிரியை வைத்து

மூவரைய வானமறை முக்களவி லுற்று
மூவரையு மேவல்கொளு முக்கணுடை யானை. (௩௰)

சங்கானை மத்தமணி தண்சடில னைத்தண்
செங்கதிர் விரித்தொளி சிவேரென வயங்கும்
பங்கமி னிறத்திடை பசேரென விளங்க
வங்கொரு புறத்தினுல கன்னைபுணர் வானை. (௩௧)

கண்டுருகி நின்றுபுனல் கண்பொழிய நேசங்
கொண்டடி பணிந்துமெய் குழைந்து நடமாடிப்
பண்டைவினை சிந்தமுனி பற்றிவிடை பெற்று
விண்டொரு நெடும்பொதிய வெற்பையெதிர் கண்டான். ()

வேறு.

செம்மணி வெயிலி னலுஞ் சிந்துர மருப்பின் வந்த
வம்மணி நிலவி னலு மாதவன் மதிய நாளு
மிம்மலை தன்னில் வாழ்வோ மெனநினைந் திருத்தல் போன்று
மம்மர்செய் யிருளைமாற்றவழிக்கொண்டுமுனிவன் சென்றான்.

தென்றலால் வழித்துள் போக்கித் தேன்மழை தெளித்துச்
மன்றலார் போது சிந்தி மதுகரங் கீத மாகத் [செய்ய
துன்றுபுள் ளினங்களோசைத் தூரியந் துவைப்பச் சாந்தக்
குன்றெதிர் நின்று போற்றக் குறுமுனி குறுகி னனல். (௩௪)

புரிசடை தாங்கும் வெள்ளிப் பொருப்பிறை யருளி னலே
கரகமா முனிதா னீங்காக் கருணைகொண் டிமய நீங்கி
வருவது நினைந்து தென்றல் வழங்குதென் மலய மெங்குந்
திருவிளக் கேற்றல் போன்ற தீபதா வரங்கள் கண்டான். ()

பற்பல மணிபெற் றோங்கும் படப்பணிப் பூணு லானு
மிற்புற நிலவு காலு மதிமுடி யேந்த லானும்
வெற்பினுற் பவமாம் பச்சை யென்கொடி தழுவ லானுந்
தற்பர னென்னத் தோன்றுஞ் சந்தனச் சோலை புக்கான். ()

அருத்திகூ ருள்ளத் தன்ப ராற்றுபூ சனையா மென்னத்
திருத்திய பணிச்செங் கையாற் றீபமாம் பூங்கொத் தேந்தி
மருத்தழை சூதங் கண்ணீர் வழிதர வெதிரே நிற்பப்
பெருத்தெழு பலாசு பூத்தெம் பிரானென நிற்றல் கண்டான்.

கார்விழை யறன்மென் கூந்தற் கடவுளர் மகளி ரோடும்
போர்விளைநெடிய வேற்கட் புனத்தியர் மகளி ரோடும்
வார்விழை தனச்செப் பேந்தும் வரையர மகளிர் நாளு
நீர்விளை யாட வாய்ந்த நெடுஞ்சுனை பலவுங் கண்டான். (௩௮)

புரிகுழற் பின்ன லாடப் பூங்கொடி யிடைதள் ளாடத்
திரண்முலை குலுங்கி யாடத் திருமுகக் குறுவேர் வாடக்
கரவளை யாடப் பந்துங் கழங்குமே லெழும்பி யாட
வரியர மகளி ராடு மாதவிப் பந்தர் கண்டான். (௩௯)

மின்னரம் பையர்தா முள்ளம் வியப்புற விஞ்சை மாதர்
பொன்னரம் பிறுக்கி வாமப் புயத்துற வணைத்துத் தாங்கி
நன்னரங் குலிக ணீவி வரன்முறை நடத்திப் பாடுங்
கின்னரந் தருகா னம்போற் கின்னர முழக்கங் கேட்டான். ()

மருமலர்த் தோட்டு வெண்டா மரையுமம் மரையில் வாழு
மரிவையு மென்னத் தோன்றி யவ்வரைச் சார லூடு
விரவிய வரைகளீன்று வெண்ணிலாக்கொழிக்குமாரப்[தான்.
பருமணிக்குவைகொண் டோங்கும் பளிக்கறை விளக்கம்பார்த்

விரித்தவெண் சடில நாற்றி வெண்பொடி தயங்கச் சாத்தித்
தரித்துநின் றொருதாண் மற்றோர் தாளினை முடக்கி நீண்ட
கரத்துணை யோடுந் தத்தங் கண்ணிணை முகிழ்த்தி யோகம்
பரித்தமெய்த் தவத்தோர் வாழும் பன்னக சாலை பார்த்தான்.

தோடும்வெண் குழையும் பூண்ட சோதிபே ரருளாலென்றுங்
கோடுறாத் தவத்தி னன்றன் கோடுறு மென்ன நோக்கி
நீடுதென் மலய மெங்கு நிரைத்தலங் கரித்து நாட்டு
மாடுபொற் கொடிகள் போன்ற வருவிகள் பலவுங் கண்டான்.

வேறு.

பொங்கு கார்நிற வாரியிற் போந்துவெண்
மங்குல் பாய்வது மானவங் கோரிடம்
வெங்கண் யானைக் குழாங்கள் வெரீஇக்கொளச்
சிங்கம் வாவிச் சிலைப்பது நோக்கினான். (௪௪)

விண்ணு லாம்விஞ்சை வேந்தர் சிறுத்துதேர்
வண்ண மென்ன வரையகத் தோரிடங்
கண்ணெலா முத்தங் கான்றிடு மூங்கிலம்
பண்ணை சூழ்ந்த பரப்பினை நோக்கினான். (௪௫)

வளர்த்த கீர்த்தி வணிகன் கருங்கலை
திளைத்த வெண்ணிறஞ் சேர்ந்தென வோரிடந்
துளித்த கார்முகில் சோனை பொழிந்து பின்
வெளுத்தெ ழுந்து விளங்குத னோக்கினன். (௪௬)

செழிக்கு மிவ்வகை யான சிறப்பெலாம்
விழிக்கு நல்ல விருந்தென நோக்கினன்
சுழிக்குந் தென்றற் கொழுந்தொடு தூய்த்தமிழ்
கொழிக்குஞ் சந்தக் கொடுமுடி யெய்தினன். (௪௭)

நயந்து பாவ விநாசனைப் பாவித்தே
யுயர்ந்த மாமலை யுச்சியஞ் சாலைவா
யியைந்த மாதவ ரெண்ணிலர் நண்ணிமுன்
வியந்து பூசிக்க வீற்றிருந் தானரோ. (௪௮)

தன்றி ருப்படி வக்குறுந் தன்மைதே
சொன்ற மாமலை யுச்சியின் மேயினு
னின்று ரைக்கும் பழமொழி நேரெனக்
குன்றி விட்ட குலவிளக் காயினன். (௪௯)

வாழ்ந்த சிந்தைக் குறுமுனி வான்மதி
போழ்ந்த சந்தப் பொருப்பி னிருத்தலு
மாழ்ந்த கோடிய ரம்பிலத் தூத்தாந்
தாழ்ந்த பூமி சமதல மாயதால். (௫௦)

தேடு தட்டுப் பனிமலை தென்மலை
கூடு பண்ட மமரர் குழாம்படி
யீடு பெற்ற குறுமுனி யென்னவே
தோடு குண்டலந் தூக்கினன் றூக்கினன். (௫௧)

சாந்த வெற்பிடைத் தண்டமிழ் மாமுனி
போந்த செய்தி புகன்றன மந்தணீர்
சேர்ந்த சோதித் திருமணக் கோலங்கொண்
டேந்த லெய்திய செய்தி யியம்புவாம். (௫௨)

இருபத்தேழாவது அகத்தியர் வரவுரைத்த
சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (அ௨௧).

**இருபத்தேழாவது அகத்தியர் வரவுரைத்த சருக்கச்சுருக்கவசனம்.**

இமயமலையினின்றும் அகத்தியமுனிவர் புறப்பட்டுவரும்போது அண்டவெளியெல்லாம் அடைத்துவளர்கின்ற கிரவுஞ்சமலையைக்கண்டு அங்கே வளிதெரியவொட்டாமல் இருளைப் பரப்பிநின்ற ஒரு அசுரனைத் தமது கையிலுள்ள தண்டத்தினாலே கெடுத்து இந்த மலைவடிவமாகக்கிடவென்று சபித்துப் பின்பு முருகக்கடவுள்வந்து உன்னை வேலாயுதங்கொண்டு பிளக்குமென்றுசொல்லிக் கோபந்தணிந்து அப்பால் வரும்போது சூரியனுக்கும் நடக்கும்வழியை மாற்றி மேருவைப்போலும் வளர்கின்ற விந்தமலையைக்கண்டு கையினாலே பூமிக்குள்ளே அழுத்தி நாம் வருமளவும் வெளிவராதேயென்று சொல்லிவிட்டு அப்பாற்சென்று வாதாவி வில்வலன் என்று சொல்லப்படும் இருவரிருக்கும் பூஞ்சோலையினிடத்துவருதலும் அது தெரிந்து வில்வலன் ஒரு தவவேடங்கொண்டு எதிர்வந்து வணங்கிச் சுவாமீ! அடியேனுடைய பன்னசாலைக் கெழுந்தருளவேண்டுமென்று அழைத்துக்கொண்டுபோய் இன்று அடியேனுடைய பிதிர்த்தினம் ஆதலாலே தேவரீர் மறுது அமுதுசெய்துபோதல் வேண்டுமென்றுகூற அகத்தியமுனிவர் அதற்கு நல்லதென்று சம்மதித்தார்.

உடனே வில்வலன் வாதாவியை ஆடாகவரும்படிசெய்து அந்த ஆட்டையறுத்துக் கறி சமைத்துவைத்து அன்னமுதலியவற்றோடு சேர்த்து அகத்தியமுனிவருக்குப் போசனஞ்செய்வித்தான். அம்முனிவர் இது ஒன்றையும் அறிந்தாரில்லை போசனமுடிந்தவுடன் வில்வலன் வாதாவியென்று அழைத்தான் அழைத்தவுடனே முனிவருடைய வயிற்றிலே ஆட்டினுருக்கொண்டு வாதாவி முட்டுதலும் முனிவர் ஞானத்தினாலே யெல்லாந்தெரிந்து கையைக்கொண்டு தமது உந்தியைத் தடவுதலும் வாதாவி வயிற்றினுள்ளே யெரிந்து சாம்பராயினான்: பின்பு வில்வலனைக் கோபக்கனல்சிந்த விழித்துப்பார்த்தலும் அவனும் எரிந்து சாம்பராயினன். ஆனவுடனே அவ்விடத்தை விட்டுச்சென்று அநேக மலைகளைக்கடந்து சையமலையினுச்சியிலே வந்து சேர்ந்து கமண்டலத்தை யோரிடத்திலேவைத்துத் தமது நியதிகளை முடித்துக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்திலே விநாயகக் கடவுள் ஒரு காகத்தின்வடிவெடுத்துவந்து கமண்டலத்தைக் கீழே கவிழ்த்தலும் அகத்தியமுனிவர் கோபங்கொண்டு காகத்தை யெதிர்ந்துநோக்கினார். உடனே காகவுருவைமறைத்து விநாயகக்கடவுள் தமது சொரூபத்தோடு எதிர்நிற்றலும் அகத்தியமுனிவர் வணங்கித்

துதித்துச் சுவாமீ! இங்கெழுந்தருளியது என்னகாரணமென்று கேட்க விநாயகர் சொல்லுவார் இந்திரன்செய்த நந்தனவனத்துக்குத் தண்ணீரில்லாம லெம்மைவேண்டினன் அதற்காகவந்து கமண்டலத்தைக்கவிழ்த்தோம் நீர் வருந்தவேண்டாமென்று கூறி மறைந்தருளினர்.

காகத்தினலே கவிழ்க்கப்பட்டசலம் காவிரிநதியாகச்சென்றது. தன்னுடைய கலையொன்றினலே காவிரிநதிவரவிடுத்த தாமிரைபன்னிநதி தங்கிய கமண்டலத்தை அகத்தியமுனிவர் கையிலெடுத்துக்கொண்டு சென்று திரிகூடமென்னுந் திருக்குற்றாலமலையைச் சேர்ந்து அம்மலைச்சாரலிலுள்ள விஷ்ணுமூர்த்தியைத் தரிசிக்கப்புகும்போது அங்குள்ள வைணவர்கள் கோபங்கொண்டு முனிவரைத் துரத்துதலும் உடனே வெளியில்வந்து வைணவவேடந்தரித்துக் கொண்டு கோயிலுள்ளேசென்று விஷ்ணுமூர்த்தியினுடைய முடியிலே கையைவைத்து அமிழ்த்தி இலிங்கவடிவமாக்கித் தரிசித்துவிட்டு அப்புறஞ்சென்றுபோய்க் கருணாகரநகரத்தைக்கண்டுசென்று விக்கிரமசிங்கபுரத்தைச்சூழ்ந்த சோலைவயல்தடாகமுதலிய பல சிங்காரவளங்களையுங் கண்டு சென்று வேததீர்த்தத்தையடைந்து ஸ்நானஞ்செய்து பாவநாசத்திலே முக்களாநிழலிலே முளைத்த வயிராசலிங்கத்தைத் தரிசித்துத் தோத்திரஞ்செய்து வணங்கித் திருவருள் பெற்றுச் சகலவளங்களும் நிறைந்த பொதியமலையினுச்சியிற்சென்று பன்னசாலைசெய்து அங்குள்ள முனிவர்வணங்க எழுந்தருளியிருந்தனர். அதன்மேல் வடபூமியுந் தென்பூமியுஞ் சமமாயிருந்தன. இதுகாறும் அகத்தியமுனிவர் பொதியமலைக்குவந்த சரித்திரஞ்சொன்னேம் இனித் திருமணக்கோலமுற்றுச் சிவபிரானெழுந்தருளிய சரித்திரத்தைச் சொல்லுவோமென்று சூதமுனிவர் மற்றைமுனிவர்களுக்குச் சொல்லியருளினர்.



## இருபத்தெட்டாவது: அகத்தியருக்குத் திருமணக்கோலக் காட்சி தந்தசருக்கம்.



சந்தனக் கிரிநீங் காது தண்டமிழ் பொழியுங் கொண்ட
லெந்தைதன் கோலங் காண்ப தென்றெண விருக்கு மேல்வை
வந்தன னுவந்து மாதோ வயிராசத் தலத்தின் முந்நாட்
சிந்தையுண் மகிழ்ந்து செப்புஞ் சித்திரை யாதி நாளில். (க)

தண்மதி தவசின் ருற்றிச் சடையின்மேற் சார்ந்த தெண்ணி
வண்ணவா னிரவிதானு மாதவம் புரிந்து நோற்றுப்
புண்ணியன் முடிமேல் வந்து பொலிந்தது போலா மென்ன
நண்ணுசெஞ் சோதி கானு நவமணி மகுட மின்ன. (உ)

துண்டவெண் மதிய மூன்ருய்த் தோற்றுதல் போல நீற்றுப்
புண்டரமிலங்கு நெற்றிப் பொற்பட்டம் பொலிந்து தோன்ற
மண்டல வதனச் செந்தா மரையுறு மணிவண் டென்னக்
குண்டல மிரண்டு பாலுங் குழையிடை யூச லாட. (ங)

நானிலத் தோங்குஞ் செம்பொன் னுகத்தை நாகத் தாலே
கூனல்வெஞ்சிலையாம்வண்ணங் குழைந்திட நிமிர்ந்த தோளிற்
பானுவொன் றிரண்டா மந்தப் பருப்பதந் தன்னைச் சூழ்தன்
மானமா மணிசூழ் வாகு வலயங்கள் வயங்கித் தோன்ற. (ச)

கடவுள ராவி முற்றுங் காத்தருள் காள கண்டத்
தடையினி னிரைத்த கண்ட சரமணி யணிபெற் ருேங்கக்
கொடியிடைக் கொம்பு கொங்கைக் கொம்பினுழுத மார்பில்
வடமுறு மாரம் வீர சன்னங்கள் வயங்கி வீச. (ரு)

இதவிதத் தசைகள் வேட னெடுத்தெடுத் தூட்ட வுண்ட
வுதரத்தி லுதர பந்த மோங்குபொற் காந்தி வீசக்
கதமுற்ற புலித்தோ லாடை கட்டிய விடத்தே செம்பொற்
பதம்வைத்துப் பிறங்கு மாடை பட்டுடை பணிபெற் ருேங்க.

மதியொடு முயலுஞ் சீறி வருமுய லகனு மாவி
சிதைவுற மிதித்துத் தேய்த்துச் சிவந்தபொற் கமலத் தாளில்
விதிமுத லான தேவர் வேதவாக் கியங்க ளாற்செய்
துதியென வொலிக்கும் வீரப் பொற்கழ றுலங்கித் தோன்ற.

பாடகஞ் சதங்கை தாங்கிப் பட்டுடை காஞ்சி தாங்கிச்
சூடகங் கடகந் தாங்கித் துலங்குபொன் னூரந் தாங்கி
யாடகத் திருநாண் பொற்ரு டணிபல தாங்கித் தோன்று
நாடகத் தோகை வெற்பி னங்கையோர் பங்கி லோங்க. (அ)

வேறு.

வள்ளன்முனி மேவு மலயமலை வந்துவந்து
நள்ளுறமால் வாடையென நாசிநெடு மூச்செறிந்து
தெள்ளமுதச் செஞ்சொல்வரைத் தேனேறத் தானேறும்
வெள்ளைவிடை வீற்றிருந்த வெள்ளிமலை போல்விளங்க. (கூ)

கண்டார்மொழி யரம்பை கன்னி திலோத்தமையும்
வெண்டா மரைபோல வெண்சா மரைவீச
வண்டோ விடுந்தார் மணிமுடிமேல் வான்மதிபோற்
குண்டோ தரன்பிடிக்குங் கொற்றக் குடைநிழற்ற. (கo)

ஊற்றுப் புனலி லுலவுநெடு மீன்கொடியுந்
தோற்றிச் சிலையுந் துடியா ரிடிக்கொடியும்
பாற்றுக் கொடியுமனப் பைங்கொடியும் பின்போத
வேற்றுக் கொடிவிண் ணிடையெழுந்து முன்போத. (கக)

பரிதிமதி தீக்கடவுள் பாங்கின்விளக் கேந்திவர
நிருதியமன் காளாஞ்சி நேராக வேந்திவர
வருதிவலை யுறவருணன் வாயுமிக வழிவிளக்கச்
சுருதியுற யாழ்வீணை தும்புருநா ரதரிசைப்ப. (கஉ)

பொன்னுலக மன்னனருள் பூண்டடைப்பை தாங்கிவரத்
தன்முடியிற் பாதுகையைத் தாங்கியயன் பின்புவர
மன்னுமறை யாலாசி மாதவர்கள் கூறிவரப்
பின்னமிலீ சானனும் பிங்கலனும் பங்கில்வர. (கங)

எழுகடலுந் திரைநாவா லெழுந்துநடந் திசைப்பதென
முழவுகிணை தூரியங்கண் முருடுமுத லியமுழங்க
மழைபினங்க ளோரேழும் வழங்குமிடி முழங்கலெனத்
தழுவுதுணைச் சின்னமொடு சங்குபல கோடியம்ப. (கச)

மலயமலைப் பாரிசத்தில் வானகத்தி லெழுந்தருளக்
கலசமுனி மணக்கோலங் கண்டுமகிழ் கொண்டுநின்று
பலமுறையும் பணிந்தெழுந்து பரவசமா யுடன்முழுது
நிலவுபுள கிதமாகி யாரணத்தா னோர்துதித்தான். (கரு)

தாமரையு மணக்கோலந் தழைத்தவிடை மேலிருந்த
கோமளையைப் பரம்பொருளைக் குழைவாகத்தொழுதேத்தக்
காமர்துணை விழிபடைத்த பலன்படைத்தான் காகமுனி
சோமந்திச் சடையானைத் தொழுதுவரங் கேட்கலுற்றான். ()

இத்தலத்து மணக்கோலக் காட்சிதந்த வித்தினந்தான்
சித்திரைமா தப்பிறப்புச் சிறந்ததின மாதலினுன்
மெய்த்தவரு டன்தொறுமிவ் விழுத்தி னத்தி லெவரேனும்
பத்தியுடன் பணிவோர்தம் பவநீக்கி யருளென்றான். (கள)

குறுமுனிவன் கேட்டவரங் கொடுத்தருளி யிறைபகர்வான்
செறிமலயப் பொதியமலை தென்கயிலை யாதலினு
னிறைதவத்தோ யிக்கிரியி னீங்காமை நீயிருத்தி
மறுவுறுதா மிரைநதியாம் வகைகுவட்டில் விடுதியென்முன்.()

புலன்கடிந்த குறுமுனிக்குப் புரிசடையான் வரமுதவி
யிலங்குசுடர் வயிராச விலிங்கத்தி னிடைமறைந்தா
னலந்தருமா வரணமுற்ற நந்திகேசுரன்முதலோர்
தலந்திகழ வவ்வர்க்காந் தானத்து மறைந்திருந்தார். (கக)

இருபத்தெட்டாவது அகத்தியருக்குத் திருமணக்கோலக்
காட்சிதந்த சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (அசo).

---

## இருபத்தெட்டாவது அகத்தியருக்குத் திருமணக்கோலக்காட்சிதந்த சருக்கச்சுருக்கவசனம்.

சந்தனவிருக்ஷமுஞ் செந்தமிழும் வளராநின்ற பொதியமலையின்கண்ணே அகத்தியமுனிவர் நீங்காத சிவபிரான் திருமணக்கோலங்காண்பது என்றைக்கு என்று நினைந்திருக்குஞ்சமயத்திலே கயிலாசத்தில் முன்சொல்லிய திருவாக்கின்படி சித்திரைமாதப்பிறப்புத்தினத்திலே சிவபிரான் தமது திருமுடிமேலே சந்திரன் தவஞ்செய்துவந்திருத்தல் தெரிந்து சூரியனுந் தவஞ்செய்துவந்திருந்தாற்போல நவமணிகளாற்செய்யப்பட்ட மகுடம் பிரகாசிக்கவும் திரிபுண்டரமாக விபூதிவிளங்கு நெற்றியிலே பட்டம் இலங்கவும் இரண்டுபக்கத்திலுமுள்ள காதுகளிலே குண்டலங்கள் பிரகாசிக்கவும் தோள்களிலே வாகுவலயங்கள் காந்தியைவீசவும் நீலகண்டத்திலே கண்டசரம் விளங்கித்தோன்றவும் மார்பிலே முத்துமாலையும் பதக்கமும் வீரசன்னமும் பிரகாசிக்கவும் வயிற்றிலே உதரபந்தனம் விளங்கவும் புலித்தோலாடைகட்டிய திருவரையிலே பீதாம்பரங்கள் தரித்து விளங்கவும் திருவடிகளிலே வீரக்கழல் முழங்கித்தோன்றவும் சருவாபரணங்களால் அலங்காரஞ்செய்யப்பட்ட பார்வதி ஒருபாகத்திலேயிருக்கவும் அரம்பை திலோத்தமை சாமரம்வீசவும் குண்டோதரன், குடைபிடிக்கவும்; விஷ்ணு, பிரமன், இந்திரன், சூரியன், சந்திரன், அக்கினி, வருணன், வாயு முதலானவர்கள் அவரவர்களுக்குரிய பணிவிடைகளைச்செய்துவரவும் துந்துபிமுதலிய வாத்தியங்

கள் முழங்கவும தும்புருநாரதர் இசைபாடவுமீ, சகலவேதங்க ளொருபுறம் முழங்கவும், ரிஷபவாகனத்தி லெழுந்தருளிப் பொதியமலைச்சாரலிலுள்ள பாவநாசத்திலேவந்து திருமணக்கோலக்காட்சி தந்தருள அகத்தியமுனிவர் கண்கள்குளிரத் தரிசித்து உரோமஞ்சிலிர்ப்ப உரைதடுமாறத் தோத்திரஞ்செய்து பரவசராகிவணங்கிச் சுவாமீ! அடியேனுக்குக்காட்டிய திருமணக்கோலக்காட்சியை வருடந்தோறுஞ் சித்திரையாதப்பிறப்பிலே காண்பித்து அதனைத்தெரிசித்தவர்களுடைய பாவங்களைப் போக்கியருளவேண்டுமென்று வரங்கேட்க, சிவபிரான் அவ்வாறே வரங்கொடுத்தருளி அகத்தியமுனிவரைப்பார்த்துப் பொதியமலை தெக்ஷணகயிலாசமாகையால் நீர் இம்மலையைவிட்டு நீங்காம லெப்போதும் இருத்தல்வேண்டுமென்றும் தாமிரைபன்னிநதியை இம்மலையினுச்சியினின்றும் வர விட்டுவிடவேண்டுமென்றுங் கட்டளையிட்டு வயிராசலிங்கத்தினுள்ளே மறைந்தெழுந்தருளியிருந்தனர். நந்திதேவர் முதலாகிய, ஆவரணதேவதைகளும் அவரவர்களுக்குரிய தானத்திலே மறைந்திருந்தனர்.



## இருபத்தொன்பதாவது: தாமிரைபன்னிச் சருக்கம்.



பரவுதமிழ் முனிபொதியப் பருப்பதத்தில் வீற்றிருந்து
காரகநிறை தாமிரையைக் கவிழ்ப்பனி மூன்ருகுந்
திரைகுலவு மோராறு நாரதநீர்த் தத்தளவி
வரையருவி பலமருவி வந்ததுபூ ருவநோக்கி. (க)

வயிராசக் கேத்திரமுற் றுத்தரவா கினியாகி
யயராது மூன்றுநதி யாகிவரைக் கொடியிடத்துப்
பயிராகும் வயிராசர் பதம்பணிந்தாங் கீரநதி
யுயராத வேதமடு மூன்றினையு முடன்கலந்து. (உ)

குணதிசையின் முகமாய்முன் பிரிந்தவிரு குலநதியு
மணவியங்குத் திரிபதகை யானதிறங் காட்டுவித்து
மணிநதிதன் னுடன்விரவிக் காசிபர்தம் வனமளவி
யணிகொள்கயேந் திரமோட்ச வாவிகளை யகப்படுத்தி. (ங)

கடனைநதி கிழாறுங் கம்பைநதி யுடன்கலப்பக்
குடவளைகொண் டோங்கியசித் திரநதியுங் கொழித்தணையத்
தடமருப்பு மணிக்குவையுஞ் சந்தனமுங் கொண்டுமலர்
மடலெடுத்துக் கடலரசர் மணமகளை மருவியதால். (சு)

வேறு.

கொழித்த செந்தமிழ்ப் பாண்டிநன் னாட்டிடைக் குலவித்
தழைத்த தாமிரை பன்னியென் ஹொருபெயர் தரித்துச்
செழித்த தன்னிடத் தாதியிற் செம்மணி பயந்து
கிழித்து வாவியிற் புகுந்துதண் டரங்கங்கள் கிளைக்கும் (ரு)

மற்றை யோர்நதி பச்சிம வாகினி யாகிக்
கொற்ற வாழியான் முன்பிறந் தானெனுங் குறிப்பாற்
பற்றி னோருமவ் வனந்தமேகத் திரத்திடைப் பரந்து
தெற்று வெண்டிரைப் பாற்கட லிடைச்சென்று செழிக்கும்.

ஓங்கு மோர்நதியுத்தர வாகினி யாகிப்
பாங்கி னூற்சென்று தன்சமை தரியெனும் பண்பாற்
றேங்கு பற்பல வளமெலாந் திரைக்கர நீட்டி
வாங்கு காவிரி மாநதி யொடுசென்று வதியும். (எ)

போற்று கங்கையுந் தன்னிடைப் படிந்தவர் புன்மை
தோற்று பாவங்கள் யாவையு மாணிக்கத் தொகுதி
யேற்ற தாமிரை பன்னிபி னிடைவந்து படிந்து
மாற்று மால்வரு டந்தொறு மார்கழி மாதம். (அ)

எண்ணில் பாவங்க ளியற்றுவிப் பிரன்வணி கேசன்
மண்ணின் மேற்செய்த தீங்கெலா நீங்குறும் வண்ண
மண்ணல் பாவவி நாசர்தஞ் சந்நிதி யகத்துப்
புண்ணி யத்திருப் பொருனைநீர் படிந்துபோக் கினரால். (கூ)

மொழிந்த மார்கழித் திங்களி லாகுதன் முன்பி
னொழிந்த திங்களி னாகுதல் பொருனையி லொருநாட்
பொழிந்த வன்பொடும் படிந்தவர் பூண்டவெவ் வினையா
லழிந்த சிந்தைய ராயினும் பரகதி யடைவார். (கo)

சிறந்த தாமிரை பன்னியின் மகிமையைச் சிறியே
னறிந்த வாறுமக் குரைத்தன னருமறைத் தவத்தீ

பிறந்த பாதக மனுதின மளவிலா தியற்றி
யுறைந்த சுந்தரன் சரிதையை யுரைக்குதுங் கேண்மின். (கக)

இருபத்தொன்பதாவது தாமிரைபன்னிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (அருக).

---

## இருபத்தோன்பதாவது தாமிர பன்னிச்சருக்கச்சுருக்கவசனம்.

தமிழ்முனிவராகிய அகத்தியர் பரமேசுரன் ஆக்கினைப்படி பொதியமலையினுச்சியிலே தமது கமண்டலத்திலுள்ள தாமிரபன்னி நதியைக்கவிழ்த்தலும் அந்த நதி மூன்றாகப்பிரிந்தது. அவைகளுள் ஒரு நதி நாரததீர்த்தத்திலே வந்து கலந்து அம்மலையிலுள்ள பல அருவிகளிலுந் தோய்ந்துகிழக்கே நோக்கிவந்து வயிராச க்ஷேத்திரமாகிய பாவநாசத்தையடைந்து உத்தரவாகினியாகி அங்கு நின்று மூன்று பிரிவாகப்பிரிந்து வயிராசலிங்கத்தை வணங்கித்திரும்பி ஆங்கீரநதியையும் வேததீர்த்தத்தையும் வந்துகலந்து உத்தரவாகினியினின்றுங் கீழ்த்திசைமுகமாகச்சென்ற இரண்டு நதியுடனும் திரும்பவந்து சேர்ந்து பின்பு மணிமுத்தாநதியோடு வந்துகலந்து மீண்டு காசிபமுனிவர் தபோவனத்தையடைந்து கயேந்திரமோக்ஷதடாகங்களைச்சேர்ந்து அப்பாற்சென்று கடனாநதியும் பாதலவாகினியாகிய கம்பாநதியுந்தன்னொடு கலப்பச் சித்திராநதியுடன்சேர்ந்து சமுத்திரம்போய்ச் சேர்ந்தது. இந்தநதிதான் செந்தமிழ்நாடாகிய பாண்டிநாட்டிலே பரவித்தாமிர பன்னிநதியென்றுபெயர்பெற்றது.

அகத்திய முனிவர் கமண்டலத்தைக் கவிழ்க்கும்போது பிரிந்தமற்றை இரண்டுநதிகளில் ஒருநதி மேற்றிசைவாகினியாகிய அனந்தசயனக்ஷேத்திரத்திடை வியாபித்துத் திருப்பாற்கடலைப் போய்ச் சேர்ந்தது. மற்றொரு நதியானது உத்தரவாகினியாகி விநாயகக்கடவுள் காகருபங்கொண்டு முனிவர் கமண்டலத்தைக் கவிழ்க்கும்போது தாமிரபன்னியின் ஒருகலையாகப் பிரிந்த காவிரிநதி தன் சகோதரியென்றெண்ணி அதனுடன் கலந்துசென்றது. கங்காநதியுந்தன்னிடத்திலே வந்து மூழ்கினவர் பாவங்களையெல்லாம் வருடந்தோறும் மார்கழிமாதம் இந்தத்தாமிரைபன்னி நதியிலேவந்து மூழ்கிநீங்கச் செய்யும், அன்றியும் கணக்கில்லாத பாவங்கள்செய்த பிராமணனொருவனும் வணிகனொருவனும் வந்து பாவநாசர் சந்நிதிமுன்னே யுள்

ள தாமிரைபன்னிநதியிலே மூழ்கி அப்பாவங்களைப்போக்கினார்கள். இன்னும் கார்த்திகைமாதம் மார்கழிமாதம் தைமாதம் ஆகிய மூன்று மாதங்களிலும் வந்து மூழ்கினோருடைய எப்படிப்பட்ட பாவங்களை யும் போக்கும் இந்த அற்புதங்களையுடைய தாமிரைபன்னி நதியின் பெருமையைத் தெரிந்தவாறுசுருக்கிச்சொன்னோம். இனி அளவுகட ந்தபாதகஞ் செய்தசுந்தரன் சரித்திரத்தைச்சொல்லுவோ மென்று சூதமுனிவர் மற்றை முனிவர்களுக்குச் சொல்லியருளினர்.

## முப்பதாவது சுந்தரன் பாவமோசனச்சருக்கம்.

தனவ ளந்தினங் குறைபடாக் கவுடதே சத்துப்
புனித மாமறை முழக்கறாக் காந்தமா புரத்துத்
தனவ ளம்பெற்று வற்சகோத் திரத்தன்ன தான
மனம்வி ரும்பரிமித்திர னெனுமொரு மறையோன். (௧)

மச்ச நெய்பருப் பாதியான் மறையவர்க் கென்று
மிச்சை யாலமு தளித்துநன் னியமங்க ளியற்றி
விச்சை பற்பல கற்றறிந் தானந்த மேலோற்
கெச்ச மாகவந் துதித்தனன் சுந்தர னென்பான். (௨)

அந்த மைந்தனு மருமறை யாதிநூல் பயின்று
தந்தைபோலநன் னியதியிற் றவறிலா திருந்தா
னிந்த வண்ணமாங் கிருந்துழித் தூண்டிலொன் றேந்திப்
புந்தி கூர்ந்தொரு கூடைகொண் டோடையிற் போனான். (௩)

நிலவு மீன்பல பிடித்தந்தக் கூடையை நிறைத்துக்
குலவு தன்மனைக் கேகுவான் வழியிடைக் குளிர்பெற்
றிலகு நீழலி லிருந்தன னிருக்குமவ் வேல்லை
யலகு விஞ்சைசெய் சாரண ராயிடைப் போந்தார். (௪)

போந்த சாரணர் தம்மொடு மளவளாய்ப் பூரித்
தேந்து கொங்கையங் நாடகக் கணிகையோ டிணங்கி
நீந்தி டாமயல் படைத்துத்தன் னியதியுங் கெடுத்து
மாந்து றுமது மாந்தியன் னவரொடும் வதிந்தான் (௫)

தாதை தேடிய தனங்களத் தையலுக் களித்துத்
தீது தேடின னன்னவன் செய்தியைத் தெளிந்து

மாத னத்தினைப் பூதலத் திடைப்பிதா மறைத்தான்
போத மற்றவன் கணிகைபா லொருதினம் போனான். (சு)

நறவ மாந்திய மயக்கொடு நாடிவந் தணைந்த
மறைய வன்றனை நிதியின்றி வருவது முறையோ
விறையு நிற்கலை யேகெனச் சினத்தொடு மியம்பச்
சிறுமை பெற்றவன் மெலிந்துதன் மனையிடைச் சென்றான்.()

திரவி யந்தனைத் தேடினன் காண்கிலான் சினத்தா
லுருவும் வாள்கொண்டு தாதையை யுயிர்வதை புரிந்தான்
மருவ வெண்ணினன் றாயையு மகன்மனக் குறிப்பும்
பொருவில் காதலன் மரணமுங் குறித்துளம் புகைந்தாள்.(அ

தாலம் வேறற வாங்கியே தன்னுயிர் விடுத்தாண்
மாலு நெஞ்சினன் மதுவுண்டு மதுமயக் கொழிந்தா
னாலு வேதமு முணர்ந்ததன் றந்தைதாய் நலிந்து
காலெ மன்றியே மரித்தங்குக் கிடந்தது கண்டான். (கூ)

கண்டு மெய்யெலாம் பாவச மடைந்துளங் கலங்கி
மண்டு பாதகம் புரியவோ மறையவ னானேன்
மிண்டி னாற்செய்த தீவினை யினிவிட்டு விடுமோ
தண்ட பாணிக்குந் தண்டித்துத் தவிர்ப்பதற் கரிதால். (கO)

வேத னிப்படி யோசிரத் தெழுதிமுன் விடுத்தான்
காத ரக்கட லாயினன் விடியிலிக் கடிய
வேத மற்றவ ரறிவரென் றிந்தன மடுக்கித்
தாதை தாய்க்கந்த மனைக்குளே தன்கடன் முடித்தான். (கக)

நள்ளி ராவிலக் நகர்கடந் தப்புற நடந்தா
னெள்ள லாவிரு பிரமகத் தியுமபிடித் திழுப்ப
வுள்ளம் வாடியீ தொழிப்பதெவ் வாறென வுலைந்து
தெள்ளு வார்திரைத் தீர்த்தயாத் திரைசெய நினைத்தான். ()

நாவ லம்பெருந் தீவினில் வரநதி முதலா
மேவு தீர்த்தங்கள் யாவையும் விதிமுறை படிந்து
பாவ மெப்பொழு தென்னைவிட் டகலுமோ பாவி
தாவி னற்கதி சார்வனோ வென்றுசஞ் சரித்தான். (கந)

வார்ந்த செஞ்சடைப் பரன்வயி ராசமா தலத்தைச்
சேர்ந்த பஞ்சக்கு ரோசமா மெல்லையிற் சென்று

னோர்ந்த வவ்விரு பிரமகத் தியும்வெந்து நீருய்ப்
பேர்ந்து போயது கண்டன னனந்தம பெற்ருன். (கச)

இந்த வற்புதங் கண்டுளங் களித்திடு மேனைவப்
பந்த பாதகம் பாவவி நாசத்தில் வந்தாற்
சிந்து முத்தர்சேர் பரகதி சேர்வது மெளிமிதென்
ருந்த ரத்திரு மொழிசொல வந்தணன் கேட்டான், (கரு)

திங்கண் மார்கழி யிடத்தமா வாசியாந் தினத்து
மங்க ளந்தரு பாவவி நாசத்து வந்து
பொங்கு வேதமுத் தீர்த்தமும் படிந்தருள் பூக்துப்
பங்க நீக்குறுஞ் சந்நிதிச் சிவகங்கை படிந்தான். (கசு)

சன்னி திச்செழும் பொருனைநீர் தனிற்படிந் ததனுன்
முன்னி யற்றிய பாவங்கண் முழுவது மொழிந்தான்
மின்னு செஞ்சடைப் பாவவி நாசர்வெள் விடைமேற்
கன்னி தன்னெடு வானிடைக் கொடுத்தனர் காட்சி. (கஎ)

தொழுது கண்களி லானந்த வெள்ளநீர் சொரிய
முழுது நோக்கினன் வேதவாக் கியங்களை மொழிந்து
பழுதி லாத்துதி செய்தனன் பரமனு மகிழ்ந்தா
னிழுதை யாகிய வெளியனைப் புரந்தனை யெந்தாய். (கஅ)

பரித்த பாதக மளவிலாப் பாவியேன் பொருட்டான்
மரித்த தந்தைதாய் பரகதி பெறும்வரந் தருவாய்
விரித்த வேணியா யின்னுமிக் கொடுமைநான் விழைந்து
தரித்தி டாதிரு தாளிணை தந்தரு ளென்ருன். (கக)

அன்னை தாதைக்குப் பரகதி பெறுவர மளித்தோம்
பன்னு மஞ்செழுத் துரைத்துமெய்த் தவம்பல பயின்று
பின்னர் சிற்சில நாட்சென்று னம்பதம் பெற்று
மன்னி வாழ்தியென் றருள்புரிந் திலிங்கத்துண் மறைந்தான்.

இறந்த தந்தைதாய் தேவவி மானத்தி லேறிச்
சிறந்த மைந்தன்முன் வந்துநல் வாழ்த்துரை செய்தே
யறந்த ழைந்தவர் வாழ்கயி லாயத்தை யடைந்தார்
துறந்த ஞானிக்கு ஞானியாஞ் சுந்தர னென்பான். (உக)

ஜீத மேவுதண் பொருந்தத்திற் றினந்தினம் படிந்து
பூதி கண்டிகை புனைந்துபஞ் சாக்கரம் புகன்று

நாதன் முக்களாச் சோதியைப் பணிந்துசின் னுளிற்
பேத மின்றிமெய் வெளிதினிற் சிவபதம் பெற்ருன். (௨௨)

கற்ற செல்வர்வாழ் கவுடதே சத்துறை மறையோ
னுற்ற பாதக மோசன மறிந்தவா றுரைத்தோ
முற்று தீவினை வணிகனமுன் புரிந்ததை முழுதுஞ்
சுற்று வார்சடை மாதவத் தீரினிச் சொல்வாம். (௨௩)

முப்பதாவது சுந்தரன் பாவமோசனச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். (௬௭௪)

---

## முப்பதாவது: சுந்தரன்பாவமோசனச்சருக்கச்சுருக்க வசனம்.

மேகம் மழைபொழியும் வளங்குறையாத கவுடதேசத்திலே வேதமுழக்கம் நீங்காத காந்தமாபுரியென்னு நகரிலே செல்வநிறைந்த வற்சகோததிரத்தில் வந்த அரிமித்திரன் என்னும் ஒரு பிராமணன் அன்னதானஞ்செய்து கொண்டிருந்தான். இங்ஙனம் அன்னதானஞ்செய்து நல்லநியமங்களைச் செய்துவரும் நாளையில் சுந்தரனென்னும் ஒரு புத்திரன்பிறந்தான் அப்புத்திரனும் வேதமுதலாகிய கலைகளெல்லாம் பயின்று பின்புபிதாவைப்போலே அன்னதானமுதலிய தருமங்கள் செய்துவந்தான்; அவன் ஒருநாள் தூண்டிலொன்றையெடுத்துத் தடாகத்தின்கண்ணேசென்று அநேக மீன்களைப்பிடித்துக் கொண்டு ஒரு மரத்து நீழலில் வந்திருந்தான். இருக்கும்போது அவ்விடத்திலே வந்தசாரணரோடு கலந்து மகிழ்ந்துபேசிக் காமமேலீட்டால் ஒரு நாடகக்கணிகையுடன் கலந்து தன்னியமங்களை மறந்து மதுபானஞ்செய்து திரிந்து மிகுந்ததிரவியத்தைச் செலவழித்து விட்டான். இது தெரிந்து பிதாவானவன் தன்னிடத்திலுள்ள திரவியங்களையெல்லாம் பூமிக்குள்ளேமறைத்து வைத்தான். பின்னொருநாள் மதுபானஞ்செய்த மயக்கத்தினாலே சுந்தரன் தாசிவீட்டுக்குச் சென்றான் அவள் திரவியமில்லாது வந்த இவனை வெறுத்துக் கோபிக்கவும் உடனே வீட்டுக்கு வந்து திரவியங்களொன்றையுங் காணுமல் அதிககோபங்கொண்டு தன் தகப்பனை வாளாயுதத்தால் இரண்டு துண்டாக வெட்டிக்காமவெறியால் தன்தாயையும் புணருதற்குத் தலைப்பட்டான்.

அது தெரிந்த தாயானவள் தன்னுயிரைத் தானே நாக்கைப்பிடுங்கி மரணஞ் செய்துகொண்டாள். அதன்மேல் மதுமயக்கந்தீரக்கா

மயக்கமுந் தீர்ந்து மனங்கலங்கி அந்தோ என்னபாதகஞ்செய்தோ மென்று வருந்தி விடிவதற்கு முன்னமே சுற்றத்தாரும் பிறரும் அறியாவிதமாகத் தன் மனைக்குள்ளே இருவரையுந்தகனஞ்செய்து செய்யவேண்டிய நியதிகளை முடித்து உடனே நகரத்துக்குவெளியே புறப்பட்டுப்போனான். போம்போது பிரமகத்திதோஷம் வந்து சுந்தரனைப் பிடித்துத் தள்ளியலைப்ப மிகவும்வாடி இப்பாவம் எங்கேபோனற் றொலையுமென்று தீர்த்தயாத்திரை செய்யநினைத்துச் சம்புத்தீவிலுள்ள புண்ணிய தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ்செய்துந் தீராமல் பாவநாசத்தைச்சேர்ந்த பஞ்சக்குரோசத்தெல்லையைச் சேர்தலும் சுந்தரனைப்பிடித்த இரண்டு பிரமகத்திதோஷமும் வெந்துசாம்பராய்ப் போயின. இந்த அற்புதத்தைச் சுந்தரன்கண்டு சந்தோஷித்து நிற்கும்போது பாவநாசத்திலே சென்றால், சகலபாவமும் நீங்கும் மோக்ஷமுங்கிடைக்குமென்று ஒரு அசரீரி சொல்லக்கேட்டு அந்தப்படியே மார்கழிமாதத்து அமாவாசைத்தினத்திலே பாவநாசத்தலத்தில் வந்து வேததீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சந்நிதியிலுள்ள சிவகங்கையிலுந் தீர்த்தமாடிச் சந்நிதிமுன்பு தாமிரபன்னி நதியிலுமூழ்கி முக்களாலிங்கரைத் தோத்திரஞ்செய்து தன்பாவங்களை யெல்லாமொழித்து நின்றான். உடனே சிவபெருமான் இடபாரூடராயெழுந்தருளிவந்து சுந்தரனுக்குக் காட்சிகொடுத்தருளத் தரிசித்துப் பேரானந்தமடைந்து பரவசனாகி வேதமந்திரங்களாலே தோத்திரஞ்செய்து சுவாமீ! அடியேனுடைய பிதாமாதாவுக்குப் பரகதிகொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான் சிவபிரான் அவ்வாறேகேட்டவரங்களைக்கொடுத்துச் சுந்தரனே! பஞ்சாக்ஷரசெபஞ்செய்து பலதவங்களைச்செய்து சிலநாட்சென்று நம்முடைய பதவிக்கு வந்துவாழ்க என்று சொல்லி வயிராசலிங்கத்துள் மறைந்தருளினார். உடனே சுந்தரனுடைய பிதாமாதா ஆகிய இருவரும் தெய்வவிமானத்திலேறிச் சுந்தரன் முன்பு வந்து நின்று வாழ்த்துரை சொல்லிக்கயிலாசத்தையடைந்தனர். சுந்தரனுஞ் சிவபிரான் கட்டளைப்படியே தவம் புரிந்து முக்களாமூர்த்தியைப் பணிந்துசிலநாள் சென்று சிவபதம் பெற்றான். சுந்தரன் பாவமோசனத்தைச்சொன்னோம். இனி வணிகன் பாவமோசனத்தைச்சொல்வோம் முனிவர்களே! கேளுங்களென்று சூதமுனிவர் சொல்லியருளினர்.



# முப்பத்தொன்றாவது: வணிகன் பாவமோசனச் சருக்கம்.

தென்ன வன்கரு ணாகர னுதவிய சேயா
மன்ன னிந்திரத் துய்மினன் வையகம் புரந்து
துன்னு வார்சடை முக்களாச் சோதியைத் தொழுது
நன்ன யந்தரு மந்திரி மொழிவழி நடந்தான். (க)

செருக்கொ ழிந்தைந்து புலன்வழிச் சென்றிடு மாசைப்
பெருக்கொ ழிந்திட மனவயி ராக்கியம் பிறந்தே
யருக்கர் போல்வளர் பன்னிரு மைந்தர்க்கு மாசாந்
திருக்கொ டுத்தனன் மகுடமுஞ் சூட்டினன் சிறப்ப. (உ)

கொழிக்கு மாமனு நீதியாற் குவலயம் புரந்து
செழிக்கு மைந்தர்தஞ் செய்தியும் வீரமுந் தேர்ந்தான்
சுழிக்கும வார்புனற் பொருநையிற் படிந்துடற் சுமையை
யொழிக்கு முக்களாச் சோதியைத் தினம்பணிந் துறைந்தான்.

நித்தி யம்புரி நியதிக ணெறிப்பட வியற்றிப்
பத்தி யாற்பணி முக்களாப் பரம்பர னருளான்
மித்தை வாழ்வென விந்திரத் துய்மினன் வெறுத்துச்
சித்தி பெற்றந்தப் பரகதி வீட்டினைச் சேர்ந்தான். (ச)

புவிபு ரந்தருள் பூபதி யோயின போது
சிவன்வ ழங்குவி மானமு மறைந்ததத் தினத்திற்
குவவு மற்புயப் பன்னிரு வருங்குல வேந்த
ரெவரும் வந்தடி பரவவீற் றிருந்தரு ளெல்லை. (ரு)

வள்ளல் போலருள் பன்னிரு மைந்திரி யாரும்
பிள்ளை யாகிய விமலனுக் கடற்பெருஞ் சூர
முள்ள சித்திர சேனனென் றொருமைந்த னுதித்துத்
துள்ளும் வெஞ்சினப் பகைவென்று தொல்புவி புரந்தான்.

வேத சாத்திரம் பலகற்று வேள்விக ளியற்றி
நீத மாவுல கொருகுடை நீழலி னிறுத்தத்
தீதி லாக்கன தருமங்க ளனுதினஞ் செய்து
பாது காத்துயிர்க் குயிரென வருள்படைத் திருந்தான். (எ)

பழுதி லாநெறிப் பஞ்சவ னூழ்வினைப் பயனு
மிழிவு தாங்கிய மூடர்பொய்ச் சமயத்தி லிறங்கி
வழுவி லாதுசெய் வைதிக வொழுக்கமு மறந்தான்
முழுது மட்டிலாத் திரவிய வாசையின் மூண்டான். (அ)

கேட றிந்திடாச் சனங்களை முழுவதுங் கெடுத்தா
னாடி மூந்தனர் யாருமப் பாண்டிநன் னாட்டிற்
கூடு மாநிதி வணிகனும் விட்டுனு குத்த
னீடு செல்வமு நிதியமு நிருபனு மிழந்தான். (கூ)

சுந்த ரத்திரு மனையொடு மக்களுஞ் சூழச்
சிந்தை நொந்துதே சாந்தரங் களிற்றிரிந் துலைந்து
வந்த வின்னலாற் பிணியுற்று வணிகனு மரித்தா
னிந்து வாணுதன் மனை* யனு மரணஞ்செய் திறந்தாள். (க0)

ஈன்ற தாதையுந் தாயரு மிறந்தபின் னவர்க்குத்
தோன்ற லாமரி குத்தனு மவர்க்குமுன் றோன்று
மான்ற யங்குவாட் கண்ணியு மனத்திடை யழுந்த
வூன்று துன்பொடும் பலியிரந் தூர்தொறுந் திரிந்தார். (கக)

சோழ மண்டலத் திடைச்சென்று சுற்றிய காலை
வேழ மாப்படை நெருக்கினு லிருவரும் வெருவி
யூழ்பி ரித்திடப் பிரிந்தன ரொருவரை யொருவர்
பிழை யுற்றெங்குந் தேடினர் காண்கிலர் பெயர்ந்தார். (கஉ)

தேச மியாவையுந் தனிப்பர தேசியாய்த் திரிந்து
காசி மாநக ரடைந்தனள் வசியர்தங் கன்னி
யாசி லாவரி குத்தனு மப்பதி யடைந்தான்
வாச மாகவங் கிருக்கின்ற காலையோர் வைகல், (கங)

நீண்ட வோர்மடத் திருவரு நேர்சென்று புகுந்தா
ராண்டு பற்பல சென்றதா லின்னரென் றறியா
ரீண்டு மேயநல் லிளமையு மெதிரெதிர் நோக்கிப்
பூண்ட வாசையாற் கலத்தலுண் டானதப் பொழுதில். (கச)

களிசி றந்துநாங் காதலன் காதலி யாகி
யளிசி றந்திருப் போமென வளவளாய்ப் பேசி
யெளிய ளாய்வந்த தேதுநீ யிருப்பதெந் நாடா
முளம கிழ்ந்தநின் றந்தையா ருரையென வுரைப்பாள். (கரு)

* அனுமரணஞ்செய்திறததல் - உடன்கட்டையேறி மறித்தல்.

வழுதி நாட்டுறை விட்டுணு குத்தனும் வணிக
னிழுதை யாயினே னந்தையா மென்னுடன் பிறந்த
குழவி பேரரி குத்தனப் பாண்டியர் கோமான்
பழிசெய் தீங்கினு னிதியையும் பதியையு மிழந்தோம். (கசா)

வேற்று நாடுபுக் கெந்தைதா யின்னுயிர் விடுத்தார்
போற்று வாரின்றி யலைந்துசோ ணாட்டிடைப் போனே
மாற்றல் வெம்படை நெருக்கினு லரிகுத்தன் பிரிந்தா
னேற்ற தம்பியைக் காண்கிலே னிந்நகர் புகுந்தேன். (கஅ)

எனது செய்தியீ துன்செய்தி யுரைத்தரு ளெனலு
மனம யங்கினன் பரவச மடைந்தனன் வணிகன்
கனகொ டுந்துயர்க் கடலிடைக் கலந்ததே தென்று.
ஞனது தம்பிநா னென்செய்தோ மென்றுநெட் டுயிர்த்தான்.

வேறு.

தம்பி நானென்று சாற்றுதல் கேட்டலும்
வெம்பி யேக்குற்று மண்ணிடை வீழ்ந்தன
ளிம்பர் வந்த பலனிது வோவென்று
பம்பு கண்புனல் பாய வரற்றினுள். (கக)

தொலைவி லாத்துய ரக்கடன் மூழ்கியே
நிலைபெ ருத வொருவரு நேர்மையாங்
கலைவ லோர்கரை யேற்றுவ ரோவெனு
மலைவி னுன்முத்தி மண்டபத் தெய்தினர். (உ0)

மொழியும் வேத முழுதுணர்ந் தோர்பதம்
பொழியு மன்பொடும் போற்றியென் முன்வந்தாள்
கழிம யக்கிற் கலப்பக் கலந்ததீங்
கொழியும் வண்ண முரைத்தருள் வீரென்றுன், (உக)

பற்று பாவம் வணிகன் பகைப்பொடுஞ்
சொற்றல் கேட்டு நடுங்கினர் தூயவர்
முற்று தீவினை மோசன மாவதற்
குற்ற தேதென் றுளத்திடை யெண்ணினர். (உஉ)

தீர்த்த யாத்திரை செய்தன ரேலிந்தத்
தூர்த்த பாவந் தொலையுமல் லான்முக்கண்

மூர்த்தி யானிமுன் மொழிபரி காரத்தில்
வார்த்தை வேறில்லை யென்று மதித்தனர். (உங)

காங்கு வத்திரங் கட்டி யிருவருந்
தீங்கி லாப்பல தீர்த்தத்து மாடினு
லோங்கு வெள்ளைபெற் றூட்டிய காங்கெலா
நீங்கி விவ்வினை நீங்கிய தாமென்றார். (உச)

இந்த வண்ண மியற்றுமி னென்றரு
ளந்த ளுள ரடிபணிந் தேகினர்
பந்த மாகிய பாதகம் வேரறச்
சிந்து தீர்த்தங்க ளாடிடச் சிந்தித்தார். (உரு)

கங்கை யாறு யமுனை கனைதிரை
தங்கி யோங்குஞ் சரசு வதிகுகு
துங்க பத்திரி சுக்கிலை பற்குனி
வெங்கொ டும்பவம் வீட்டு கிருட்டினை. (உசா)

சரயூ பமபை தமசை கௌசிகை
கரும நாசினி கண்டகை தாபினி
சுருதி விந்து கிருதச் சுதநதி
யிரசை குல்லியை நந்தை யிரசனி (உஎ)

சத்தி யம்பரை சந்திர பாகைசா
வித்தி ரிப்புனல் காவிரி வெண்மதி
மூத்த மாநதி சொனன முகரிமற்
றெத்தி றத்துள தீர்த்தத்து மெய்தினர். (உஅ)

மூடும் வெம்பவ மூண்ட விருவரு
நீடு காங்குடை மேர்புனைந் தாடினர்
தேடு ஞானத் திருவருள் பெற்றவர்
நாடும் பாவவி நாசத்தி லெய்தினர், (உகு)

சுருதி தீர்த்தமாஞ் சூழித் தலத்திடைப்
பொருனை யாடின ராடும் பொழுதினிற்
பரிவு வாய்ப்பவெம் பர்வமும் போயது
விரிக ருங்கலை வெண்கலை யாயதால். (நூ0)

பொன்பொ ருந்திய புங்கவ ளுதியோர்
மின்பொ ருந்தும விரிசடை வேணியான்

றன்பொ ருந்தத் ததிசய நோக்கினர்
தென்பொ ருந்துமத் தீர்த்தத்தைப் போற்றினர். (ருக)

கறுத்த வாடை வெளுத்தது கண்டனர்
மறுத்து மானந்த வாரியின் மூழ்கினர்
வெறித்து மாயணி வெள்விடை மேற்கொண்டு
நெறித்த புன்சடை நின்மலன் றோன்றினன். (ருஉ)

கங்கை சூடியை விண்ணிடைக் காண்டலு
மங்க மெங்கும் புளக மரும்பினர்
பங்க மாங்கொடும் பாதக நீக்கிய
புங்க வாவென் றிருவரும் போற்றினர். (ருரு.)

அங்க நாங்க ளடைந்தக னுலன்றே
வெங்கு மில்லதாம் பாவ மியற்றினோந்
திங்கள் சூடிய செஞ்சடை யாய்கருத்
தங்கு தோற்றந் தவிர்த்தருள் வாயென்றார். (ருச)

புரமெ ரித்தவ னன்னர் புரம்பெறு
வரம ளித்து மறைந்தன னன்பர்க்குப்
பரம ளித்தருள் பாவவி நாசனைத்
திரம ளிக்குமெய்ஞ் ஞானத்திற் சேவித்தார். (ருரு)

காவி வத்திரங் கட்டி யிருவரும்
பூவி லோங்கும் பொருநையி லாடியே
பாவ நாசனை நித்தம் பணிசெய்து
மாவி சார மொழிந்தங்கு வைகினர். (ருசா)

இந்த வண்ண மிருந்து சிலதின
மூந்து திக்கின்ற மொய்குழ லாளொடு
நிந்தை போயவ் வணிகன்முன் னீங்கிடாப்
பந்த நீக்கிப் பரகதி சேர்ந்தனன். (ருஎ)

இன்னு மிப்படி வந்துவந் தெண்ணிலார்
நன்ன யத்தன் பொருந்தநன் னீர்படிந்
துன்னு பாவ மொழிந்துமெய்ஞ் ஞானமாஞ்
சின்ன மெய்திப் பரகதி சேர்ந்தனர் (ருஅ)

மேய பாவம் விரும்பெவ ரேனுமிப்
பாய தாமிர பன்னியி லோர்தினம்

போய வாவொடும் போற்றிப் படிவரேற்
றீய தீர்ந்து பரகதி சேர்வரால். (ரு௯)

தீங்கு தேடிய செட்டி யொருதினம்
பாங்கி னுடிப் பவமொழித் தானெனி
னீங்கி டாவகை நித்தமு மாடுவோ
ரோங்கு மேன்மை யுரைப்பரி தாகுமால். (சு0)

சாத மாச்செட்டி தன்மை யியம்பினேம்
வரத போதன மாமறை யந்தணீர்
பாத மாடும் பரம்பொரு ளாதிரை
விரத நீதி விளங்க விளம்புவாம். (சுக)

முப்பத்தொன்ருவது வணிகன்பாவமோசனச்சருக்கம்
முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கூ0கரு)

---

## முப்பத்தொன்றவது வணிகன்பாவமோசனச்சருக்கச்சுருக்க வசனம்.

கருணாகரபாண்டியன் புத்திரனாகிய இந்திரத்துய்மினன் செங்கோல்செலுத்தி அரசாட்சிசெய்து முக்களாமூர்த்திதிருவருளால் அத்திரிமுனிவர் வாக்கியப்படியே மனவயிராக்கியத்தாற் பஞ்சப்புலன்களையும் ஒடுக்கி உலகவாழ்வை வெறுத்துத் தன் புத்திரர் பன்னிருவருக்குங் கிரீடந்தரித்துச் செங்கோல் செலுத்திவரச்செய்து விட்டுத் தாமிரபன்னிநதியிலே தினந்தோறுமூழ்கி வயிராசலிங்கப்பெருமானைத்தரிசித்துத் திருவருள்பெற்றுப் பின்பு பரலோகத்தையடைந்தான். அதன்மேல் பன்னிருமைந்தருக்குள் ஆறுவது மைந்தனாகிய விமலபாண்டியனிடத்திலே சித்திரசேனன் என்றொருமைந்தன் பிறந்து உலகத்தைத் தருமசாத்திரத்திற் சொல்லிய முறைதவறாது பாதுகாத்துக்கொண்டுவந்தான்; சிலநாட்சென்று தீவினைப்பயனால் சமண்சமயத்திலே புகுந்து நித்தியகன்ம முதலிய அனுட்டானங்களையெல்லா மறந்து பொருளாசை யதிகரிப்பத் தன்னுடைய நகரத்தினுள்ள குடிகளையெல்லாந் துன்பஞ்செய்து திரவியமுழுவதும் அபகரித்தான் இவனுடைய அநீதியாகிய கொடுங்கோலுக்குப் பயந்து சனங்களெல்லாம் வேறுநாட்டைத்தேடிக் குடி யோனார்கள். அப்

படிப்போனவர்களி லொருவனாகிய விட்டுணுகுத்தனென்னும் வணிகன் தேசாந்தரியாக மனைவிமக்களுடனே யலைந்தான். இப்படி யலைந்து நெடுநாள் சென்றபின் தன் மனைவியோடு தானும் ஆயுள்முடிய மரணமடைந்தான். அவன் புத்திரனாகிய அரிகுத்தன் தனக்குமுன் பிறந்த தமக்கையுடனே ஊர்தோறும் பிச்சையேற்று வயிறுவளர்த்துச்சென்று சோழதேசத்திலே திரியும்போது ஒருநாள் அங்குள்ள யானைப்படை நெருக்கினாலே தன்தமக்கையைப் பிரிந்துவிட்டான். தமக்கையுந் தன் தம்பியைத்தேடி யெங்குங்காணாமல் பிரிந்துபோனாள்; இவ்விதம் ஒருவரையொருவர் தேடித்தேடிப் பாதவித்துப் பற்பல வூர்தோறுஞ் சஞ்சரித்துத் திரிந்தார்கள்.

நெடுங்காலஞ்சென்று முத்திநகரங்களு ளொன்றாகிய காசிக்ஷேத்திரத்தை ஒருவரையொருவர் அறியாதுசென்று சிலநாள் வசிக்கும்போது ஒருநாள் ஒருமடத்திலே யிருவரும்வந்து சந்தித்திருந்து, நீண்டகாலமானதாலே தங்களைத் தெரியாமல் காமம் அதிகரித்து ஆசையுற்றுப் புணர்ச்சிசெய்து களிப்புற்று நாமிருவரு மினி நாயகனும் நாயகியுமாக மணந்துகொள்வோமென்று பேசி ஒருவரையொருவர் இனம்விசாரிக்கத் தொடங்கும்போது தங்களுண்மை வெளிப்படுதலும், அரிகுத்தன் மனங்கலங்கி ஐயையோ என்ன நினைந்து என்னபாதகஞ் செய்தோமென்று பெருமூச்சுவிட்டு நிலைகுலைந்து பலவாறு பிதற்றி அங்குள்ள முத்திமண்டபத்தையடைந்து நான்குவேதங்களு முணர்ந்த முனிவர்களை வணங்கித் தங்களுக்கு வந்த குறையையெடுத்துச்சொல்லி இந்தப்பாவம் நீங்குதற்குப் பிராயச்சித்தம் ஏதாவது சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தலும், அம்முனிவர்கள் சொல்லுவார்கள். இக்கொடியபாதகம் தீர்த்தயாத்திரை செய்தாலொழியத் தீராது. ஆதலால் நீங்களிருவரும் கருநிறமுள்ள வஸ்திரங் கட்டிக்கொண்டு புண்ணியநதிகளிலெல்லாஞ் சென்று ஸ்நானஞ் செய்யவேண்டும். எந்தநதியிலே கறுப்புநிற மாறி வெள்ளைநிறம் வஸ்திரத்திலே வருமோ? அந்தநதியாலே யுங்கள் பாவமுந் தீருமென்று சொன்னார்கள். உடனே அந்த இருவரும் கறுப்புவஸ்திரந் தரித்துகொண்டு தீர்த்தயாத்திரை செய்யத் தொடங்கிக் கங்காநதி, யமுனை, சுரசுவதி, குரு, துங்கபத்திரி, சுக்கிலை, பற்குனி, கிருட்டிணை, சரயு, பம்பை, தமசை, கௌசிகை, நாசினி, கண்டகை, தாபினி, சுருதிவிந்து முதலிய அநேகபுண்ணியநதிகளிலே தீர்த்தமாடியும் பாவநீங்காமல் அப்பாற்சென்று வேத

தீர்த்தஞ் சூழப்பட்ட பாவநாசத்தையடைந்து சந்நிதியிலுள்ள தாமிரபன்னி நதியிலே மூழ்கியெழுந்தார்கள். எழுந்தவுடனே வஸ்திரங் கருநிறமாறி வெண்ணிறமுற்றிருந்ததைப்பார்த்து மனமகிழ்ந்து தங்கள் பாவமும் போயது என்று பரவசமடைந்து அங்குள்ளாரெல்லாம் பார்த்து அதிசயிப்ப ஆனந்தவாரியிலே தோய்ந்து தாமிரபூன்னி நதியைத் துதித்து வணங்கினின்றார்.

அப்போது பாவநாசத்தி லெழுந்தருளிய சிவபெருமான் கருணைகூர்ந்து ரிடபாரூடரா யெழுந்தருளித் தரிசனங் கொடுத்தனர். உடனே அவ்விருவரும் வணங்கிச் சரீரமெங்கும் புளகாங்கிதங் கொள்ளத் துதித்துச் சுவாமீ! எங்களுக்கு இந்தச்சரீரம் இருந்ததனாலன்றோ? கொடியபாதகஞ்செய்து வருத்தமுற்றோம். ஆதலால்இன்னமும் ஒருசரீரத்தையெடுத்தலையாத வரங்கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தலும், சிவபிரான் கருணை மிகுதியினாலே அவ்வரத்தைத் தந்தருளி மறைந்துசென்றார். அதன்மேல் இருவரும் காவிவஸ்திரந் தரித்துக்கொண்டு தினந்தோறுந் தாமிரபன்னி நதியிலே ஸ்நானஞ்செய்து முக்களாமுதல்வனைத் தரிசித்திருந்து சில நாள் சென்றபின் பரகதியையடைந்தார்கள். எவ்வளவு பாவஞ் செய்தவர்களாயிருந்தாலும் இந்தத் தாமிரபன்னியிலே ஒருதரம் ஸ்நானஞ்செய்வாராகில் அப்போதே யெல்லாப்பாவங்களுமொழிந்து விடும். இந்நதியின் பெருமையை யாராலே சொல்லமுடியும் இனித்திருவாதிரை விரதமான்மியத்தைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று சூதமுனிவர் மற்றை முனிவர்களுக்குக் கூறினார்.



## முப்பத்திரண்டாவது: திருவாதிரை விரதச்சருக்கம்.



நம்பனைக் கணவனாகப் படைத்தற்கு நந்து முன்னா
ளம்பிகை நோற்றுப் பெற்ற வாதிரை விரதந் தன்னை
நிம்பமா மாலைக் கோமானேரிலமை நோற்றா ளியார்க்கும்
தம்பமாம் விரத நோற்குந் தன்மையை யெடுத்துச் சொல்வாம்.

மார்கழி மாதந் தன்னின் மருவுசுக் கிரவா ரத்தி
னேர்பெறு சதைய நாளி னுதயத்தி னிறைநீ ராடிச்

சீர்பெறு நியமஞ் செய்து திகழ்மத கரட மால்வாய்ப்
போர்மருப் புடைய தேவை யுவப்பொடும் பூசை செய்து. (௨)

உம்பர்கோன் வணங்கிப் போற்று முமாமகே சுரனு மென்ன
விம்பவாய் மனையா ளோடும் வேதியன் றனைப்பா வித்துத்
தம்பதி பூசை செய்து தனிப்பணி யாடை யன்னம்
வம்புலாந் தொடைதாம் பூலம் வழங்குதக் கணையு நல்கி. (௩)

இருவரு மகிழ்ந்த பின்ன ரிறைஞ்சிவர் தேக வாரம்
பொருவிறன் கிளையி னோடும் போசனஞ் செய்து பின்னர்த்
தருபரி யங்க நீத்துத் தனிப்படச் சயனஞ் செய்து
பரமர்தந் திருநா மங்கள் பலபட நவின்று போற்றி. (௪)

பூரண வாயு ளெய்திப் புருடன்வீற் றிருக்க வென்று
காரணி குழலாள் சிந்தித் திருக்கவிக் கற்ப நாளு
மார்வமுற் றியம்பிப் பின்ன ராதிரை வந்த நாளிற்
சூரிய னுதிக்கு முன்னர்த் தூயநன் னதியி லாடி. (௫)

தெண்ணிலா வணிந்த சோதி திருநடஞ் சேவை செய்து
புண்ணிய விரதந் தன்னை முடித்தற்கு மனையிற் போந்தங்
குண்ணெகிழ் மகிழ்ச்சி யோடுங் கணவனுக் குரைப்ப வன்னோ
வண்ணவே திகைசேர் பூசா மண்டபந் தன்னி லெய்தி. [ன்

பட்டினு லலங்க ரித்துப் பசுங்கரும் பரம்பை நாட்டி
வட்டவே திகையி லிட்ட தண்டுல மண்ட லத்தி
லெட்டிதழ்க் கமலங் கீறி யிழைக்கலை மடித்து வைத்துச்
சிட்டர்சூழ் வுறவி ருந்து சிறந்தசங் கற்பஞ் செய்து. (எ

அடைவிலா தார சத்தி யாதியா தனங்கற் பித்துப்
படவர வணிந்த சோதி பரைதிரு வுருவந் தீட்டித்
திடமுறச் செம்பொ னாலே செய்பிர திமைக டம்மைக்
கடவுளர் மகிழப் பஞ்ச கவ்விய முதல வாட்டி. (அ)

பீடவெண் மடிப்பில் வைத்துப் பின்னரா வாக னாதி
சோடச வுபசா ரத்தாற் சோதியைப் பரையைப் பூசை
யேடலர் மலராற் போற்றி யிறைவன்முன் விதிவ ழாம
னீடுகுண் டத்தி னுப்ப ணெறிப்பட வங்கி யோம்பி. (௯)

பாயதத் தாலு முற்ற பசுவினெய் யாலும் வெவ்வே
றுயிரத் தெட்டென் றாலு நூற்றெட்டென் றாலு மோம

மேயவஞ் செழுத்தாற் செய்து விதிப்படி முடித்துத் தந்தை
தாயுமா முமாம கேசர் தமையுளத் தொடுக்கிக் கொண்டு. (கo)

சிட்டராம் பூசு ரர்க்குத் திகழ்பிர திமைக ளோடு
மிட்டதண் டுலம்வெள் ளாடை யென்பன தானஞ் செய்து
மட்டிலா மறைவல் லோர்கள் வாய்ந்ததம் பதிக ளியார்க்குங்
கட்டியா னறுசெய் யன்ன மளித்துளங் களித்த பின்னர். ()

பாசனத் தோடுங் கூடப் பாங்குறு மனையு ளெய்திப்
போசனஞ் செய்த காலைப் பாரிதன் பூமான் றன்னை
யூசலின் மேல்வைத் தாட்டி மகிழ்விக்க வுரைக்கு மிந்த
வாசிலா விரத மாதந் தோறுமிவ் வாறு செய்க. (கஉ)

மதிதொறுங் கூடா விட்டான் மார்கழி யாதி ரைக்கண்
விதிவழா துவந்து நோற்க விரும்பியிவ் விரத நோற்று
லதிசயாக் கியங்க ளுண்டா மாண்டுபன் னொன்று சென்றூற்
றுதிசெய்மார் கழியின் முன்போற் சுருதியாய் விரதநோற்று.

ஆசற்ற விரத வுத்தி யாபனம் விதிவ ழாது
பூசத்தின் முடிக்க விந்தப் புண்ணிய விரதந் தன்னைத்
தேசுற்ற கீர்த்தி வாய்த்த தென்னவன் மனைவி நோற்று
மாசற்ற புதல்வர்ப் பெற்றா ளாங்கது வகுத்துச் சொல்வாம்.

வேறு.

இந்திரத் துய்மின னென்னும் பாண்டியன்
றந்தருள் புண்ணிய கீர்த்தி தன்வழி
வந்தவேன் மன்னவ னெனும காளுயர்
புந்திகூர்ந் திருநிலம் புரக்கு மேல்வையில். (கரு)

சீலமும் வீரமுந் திருவு மோங்கிய
பாலனை யடைதற்குப் பாவ நாசத்தில்
வாலவெண் பிறைநுதன் மனைவி தன்னொடும்
வேலர சாயினான் விருப்பி னெய்தினன். (கசு)

பாயதண் பொருந்தத்திற் படிந்து முக்களாத்
தூயவெண் மதிமுடிச் சுடரைப் பூசித்துத்
தீயவைம் புலன்வழி மனஞ்செ லுத்திடா
தேயுநல் விரதங்க ளியற்றி வைகினான். (கஎ)

பழங்கணற் றகமகிழ் பாண்டி மன்னன்முன்
முழங்கியாழ் நாரத முனிவ னெய்தினா

ணழுங்கும்வெந் துயர்தவிர்த் தகத்து வேட்டது
வழங்கவந் தனமென வடிவ ணங்கினன். (கஅ)

ஆதனங் கொடுத்துநின் றருக்கி யாதியாற்
சீதள மலர்கொண்டு பூசை செய்தனன்
மாதவ விங்குநீ வரப்பெற் றேனினி
யேதம்விட் டொழிந்தன னென்று வாழ்த்தினன். (கக)

தென்னவன் சிந்தனை தெளிந்து யாழ்முனி
பன்னரு மாதிரை விரதப் பான்மையை
மன்னனுக் குரைத்துநின் மனைவி நோற்குங்காற்
பின்னமில் பலமகப் பேறுண் டென்றனன். (உ0)

அருந்தவ னிவ்வகை யருளிச் செய்துதன்
றிருந்துல கடைந்தனன் செழிய னில்லவள்
வருந்தனி விரதந்தான் வருட மேழுநான்
கிருந்துபின் முடித்தனண் மகிழ்ச்சி யெய்தினள். (உக)

கிளைப்படு முக்களாக் கேடில் சோதியைக்
களிப்பொடு பரவலுங் கடவு டோன்றியே
யளப்பரும் புதல்வரை யடைந்து வாழ்கெனத்
திளைத்திடும் பேரருள் செய்து நீங்கினன். (உஉ)

பாவவி நாசனைப் பணிந்து மன்னவன்
றேவியுந் தானுமா மகோதை சென்றெய்திப்
பூவுல கெங்கணும் புரக்கு மேல்வையிற்
காவலன் மனையவள் கருப்ப மெய்தினள். (உங)

அண்டரை யதிதிமுன் னளித்த தன்மைபோன்
மண்டலம் புரந்தரு ளளவின் மைந்தரைக்
கொண்டதன் னவயந் தோறுங் கோதிலா
வொண்டொடி யுத்தமி யுவந்து பெற்றனள். (உ௪)

சிறுவரைப் பெறுதலாற் றென்ன னுத்தமி
மறுவறு நலம்பெற்று மகிழ்ந்து வாழ்ந்தன
ருறுதியிவ் விரதத்தை யுவந்து நோற்றபேர்
பெறுபல னெடுத்தெம்மாற் பேசத் தக்கதோ. (உரு)

ஈமுறு மாதிரை விரதங் கற்பநூ
லாமுறை யுணர்ந்தவா றறியக் கூறினு

மாமறை யந்தணீர் வந்த வாறினிச்
சோமவா ரத்தின விரதஞ் சொல்லுவாம். (உசு)

முப்பத்திரண்டாவது திருவாதிரை விரதச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கூசக).

---

## முப்பத்திரண்டாவது திருவாதிரைவிரதச்சருக்கச் சுருக்கவசனம்.

பூருவகாலத்திலே உமாதேவியார் தமக்குப் பரமேசுரன் நாயகனுவதற்குச் செய்த திருவாதிரை விரதத்தைப் பாண்டியராசன் பத்தினி செய்துமுடித்தாள். அவ்விரதஞ்செய்யு முறையைச் சொல்லுவாம். மார்கழிமாதத்திலே சுக்கிலபக்ஷத்தில் வருஞ் சதைய நக்ஷத்திரத்தன்று காலையிலே ஸ்நானஞ்செய்து நித்தியகன்ம முடித்து விநாயகரைப் பூசித்துப் பின்பு மனையாளோடுகூடிய ஒருபிராமணனை உமாமகேசுரனுகப் பாவித்துத் தம்பதி பூசைசெய்து அன்னம், வஸ்திரம், ஆபரணம், மாலை, தாம்பூலம் ஆதியதக்ஷிணைகொடுத்து மகிழ்வித்து வணங்கி யனுப்பிவிட்டு அப்பாற் றன்சுற்றத்தாரோடும் போசனஞ்செய்து தரையிலே தனியே சயனித்துச் சிவநாமங்கள் பலவற்றையு முச்சரித்து வணங்கித் தன்னுயகன் பூரண ஆயுளெய்தியிருக்கவேண்டுமென்று மனைவி தியானித்துக்கொண்டிருந்து பின்பு திருவாதிரை வந்தநாளிற் சூரியனுதிக்குமுன்னெழுந்து ஸ்நானஞ்செய்து நடராசாவைத் தரிசனஞ்செய்துவந்து விரதத்தை முடிப்பதற்குத் தன்னுயகனிடந் தெரிவித்துப் பூசாமண்டபத்தைப் பட்டினுலும் வாழைகரும்பினுலு மலங்காரஞ்செய்து வேதிகையிலே பரப்பிய பச்சரிசியிலே எட்டிதழோடுகூடிய தாமரைப்பூவையெழுதி அதன்மேலே புதிய வத்திரத்தை மடித்துவைத்துப் பெரியோர்கள் சூழ இருந்து சங்கற்பஞ்செய்து ஆதாரசத்தி முதலிய ஆதனங்கற்பித்துப் பொன்னுலே உமாமகேசுர வடிவமாகச்செய்த பிரதிமைகளைப் பஞ்சகௌவிய முதலாகிய அபிடேகஞ் செய்வித்து மடித்துவைத்த வஸ்திரத்திலே வைத்து ஆவாகனுதி சோடசவுபசாரத்தாலே பூசைசெய்து பலமலர்களாலும் அருச்சித்துக் குண்டத்தினடுவே அக்கினிகாரியஞ்செய்து பாயசத்தாலும் பசுவினெய்யாலும் ஆயிரத்தெட்டாவது நூற்றெட்டாவது பஞ்சாக்ஷரஞ்செபித்து விதிப்படி ஆகுதிசெய்துமுடித்து உமாமகேசுரரை யுள்ளத்திலே யொடுக்

கிக்கொண்டு பிரமதிமைகளைத் தண்டுல முதலாயவைகளுடன் உயர்ந்தவேதியருக்குத் தானஞ்செய்து வேதந்தெளிந்த வேதியர்கள் யாவர்க்கும் அன்னதானஞ்செய்து பின்பு சுற்றத்தாருடனே போசனஞ்செய்து அதன்மேலே தன்னுடைய நாயகனை ஊசலிலேவைத்து ஆட்டி மகிழ்விக்கவேண்டும். இந்த விரத மாதந்தோறுஞ் செய்யவேண்டும், அதுகூடாவிட்டால் மார்கழிமாதமாவது செய்யவேண்டும். விதிதவருது இந்த விரதஞ்செய்தால் உயர்ந்த பாக்கியங்களுண்டாகும். இவ்விதம் பதினொருவருடஞ் சென்றால் பன்னிரண்டாம் வருடத்து மார்கழிமாதம் முன்போலவே விரதம் அநுட்டித்துப் பூசநக்ஷத்திரத்திலே உத்தியாபனஞ்செய்யவேண்டும்.

முன்னொருகாலத்தில் இந்திரத்துய்மினன்மைந்தனுகிய புண்ணியகீர்த்தி வம்மிசத்திலேதோன்றிய மகாற்மா என்னும் பாண்டியன் தன் மனைவியுடனே பாவநாசத்தலத்திலேவந்து தாமிரைபன்னிநதியிலே மூழ்கியெழுந்து முக்களாமூர்த்தியைத் தரிசனஞ்செய்து ஐம்புலனையும் ஒடுக்கிப் புத்திரனை விரும்பி நல்லவிரததவங்களைச் செய்துகொண்டிருந்தான். அந்தச் சமையத்தில் நாரதமுனிவரங்கேயெழுந்தருளினர். அரசன் அவரை உபசரித்து வணங்கிநிற்ப முனிவர் அரசன்கருத்தை யுணர்ந்து திருவாதிரை விரதமான்மியத்தையெடுத்துக்கூறி இவ்விரதத்தை உன்னுடைய மனைவி அநுட்டித்தால் அநேகம் புத்திரப்பேறுண்டாமென்று சொல்லிவிட்டுத் தமதிடத்துக்குச் சென்றார். அப்பால் அரசன் மனைவி திருவாதிரை விரதம் விதிப்படி பதினொருவருடமிருந்து பன்னிரண்டாவது வருடத்திலே உத்தியாபனஞ் செய்துமுடித்து வயிராசலிங்கப் பெருமானை வணங்கலும் அப்பெருமான் எதிரெழுந்தருளி அநேகம் புத்திரரைப்பெறுக என்று வரங்கொடுக்க அவ்வரத்தை வாங்கிக்கொண்டு அரசனும் மனைவியும் தங்கள் பட்டணத்தையடைந்து பலபுத்திரர்களைப்பெற்று மகிழ்ச்சியோடு வாழ்ந்திருந்தார்கள். இந்த விரதத்தின் மான்மியம் எம்மாற் பேசத்தக்கதோ? இனிமேல் முனிவர்களே! சோமவார விரதத்தின்மேன்மையை யெடுத்துச்சொல்லுவோமென்று சூதமுனிவர் அருளிச்செய்தனர்.

## முப்பத்திமூன்றாவது: சோமவாரவிரதச் சருக்கம்.

கற்பநா லெடுத்துக் கூறுங் கார்த்திகை மாதந் தன்னின்
முற்படு சோம வாரத் தினத்திடை நியதி முற்றி
யற்புத மாகப் பூசா மண்டப மலங்க ரித்துச்
சிற்பரப் பொருளை நோக்கிப் பிரார்த்தனை செய்து கொண்டு.

மறையவ ரெண்மர் தத்த மனைவிய ருடனி ருந்து
குறைவறு புண்ணி யாகஞ் செய்தபின் கும்பந் தன்னி
லிறைமைசே ருமாம கேசர் பூசனை யியற்றிப் பின்ன
ருறைதரு கும்ப மூர்த்திக் குத்தரத் தனலுண் டாக்கி. (உ)

கன்னலந் துண்டத் தாலுங் கட்டியு நெய்யுங் கூட்டித்
துன்னிய நாளி கேரத் துண்டங்க ளாலும் பூவின்
மன்னிய மதுவி னாலும் வாழைமென் கனியி னாலும்
பின்னரா னெய்யி னாலும் பிறங்குபா யசத்தி னாலும். (ங)

நுண்ணிய வெள்ளி னாலு நூற்றெட்டு நூற்றெட் டாக [து
வெண்ணுமஞ் செழுத்தால் வெவ்வேறோமங்களியல்பாச்செய்
கண்ணுதல் பூசை யோமங் களிப்புடன் முடித்து நீங்கா
வுண்ணிக ழான்பா லன்னம்வேதியர்க் குதவி செய்து. (ச)

தானுப வசியாய்க் கங்குற் சாமங்க ளானு மோமம்
பானுநேத் திரத்தான் பூசை பகர்ந்தவிப் படியே யாற்றி
யூனமின் மற்றை நாளி லுரைக்குநித் தியமுன் செய்து
மானுறு கரத்தான் பூசை யோமமிவ் வகையே செய்து. (ரு)

பூசையை முடித்துப் பின்பு தம்பதி பூசை செய்து
தேசுறு சததா னங்கள் சிவலிங்க தானஞ் செய்து
மாசிலா மறையோர்க் கன்னந் தக்கணை கொடுத்து வாய்ந்த
பாசனத் தோடுங் கூடப் பாரணஞ் செய்க மாதோ. (சு)

இன்னணம் வாரந் தோறு மியற்றியே மேட மாத
முன்னுறு சோம வார விரதத்தை முடிக்க வன்றிப்
பன்னுதன் வாணுண் மட்டும் பழுதற நோற்றல் பாங்கா
முன்னரிவ் விரத நோற்றுக் கதிபெற்ற முறைமைசொல்வாம்.

## வேறு.

செல்வ மல்கிய கோசல தேசத்தின்
மல்கு சூடா மணிநகர் வாழ்வினக்
கல்வி சேர்சிவ தத்தன் கனமறைத்
தொல்கு லத்தின னுகம சூட்சியான். (அ)

அந்த மாமறை யந்தண னீன்றருண்
மைந்த னுமணி மாவெனு நாமத்தான்
குந்தி யோடுங் குழவிப் பருவத்தே
யிந்து வார்சடை யேந்தலைப் போற்றுவான். (கூ)

சோம வாரந் தொறுநிசி காலத்துச்
சாம நான்கினுந் தாணுவைப் பூசித்துக்
காம ருண்டி யுறக்கமுங் கைவிட்டுத்
தீமை யற்றவன் பாரணஞ் செய்வனால். (கு0)

அற்ற மின்றி நியமங்க ளாற்றலாற்
பற்று முற்றும் பரனிடம் வைத்தலாற்
குற்ற மற்ற குழவியைக் காண்டொறுங்
கற்ற மாந்தரு முள்ளங் களிப்பரால். (கக)

பொருவின் மேருப் புறநின்று மெய்த்தவத்
தொருமை பெற்ற வுரோமச மாமுனி
தரும வான்சிவ தத்தன் மனையிடைப்
பெருமை வாய்ந்து பிறங்கிட வெய்தினன். (கஉ)

போந்த மாதவன் பொன்னடித் தாமரை
சாந்த னுஞ்சிவ தத்தன் பணிந்தெழூஉந்
தேய்ந்த வாதன மிட்டங் கிருத்தியே
வாய்ந்த வாச மலர்கொண்டு பூசித்தான். (கங)

வழுத்தும் வேதியன் மாமுக நோக்கிநீ
செழித்த ஞானச் சிறுவனை யெய்தலாற்
றழைத்த சீர்நின் மகிமையைச் சாற்றுங்காற்
செழித்த சேடற்குஞ் செப்பரி தாமென்றான். (கச)

மாமை கூர்மணி மானை மடியில் வைத்
தோம வாசஞ்செய் யீசனுக் கேற்றதாஞ்
சோம வார விரதத்தின் சூட்சியை
யாமிவ் வாலையி லெங்கறிந் தாயையா. (கரு)

வான கத்துன் மகத்துவங் கேட்டன
ஞான மைந்தனிற் காண்டற்கு நாடினே
மேன்மை பெற்ற விரத மறிந்தவா
றான மற்றவ கூறென வோதுவான். (கசு)

வேறு.

பன்னு முன்னுறு பிறப்பினிற் பாண்டிநா டளிக்கு
மன்ன னிந்திரத் துய்மினன் மதலையா யுதித்துப்
பின்னர் நான்சுதன் மாவெனும் பெயரணை திருந்தே
னன்ன காலையென் குலஞ்செய்த வருந்தவப் பயனால். (கஎ)

தாவி லாததத் தாத்திரை யத்தவக் குரிசி
லோவி லன்பொடும் வந்தன ஞதன முதவித்
தேவ பூசனை செய்தடி பணிந்தனன் சிறியேன்
பூவி லோங்குமிவ் விரதத்தை யெனக்கருள் புரிந்தான். (கஅ)

பெருமை சேர்தவ முனிவனைக் காணநான் பெறலா
லரிய தாஞ்சிவ ஞானமு மடைந்தன னடியேன்
திரிவி லாதவிவ் விரதமுந் தீங்கற நோற்றுக்
கரியு ரித்தவ னருள்பெற்றுக் கயிலைசென் றடைந்தேன். (கசு)

கயிலை யிற்பதி னாயிரம் பிரமகற் பங்க
ளியல்பு பெற்றசா ரூபம்பெற் றினிதுற விருந்தேன்
முயலு முற்பிறப் பறிவொடு முத்தியை யடைவான்
பயிலு நான்மறைப் பார்ப்பன வருணத்திற் பிறந்தேன். (உ0)

கருணை முக்களாக் கடவுளைப் பணிந்தத னாலும்
பரவு தெண்டிரைப் பொருநையிற் படிந்தத னாலு
மருமறைத்தவ முனியுப தேசத்தி னாலும்
பெருமை தங்கிய குலத்தில்வந் துதித்திடப் பெற்றேன். (உக)

பால லோசன னருளின்முன் பழகிய திறத்தால்
வாலை தன்னிலிவ் விரதத்தை யனுட்டித்து வந்தேன்
சீல மெய்த்தவ நின்பத சேவையும் பெற்றேன்
மேலு மேழையே னெய்துவன் வீடெளி தென்றான். (உஉ)

உரைத்த பாலகன் மாற்றங்கேட் டுரோமச முனிவன்
பரித்த தன்றவப் பலஞ்சில வவனுக்குக் கொடுத்துக்
கருத்தில் வேட்டது நீபெறக் கடவதென் றுரைத்து
விரித்த வார்சடை மாதவன் விண்ணிடைப் போனான். (உங)

உழுவை யீருரி யுடைபுனை நாதனை யுவந்து
தொழுது மேம்படுஞ் சோமவா ரத்தினக் தோறும்
பழுது றுமலிவ் விரதநோற் றிருந்தவப் பலத்தா
லழிவி லாத்தனி யானந்த வீடுசென் றடைந்தான். (உ௪)

ஆகை யாலிந்த விரதத்தை யநுட்டிக்கப் பெறுவோர்
சோக நீடிய தீவினைத் தொடக்கின ரேனுஞ்
சாக ரப்பிறப் பொழித்திரு வினையையுந் தள்ளிச்
சேக ரத்தில்வெண் பிறையணிந் தவர்பதஞ் சேர்வார். (உ௫)

வறிய ராயிந்த விரதத்தை யநுட்டிக்க வகையற்
றறமெ லிந்தவ ருண்டிநித் திரையன்றைக் ககற்றி
நிறைப ரம்பொருள் சந்நிதி நீங்கிடா திருந்து
சிறுமை தீர்ந்திட மறுதினம் பாரணஞ் செய்தால். (உ௬)

புந்தி கூர்தரப் புத்தியு முத்தியும் பூண்பா
ரிந்து வாரநல் விரதத்தின் மகத்துவ மெளிதோ
வந்த வாறுமேற் சுக்கிர வாரமாம் விரத
முந்து தீங்கற வநுட்டிக்கு முறைமையை மொழிவாம். (உ௭)

முப்பத்துமூன்றாவது சோமவார விரதச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (௧௬அ).

---

### முப்பத்துமூன்றவது சோமவாரவிரதச்சருக்கச்சுருக்க வசனம்.

கற்பநூலெடுத்துச் சொல்லும் விதிப்படி கார்த்திகைமாதத்து முதற் சோமவாரத்திலே நித்தியகன்ம முடித்துப் பூசாமண்டபமலங் கரித்துப் புண்ணியாவாகஞ் செய்தபின் கும்பத்திலே உமாமகேசுர பூசனைசெய்து பின்பு கும்பத்துக்கு வடதிசையிலே ஓமகுண்டம் உண்டுபண்ணிக் கரும்புத்துண்டினாலுஞ் சருக்கரையினாலும் நெய்யி னாலும் தேங்காய்க்கீற்றினாலும் தேனாலும், வாழைக்கனியினாலும் பாயசத்தாலும் எள்ளினாலும் வகைக்கு நூற்றெட்டு நூற்றெட்டு,பஞ் சாக்ஷரமந்திரத்தால் ஓமங்கள்செய்து சிவபிரான் பூசைமுடித்து வே தியர்க்குப் பாலும் அன்னமுங்கொடுத்துத் தான் உபவசியாயிருந்து இராத்திரி நான்குசாமமும் இந்தப்படி பூசைசெய்து மறுநாள் உதயத் தில் நித்தியகன்மமுடித்துச் சிவபூசையும் ஓமமும் அவ்வாறேசெ ய்து பின்பு தம்பதிபூசைசெய்து சத்தானங்களுஞ் சிவலிங்கதானி

முஞ்செய்து குற்றமில்லாத பிராமணர்களுக்கு அன்னதானஞ்செய்து தக்ஷிணைகொடுத்துச் சுற்றத்தாரோடு பாரணஞ்செய்யவேண்டும் இவ்விதம் வாரந்தோறும் இவ்விரதத்தைச்செய்து முடித்துச் சித்திரைமாசத்து முதற் சோமவாரத்திலே உத்தியாபானஞ்செய்ய வேண்டும். இவ்விதமன்றிச் சரீரமிருக்கு மளவும் இந்த விரதத்தை இம்முறை அநுட்டிக்கலாம் இந்த விரதத்தைக் கோசலதேசத்திலே சூடாமணி நகரத்திலே வசிக்கும் சிவதத்தனென்னும் பிராமணனுடைய புத்திரனாகிய மணிமானென்னும் பேரையுடையவன் குழந்தைப் பருவத்திலே விதிப்படி இந்தவிரதத்தை அநுட்டித்தான். இப்படியநுட்டிக்குங்காலத்திலே உரோமசமுனிவர் அவ்விடத்துக்குவந்தார். உடனேசிவதத்தனும் மணிமானும் வணங்கியுபசரித்துச் சுவாமீ! இங்கெழுந்தருளியது யாதுகாரணமென்று தோத்திரஞ்செய்தலும் முனிவர் சொல்லுவார்.

உங்களில் மணிமானென்பவன் செய்யும் சோமவாரவிரதத்தின் மேன்மையைத் தேவருலகத்திலே விசாரித்து வந்தேன். இவ்விரதத்தினுண்மையை இந்தச்சிறு பிராயத்திலே யெவ்வாறு தெரிந்தாயென்று கேட்க, மணிமானென்னுங் குழந்தை சொல்லுவான் முற்சென்மத்திலே பாண்டி நாட்டிலே இந்திரத்துய்மினனென்னும் பாண்டியராசனுக்குப் புத்திரனாகப்பிறந்து சுதன்மாவென்னும் பெயரையடைந்திருந்தேன் அப்போது தத்தாத்திரயமாமுனிவர் வரவுதெரிந்து அவரைவிதிப்படி பூசித்துவணங்கி நின்றேன். அம்முனிவரிந்தவிரதத்தை யெனக்குபதேசித்தருளினார் உடனே அம்முனிவரது தரிசனத்தினாலுஞ் சிவஞானம்பெற்றிருத்தலானும் தாமிரபன்னியிலே தீர்த்தமாடிய பலத்தினாலும் அங்குள்ள பாவநாசத்தில்லெழுந்தருளிய முக்களாமூர்த்தி திருவருள்பெற்றுத் திருக்கயிலாசமலையை யடைந்து பதினாயிரம் பிரமகற்பகாலஞ் சிவசாரூபம் பெற்றிருந்தேன். முற்சன்மத்தின் அறிவுடனே முத்தியையடையும் பொருட்டுப்பிராமணவருணத்திலே யிங்கேவந்துபிறந்தேன். ஆதலாற்பழைய சென்மவாசனைப்பலத்தா லிந்தவிரதத்தை அநுட்டித்து வந்தேன் சுவாமீ! உம்முடைய தரிசனமுங்கிடைக்கப் பெற்றேன் மேலுமினிமோக்ஷவீட்டையெளிதினடைவே னென்றான்.

உரோமசமுனிவர் கேட்டுச்சந்தோஷித்துத் தம்முடைய தவப்பலத்திலே சிறிதுபாகம் அவனுக்குக்கொடுத்து நீ நினைத்தவையெல்

லாங் கைகூடுமென்று ஒருவாமுந்தந்து தமதாச்சிரமத்திற்குப்போயி னர். மணிமானும் சோமவாரவிரதத்தை அநுட்டித்திருந்து சிலநாட்செ ன்று மோக்ஷத்தையடைந்தான். இந்தவிரதத்தை அநுட்டிப்பவர் எப்படிப்பட்ட பாதகராயினுஞ் சிவபதஞ்சேர்ந்திரும்பார்; ஆதலாலே இந்தவிரதமியற்றுதற்குத் திரவிய சகாயமில்லாதவரா யிருந்தால் ஆகாரம் நித்திரை இவ்விரண்டையும் அன்றைக்காவது நீக்கிச் சிவ பிரான்சந்நிதி நீங்காதிருந்து தரிசித்துமறுதினம் காலையிலேபாரணஞ் செய்தால் புத்தியும் முத்தியுஞ்சேருவர். சோமவாரவிரத மான்மியஞ் சொன்னோம் இனிச்சுக்கிரவார விரதத்தின் மகிமையைச்சொல்லு வோமென்று சூதமுனிவர் மற்றைமுனிவர்க்குக் கூறினர்.



## முப்பத்துநான்காவது: சுக்கிரவாரவிரதச் சருக்கம்.



திரிபுரை கணபதி செய்ய பூமகட்
குரியது சுக்கிர வார மோதுங்கால்
வருதனு மாதத்தின் வாய்ந்த முந்தின
பிருகுவா ரத்தினி னேற்றல் பெற்றியாம். (க)

பொழியருட் கௌரியைப் போற்றி நோற்பவ
ரெழுதழற் குண்டத்துக் கீச திக்கினிற்
கொழிதரு தண்டுலங் குலவ வேதிகை
யுழையிழை வெண்கலை யொன்று மேல்வைத்து. (உ)

திரிபுர சுந்தரி திகழுஞ் சக்கரம்
விரிதரு வெண்கலை மடிப்பின் மேலமைத்
துரைபதி னஞ்செழுத் தோங்கு மந்திரம்
புரிவுற வுரைசெய்து விதியிற் பூசித்து. (ங)

சக்கர வேதிகை தனக்குத் தென்றிசை
மிக்கவே திகைசெய்து விரித்த சாலியிற்
றொக்கவெண் ணூலினாற் சூழ்ந்த கும்பத்தைச்
செக்கர்மா மலர்கொண்டு சிறப்பத் தாபித்து. (ச)

கோமளப் பிரதிமை கும்ப மேல்வைத்து
மாமறை விதித்திடும் வகையிற் பூசித்துத்

தேமது வர்க்கத்தைச் சேர்த்த பாயதத்
தோமவெங் கனலிடை யோமஞ் செய்வனால். (ரு)

கவுரியைப் பூசித்துக் களிக்கும் வண்ணமுன்
னுவலுமந் திரங்கொடு நூற்றெட் டாகுதி
திவளொளி யங்கியிற் செய்தி யாகத்தி
னுவமையில் பரம்பரைக் குதவிப் போற்றியே. (சா)

புரிதரு பூசையை முடித்துப் பொற்புறுந்
திரிபுரை வல்லியை யுளத்திற் சேர்த்தபின்
பிரதிமை தானியம் பிறங்கு வத்திரந்
தருமவே தியருக்குத் தானஞ் செய்வனால். (எ)

சிர்த்தினிற் கும்பநீர் தெளித்து வேதியர்க்
கருத்திப்பின் னின்னமு தளித்து வேட்டது
கருத்துற வுரைசெய்து கலந்த நட்பொடுந்
திருத்தியாய்ப் போசனஞ் செய்தல் சீரிதால். (அ)

இவ்வகை கணபதி தனக்கவ் விந்திரைக்
கவ்வவர் மந்திரத் தடைவிற் போற்றுக
வெவ்வினை கெடுத்திடு மிவர்க்கு வேள்விசெய்
திவ்விய திரவிய வகையைச் செப்புங்கால். (கூ)

நறைதரு மாச்சிய நாளி கேரக்கீற்
றிறுகிய பாயத மேற்றமோ தகஞ்
செறிகனுக் கரும்பொடு திகழுஞ் சர்க்கரை
யிறையருள் கணபதிக் கேற்ற தாகுமால். (க0)

கூவிளஞ் சமித்துநெய் குலவும் பாயதம்
பூவுறை மாதுக்குப் புகன்ற வாகுமான்
மூவரிவ் விரதத்தை முன்பு தென்னவர்
தேவிமா ரனுட்டித்த செய்தி செப்புவாம். (கக)

வேறு.

வெந்திறன் மகாத்மா வென்னுந் தென்னவர் திலக வேந்தன்
மைந்தரிற் சந்திராத வங்கிச னொரு மைந்தன்
சந்ததம் வளங்குன் றுது தருஞ்சவு ராட்டி ரத்தை
யிந்திர னுலகம் போலப் புரந்தினி திருந்தா னன்றே. (கஉ)

மன்னவர் திறைய ளக்க வணங்குந்தீ மானு மைந்தன்
பின்னருஞ் சிறப்பு வாய்த்த பாஞ்சால தேச வேந்தா

யன்னொடு நாடு காத்தா னடுத்திடும் பகைஞ யெல்லா [ல்.
மின்னவிற்படுத்தும்வெம்போரிராமனென் றுரைக்குஞ் செம்ம

உத்தர கோச லத்துக் கோங்கிய வேந்த னுறை
னித்திற மிவர்கண் மூவர் புவிபுரந் திருக்குங் காலைச்
சத்துரு வேந்த ராலே தங்களு டிழந்து தோற்றுப்
புத்திரர் மனையா ரோடு மன்னிய தேசம் புக்கார். (கச)

தீர்த்தயாத் திரையை நாடித் தேசங்கள் பலவுஞ் சென்று
மூர்த்திபெற் றோங்கு முக்கண் முதல்வனைப் போற்றிசெய்து
கார்த்திகை யான மாதக் கடையினிற் குடும்பத் தோடும்
பார்த்திப ரான மூவர் பாவநா சத்தில் வந்தார். (கரு)

பொருனையிற் படிந்துமூன் றுகளவிடைப்பொலிந்துதோன்றும்
பரமனைச் சேவை செய்து பணைத்தசந் தனப்பூஞ் சோலை
விரவியங் கிருக்குங் காலை விழுத்தவ நாளு நாளு
மருவுசா னந்தி யென்னு மாதவ னங்கு வந்தான். (கசா)

இருந்தவன் வந்த போதி லெழுந்தவ னடியிற் றாழ்ந்து
திருந்தவா தனங்கொ டுத்துப் பூசனை செய்து போற்றி
யருந்துய ரடைந்தோ மின்றைக் கத்துயர் முழுது நீக்கிப் [ர்.
பெருந்தன்மை படைப்பா னிங்கு நீவரப் பெற்றோ மென்றா

செழியர்தாம் பூசை செய்யுஞ் சிறப்பினுன் மகிழ்ந்துமன்னர்க்
கொழிவிலாத் துன்பம் வந்த துளத்தினி லாய்ந்து நோக்கிப்
பழுதின்மன் னவரே நீங்கள் பருவர லொழிமின் முன்னு
ளிழிவிலா முற்பி றப்பி லிருபிறப் பாள ரானீர். (கஅ)

மருமலர்க் கூந்த லுங்கண் மனைவிமார் முற்பி றப்பிற்
பிருகுநற் குலத்தில் வந்து பிறந்தன ருங்கள் பேர்தா
முரைகலா நிதியே வேத நிதியுயர் ஞான வாரு
மரிவையர் மூன்று பேர்க்கு மடுத்திடு நாமஞ் சொல்வாம். ()

திலதமா மிலக்கு மிப்பேர் திகழ்மூத்தா மணியா நாமங்
கலகவே லனைய மைக்கட் கவியாணி யென்னு நாமங்
குலவியுங் களையங் காளிற் கொழுநரா யடைந்து நாளு
நிலைதரு பாக்கி யத்தா னிகரின்றிக் களித்து வாழ்ந்தார். (உ0)

தந்தையர் மனையி லோர்காற் சார்ந்தினி திருக்கு நாளி
லந்தக னன சந்தி யாசிவெம் பசியா லுள்ள

நொந்துழப் பெய்தி வந்தா னேக்கிலா தவனை நோக்கி
வந்தியா திகழ்ந்தார் தங்கள் பாக்கிய மயக்கி னாலே. (உக)

ஆங்கவன் கோப மெய்தி யளவிலா வுங்கள் செல்வ
நீங்கிடக் கடவ தென்று னிகழ்த்துசா பத்தா லஞ்சிப்
பாங்குற வணங்கி யன்ன பானீயங் கொடுத்துச் செய்த
தீங்கினைப் பொறுத்து மேலாந் திருவருள் புரிதி யென்றார்.

மற்றவன் மகிழ்ச்சி யெய்தி மறுவறு செல்வ மிந்தக் [ன்
கற்றையங் குழலா ரெய்தக் கடவதென் றுரைத்துப் போனு
பெற்றவச் சாபத் தாலே பெருந்துய ருழன்றீர் நீவக
ளுற்றவித் துன்ப நீங்கு முறுதியொன் றெடுத்துச்சொல்வாம்.

சுத்தநீர்ப் பொருனை யாடித் தோகையர் மூன்று பேரு
மத்தமா முகத்தான் றேவி மலர்மகட் குரிய தாகும்
வித்தகப் பிருகு வார விரதத்தை யனுட்டித் தாரேற்
புத்தியு முத்தி தானு மெளிதினிற் பொருந்த லாமால். (உச)

என்றுரை செய்து மற்றவ் விரதத்தி னியல்பை யெல்லா
மன்றலங் குழலி னார்க்கு மாதவ னுபதே சித்துச்
சென்றனன் சந்தி ராத வங்கிசன் சிறந்த தேவி
யென்றவச் சுவிர்தை பூவா ழிலக்குமி பூசை செய்தாள். (உரு)

செப்பிய விராம னாகுந் தென்னவர் பெருமான் றேவி
சுப்பிரு விமய மீன்ற சுந்தரி பூசை செய்தா
டப்பிலாத் திமான் றேவி சாத்துவி யெனும்பேர் பெற்றாள்
கைப்படு நறிய போதாற் கணபதி பூசை செய்தாள். (உசு)

மார்கழி மாதந் தன்னில் வழுதியர் மனைவி மார்தாம்
பார்புகழ் விரத நோற்றுப் பூசித்துப் பாவ லாலே
நேர்பெற முன்னே தோன்றிச் சுவிர்தைபா னேசு மாகிச்
சீரினெண் டிருவு மந்தத் திருமக ளருளிச் செய்தாள். (உஎ)

திரிபுரை வந்து தோன்றிச் சிறந்தசுப் பிருவுக் கென்று
மரியவெம் பகையை மாற்றும் வீரத்தை யருளிச் செய்தாள்
புரிகுழற் சாத்து விக்குப் புரைபடா தோங்கு செல்வங்
கரிமுகக் கடவு ளான கணபதி யருளிச் செய்தான். (உஅ)

பழுதிலா வரங்கள் பெற்றுப் பாவவி நாசர் பாதந்
தொழுதருள் படைத்து மன்னர் துணைவியர் மைந்த ரோடும்

வழிபுகும் பொழுது தங்கள் சகோதர ராக வேந்த
செழியர்பற் பலரங் கங்குக் கனவுப சாரஞ் செய்தார். (உகூ)

ஆங்கவ ரனுப்புஞ் சேனை யாழியிற் புடையிற் சூழத்
தீங்கிலாத் தங்க டங்க டேசத்தில் விரைந்து சென்று
வேங்கையைக் கண்டு சோரும் வேழம்போல் வெருவி யோடி
நீங்கிடப் பகைவ ரான நிருபரைப் பொருது வென்றார். (ங௦)

மாற்றலர்ச் செற்றுத் தங்க டேசங்கள் வளம்பெற் றோங்கப்
போற்றிவீற் றிருந்து மேலாம் போகங்கள் பலவுந் துய்த்துக்
கூற்றினை யுதைத்த பாதக் குழகனை நாளும் பூசித்
தேற்றினிற் பரலோ கத்தி லினிதுறச் சென்றுசேர்ந்தார். (ஙக)

ஆதலால் வெள்ளி வார விரதத்தை யனுட்டித் தோர்கள்
பேதமாம் பிறவி தோறும் பிழைபட மயங்கித் தேடுந்
தீதெலா மெரிசேர் வித்திற் சிதைந்திடத் திங்கள் சூடிப்
பூதவ நீழல் வாழ்வோன் புரத்தில்வீற் றிருப்ப ரன்றே. (ஙஉ)

முப்பத்துநான்காவது சுக்கிரவாரவிரதச்சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் (க௦௦௦).

---

முப்பத்துநான்காவது: சுக்கிரவாரவிரதச்சருக்கச்சுருக்க வசனம்.

சுக்கிரவார விரதமானது பார்வதிக்கும் விநாயகருக்கும் இலக்குமிக்கும் உரியது. மார்கழிமாதத்து முதற் சுக்கிரவாரத்திலே நித்தியகன்மமுடித்துப் பின்பு அக்கினிகுண்டம் அமைத்து அதற்கு ஈசானத்திலே வேதிகையிட்டுத் தண்டுலம் பரப்பி அதன்மேல் வெள்ளை வஸ்திரம் ஒன்றுமடித்துவைத்து அதன்மேலே திரிபுரசுந்தரி சக்கரத்தை யமைத்துப் பஞ்சாக்ஷர மந்திரத்தை யுச்சரித்துப் பூசைசெய்து சக்கரவேதிகைக்குத் தென்றிசையிலே யொருவேதிகைசெய்து அதன்மேலே நெல்லைப்பரப்பி வெள்ளிய நூல்சுற்றிய கும்பத்தைச் சிவந்த மலர்களாலே யலங்கரித்துத்தாபித்துப் பொன்னாற்செய்த பிரதிமையொன்றைக் கும்பத்தின்மேலேவைத்து, வேதவிதிப்படி பூசித்துத் தேன்வர்க்கஞ் சேர்ந்தபாயசத்தால் ஓமஞ்செய்து பார்வதியைப் பூசைசெய்து முன்சொன்னமந்திரத்தால் நூற்றெட்டாகுதி ஓமகுண்டத்திலே செய்து பார்வதிக்குக்கொடுத்தப் பூசையைமுடித்துப்பின்பு பார்வதியைத் தன்னுளத்திலே யொடுக்கிக்கொண்டு பிரதிமை வஸ்திரந்தானிய முதலியவைகளை நல்லொழுக்கமுள்ள வேதி

யருக்குத்தானஞ்செய்து கும்பத்தினீரைச்சிரத்திலே தெளித்துக்கொண்டு பிராமணபோசனஞ் செய்வித்து, தானிச்சித்தகாரியத்தை முடித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துச் சுற்றத்தாரோடும்போசனஞ் செய்யவேண்டும்; இதுதான் பார்வதியை யுத்தேசித்துச் செய்யுஞ் சுக்கிரவாரவிரதமாம்.

இந்தக்கிரமப்படியே விநாயகருக்கும் இலக்குமிக்கும் அவரவர் மந்திரங்களால் சுக்கிரவாரவிரதஞ் செய்து முடிக்கவேண்டும். இனி அவரவர்களுக்குச்செய்யும் ஓமாக்கினியின் திரவியவகையைச்சொல்லுவோம். நெய்யும் தேங்காய்க்கீற்றும் திண்ணமாகிய பாயசமும் மோதகமும் கரும்பும் சர்க்கரையும் விநாயகருடைய ஓமாக்கினிக்குரிய பொருள்களாம். வில்வச்சமித்தும் நெய்யும் பாயசமும் இலக்குமியினது ஓமாக்கினிக்கு உரியபொருள்களாம். இந்தவிரதத்தை முற்காலத்திலே பாண்டியராசாக்களது மனைவிமார் மூன்றுபேர் அநுட்டித்த கதையைச்சொல்லுவோம். மகாத்மாவென்னும் பாண்டியன் புத்திரர் மூவர்களிலே சந்திராதவங்கிசனென்பவன் சவுராட்டிரதேசத்தை அரசாண்டுவந்தான். தீமானென்னுமைந்தன் பாஞ்சாலதேசத்தை அரசாண்டுவந்தான். இராமனென்னு மைந்தன் கோசலதேசத்தை அரசாண்டுவந்தான்.

இம்மூன்றுபேரும் ஒருகாலத்திலே பகையரசர்களாலே தங்கள் தங்களுடைய நாடுநகரமுதலிய எல்லாமிழந்து மனைவிபுத்திராதியர்களுடன் அன்னியதேசம் புகுந்து தீர்த்தயாத்திரைசெய்து பலதேசமுஞ்சுற்றிக் கார்த்திகைமாதத்தின் முடிவிலே பாவநாசத்தலத்தை வந்து சேர்ந்து தாமிரபன்னியிலே ஸ்நானஞ்செய்து முக்களாலிங்கப் பெருமானைத் தரிசனஞ்செய்து ஒரு சந்தனப்பூஞ்சோலையிலே யிருக்கும்போது அவ்விடத்துக்குச் சானந்தியென்னு மகாமுனிவர் வந்தார். உடனே அங்கிருந்த அரசர்கள் மூவருந் தங்கள் தங்கள் பத்தினிமாருடனே யெழுந்து வணங்கித்தோத்திரஞ்செய்து நின்றார்கள். அம்முனிவர் அவர்செய்யும் பூசனையைமகிழ்ந்து அவர்களடைந்த துன்பத்தையறிந்து இரங்கி அரசர்களே! நீங்கள் துன்பத்தை விட்டுவிடுங்கள். முற்சனனத்திலே நீங்கள் மூவரும் பிராமணராகப் பிறந்திருந்தீர்கள். உங்கள் பத்தினிமார்கள் மூவரும் பிருகுரிஷி வம்மிசத்திலே பிறந்திருந்து புண்ணியவசத்தால் உங்களை நாயகராக்ப்படைத்துப் பெருவாழ்விலிருந்தார்கள். இந்தப்பெண்கள் மூவரும் பிதாவீட்டிலேயிருக்கும்போது கண்ணில்லாத ஒருசந்நியாசி பிச்சைக்கு வந்தார்

அவருக்குப்பிச்சை யிடாமலும் வணங்காமலும் செல்வச்செருக்கினு லே அவரையிகழ்ந்தார்கள்.

உடனே அம்முனிவர் அளவில்லாத உங்கள் செல்வமெல்லாம் நீங்கித் துன்பமெய்தக்கடவீரென்று சபித்தார். பெண்கள் மூவரும் பயந்து நடுநடுங்கி முனிவரைவணங்கி யுபசரித்து எங்கள்குற்றத்தைப் போக்கித் திருவருள் புரியவேண்டுமென்ற அளவிலே முனிவர் சந் தோஷித்து முன்போல நீங்கள் செல்வமெய்தக்கடவதென்று சொ ல்லிவிட்டுப்போயினர். ஆதலால் அரசர்களே! நீங்கள் மூவரும் உங் கள் பத்தினிமாரும் இந்தத்தாமிரபன்னி நதியிலே ஸ்நானஞ்செய்தபி ன்பு உங்கள் மனைவியர் மூவரும் விநாயகர், பார்வதி, இலக்குமி இ ந்த மூவர்களுக்கு மூரிய சுக்கிரவாரவிரதத்தை அநுட்டிப்பாரானல், புத்திமுத்தியும் பொருந்தலாகுமென்று விரதம் அநுட்டிக்கும் மு றையை அப்பெண்கள் மூவருக்குஞ் சொல்லித் தமதிடத்துக்குச் சென்றார். பின்பு அப்பெண்கள் மூவரும் மார்கழிமாதத்திலே சுக் கிரவாரவிரதத்தை விநாயகர், பார்வதி, இலக்குமியென்னு மூவரை யும் பிரார்த்தித்து அநுட்டிக்கவே விநாயகர் முதலிய மூவருமெதி ரெழுந்தருளி அவரவர் வேண்டியவரங்களைக் கொடுத்துச்சென்றனர். அதன்மேல் அரசர்கள் மூவரும் மனைவியரும் புத்திரரும் முக்களா லிங்கரைப்பூசித்துத் திருவருள்பெற்று வரும்போது தங்களுக்கு ஞா தியர்களாகிய பாண்டியர்கள் உபசரித்துக்கொடுக்கப்பட்ட நால்வ கைச்சேனைகளுடன் தங்கள் தங்கள் தேசத்திற்சென்று போர்செய்து பகைவரைவென்று முன்போலத் தங்களுக்குரிய நாட்டைத்தாங்கள் அரசாட்சிசெய்திருந்து சிவபிரான்றிருவருளால் முடிவிலே பரலோ கஞ்சேர்ந்தார்கள். ஆதலால் சுக்கிரவாரவிரதத்தை இம்முறைவிதிப் படி அநுட்டித்துவருவார்களாயின், பாவங்களையெல்லாம் போக்கிச் சிவபிரான் திருவடிநீழலை அடைவார்கள்.



## முப்பத்தைந்தாவது: புராணமகிமைச்சருக்கம்.



பரம திவ்விய புராணங்க ளாகிய பதினெட்டு வகையுள் ளு, முறைசெ யும்பிர மாண்டபு ராணத்தி லுத்தர பாகத்தில்,
விரவு க்ஷேத்திர வைபவ கண்டத்தின் மெல்லிய லொருபாகன்,
மருவு பாவவி நாசமான் மியம்வகுத்துரைத்தது மறைவில்லீர்.

இன்ன தன்மைய தானபு ராணத்தை யியல்புறப் படிப் போர்க, ணன்ன யம்பெறக் கேட்பவர் வேட்பன யாவையு நல ம்பெற்றுப், பின்னர் முன்னுறு தீவினை மாற்றுவர் பெரும்ப வக் கடனீந்திப், பன்ன கப்பணிப் பரமன்வீற் றிருந்தருள் பா கதி யடைவாரால். (உ)

வேத நான்கினும் விளங்கிய பதினெட்டு வேள்வியாற் ற வந்தன்றாற், றீதி லாவகை புரிசிவ பூசையாற் செழித்திடும் பலனெல்லாஞ், சோதி பாவவி நாசபு ராணத்தைத் துகளறப் படித்தாலு, மேது நீதத்தைக் கேட்பினும் பூதலத் தெளிதினி ற் பெறுவாரால். (ங)

மூத்தி யாமென விக்கதை கேட்பதன் முன்னுள தொ ருகாதை, சித்தி யாமது செப்புதுந் திரைகெழு சிந்துமா நதிப் பாங்க, ருத்தி யானஞ்சூ ழாதனு நகரெனு மொருதிரு நகர்த ன்னில், வித்தி யாநிதி யென்றொரு விப்பிரன் வீற்றிருந் தன ன்மன்னோ. (ச)

வேறு.

அந்தமறை யோனழகி லங்கசனை யொப்பா
னிந்திர சிலைப்புருவ வல்லியர்க ளெல்லாஞ்
சிந்தையிலன் னோன்வடிவு சிந்தைசெய்த லாலே
மைந்தனவன் வண்ணமென மைந்தரை யுயிர்த்தார். ()

அப்பதி யிருப்பவ ரகத்தினி விகத்தில்
வைப்பென வளர்க்கவரு மைந்தர்தமை நோக்கி
யிப்படி பிறக்கவரு மேதுவெது வென்று
மெய்ப்புதல்வ ரோடுமனை யாரையும் வெறுத்தார். (சூ)

வாய்ந்தகுல மங்கையர் மயங்கவடி வுற்ற
வேந்தலையு மப்பதி யிருப்பவர் துரப்பக்
காந்தனிவ னென்னவிழை காந்தனை மறந்து
தோய்ந்துபல மங்கையர் தொடர்ந்திட நடந்தான். (எ)

நீடுரிய மங்கண்மறை நீதியு மறந்து
காடுபல நாடுபல கண்டுகழை யேறி
யாடுபவ ரொன்னமயி லன்னவர்கள் சூழச்
சேடுதரு பாலரொடு நாள்பல திரிந்தான். (அ)

காசியை யடைந்துசில காலமதில் வைகித்
தேசற மயங்கவரு தீவினை புரிந்து
நேசமற வாதவர்சொ னிந்தையை யடைந்தே
யாசைதனி லாசைவர வப்பதி யகன்றான். (கூ)

புத்தியுற வும்மைபுரி புண்ணிய பலத்தான்
மொய்த்தமட வார்நடுவண் மூப்பொடு நடந்து
நத்துநவ முத்தமொளிர் புட்கலநன் னாட்டி
னித்தனுறை யச்சுத நெடும்பதி யடைந்தான். (க௦)

புண்டரிக மாலைபுனை பூசுரரை யுற்றா
னண்டருல கிற்பொலி யயோத்திநகர் தன்னிற்
பண்டுலகு காத்தருள் பகீரதன் வியப்பத்
தண்டதரன் விண்டகதை தங்களில் விரித்தார். (கக)

தீதுமதி யாதுபல செய்பவர்க ளெய்தும்
வேதனை செவிப்படலும் வேதியன் மருண்டு
போதமற வாடியுயிர் போக்கும்வகை யெட்டிப்
பாதவ விதைக்கொரு வனத்திடை படர்ந்தான். (கஉ)

வேறு.

தழைத்தவவ் வனத்தி னுப்பண் சானந்தி முனிவ னென்பான்
குழைத்தநீ றக்கமாலை கொழித்திடு மெய்யார் கேட்ப
விழைத்தபே ரன்பிற் காதை விரிப்பதில் விருத்த மொன்று
புழைத்தடஞ் செவியாற்கேட்டுப்பூசுரன்பணிந்துசொல்வான்

உரைத்தவிவ் விருத்தத் தோதும் பொருள்விரித் துணர்த்து கென்ன, விரித்துமா முனிவன் சொல்வான் மேம்படு பாவநாசத், திருத்தலத் தியாவ ரேனுஞ் சேருங்கா லன்னோர் தீங்கு, பரித்தன முழுதுந் தீர்த்துப் பரகதி யளிப்போ மென்று. (கச)

சங்கரன் விராட்டுக் கேட்பச் சாற்றிய கதையீ தென்றா
னங்கது கேட்டு வித்தி யாநிதி மகிழ்ச்சி பூத்து
மங்கையர் பால ரோடும் வழிக்கொண்டு விரைந்து சார்ந்தான்
பங்கமி லோங்கு ரோசப் பாவவி நாசத் தெல்லை, (கரு)

தினகரோ தயங்கண் டோடுந் திமிரம்போற் றீங்கு நீங்க
வனகமாம் வேத தீர்த்த மடைந்துநீர் படிந்து செம்பொற்

சினகரச் சிறப்புந் தெள்ளு மருவியுந் தென்றற் குன்றுங்
கனகநா டளவு சந்தக் கானமுங் களிப்பக் கண்டான். (கசு)

ஆலய முன்பு தாழ்ந்து வலஞ்செய்துள் ளணைந்து செங்கண்
மாலயற் கரியாய் பேயேன் வல்வினை யொழித்தா யென்று
மேலெலாம் புளகம் பூப்ப விழிபுனல் சொரியா நிற்பப்
பூலவோ சனனைப் போற்றிப் பரவச மெய்தி நின்றான். (கஎ)

வணங்கிய மறையோன் முன்னர் மழவிடை மேற்கொண் டெ
கணங்குழை பாக மாகக் காட்சிதந் தருளக் கண்டு [ந்தை
குணங்கொளா னந்தவெள்ளங் குளித்தனன் குணத்தின் மிக்கா
யணங்கனார் பால ரோடு மடைதிநம் பதத்தி லென்றான். ()

ஈசனக் கணத்தின் ஞான விலிங்கத்தி னுறைந்தா னின்ற
பூசுரன் விமான மேறிப் பூவையர் புதல்வ ரோடு
மாசிலாக் கயிலை சேர்ந்தான் மற்றிவன் பதமீ தென்றாற்
பேசுமிக் கதையைக் கேட்போர்பெறும்பலன்பேசற்பாற்றே.

வேறு.

என்று சூதமா முனிவர னுரைசெய விருந்தவர் பலர்கேட்டுத், துன்று மானந்த வாரியின் மூழ்கியச் சூதனைப் பணிந்தேத்தி,நன்று கூர்சிவ சரிதைநின் வாக்கினா லுங்கள்கேட் டிடப்பெற்றுக், குன்றி டாநலம் படைத்தன மெமக்கொரு குறையிலை யினியென்றார். (உ0)

பிருகு சூதனுக் கிருங்கலைபாதுகைபிரமனை கொடுத்தான்மற்
றரிய தாகுமப் பிரமனை யெவ்விடத் தெய்தினு மாங்கெய்துங்
கரக மொன்றுவி மானமொன் றருந்தவக்காசிப முனிதந்தான்
புரிச டைப்பல முனிவரு மியன்றன கொடுத்தனர் பூசித்தார்.

உளங்கனிந்துசெய்ம்மாதவர்பூசையாலொழிவிலாமகிழ்பூத்துத்
துளங்கு றாதுதன் னாச்சிர மத்தினிற் சூதமா முனிசென்றான்
களங்க றுத்தமுக் களவினா னிணையடி கருத்துறப் பாவித்து
விளங்கு தங்கடம் மாச்சிரமங்களின்மெய்த்தவர்சென்றுற்றார்.

நூலரங்கேற்றுங் காலமும் இடனும் காரணமும்.

அம்பொன் மாளிகை யாறைவாழ் மயிலப்ப னருள்குமாரசுவாமி, தம்பி யாமுகில் புகழ்ச்சிவ சயிலநா தனுக்குமுன் னவனானேன், கம்ப மாகரி காத்தரு ளழகப்பன் கனிந்தவன்

பொடுங்கேட்ப, வும்பர் நாயகர் சந்நிதா னத்தினி லுரைத்ததிக் கதையாமால். (உரு)

தென்ற னின்றசை தென்கயி லாசமாஞ் செழுந்தமிழ்க் கிரிவாழி, குன்றி டாப்புகழ் கொழித்ததிற் செழித்துறை கும்பமா தவன்வாழி, பொன்ற யங்கலர் புதுமணி திரைத்தெழு பொருநைமா நதிவாழி, வென்றி மீனவ னட்டினுக் கணியென விளங்குசெந் தமிழ்வாழி. (உச)

கூறு மாகம முறைப்படி மூக்களாக் குழகனைத் தினநீங்கா தாறு காலமும் பூசித்து நேசம்வாய்த் தருள்சிவ மறையோர் தா, மீறி லாப்பொரு ளுருத்திரர் மயேசுரர் சதாசிவ ரெனவோங்கி, மாறி லாப்புகழ் படைத்தென்றும் வாழிநான் மறைகளாகமம்வாழி. (உரு)

கனக வார்சிலைக் கலியாண சுந்தரக் கடவுள்பூ சனைநாளு, மனுவி னுணையி னடத்தல்போற் குறைவற வளர்த்திடுந் தலத்தார்தாஞ், சனக மாமுனி சனந்தரர் சனுதரர் சனற்குமா ரரைப்போலத், தினமும் வாழியாச் சிரமங்க ளான்கினுஞ் செழிக்குமர் தணர்வாழி. (உசு)

பாவ நாசர்தம் பூசனை திருவிழாப் பல்வகைச் சிறப்பெல்லாங்
காவன் மன்னருக் கறிவித்து நடத்திடுங் காணிக்கர் மிகவாழி
தேவர் தேவர்பண் டாரத்தின் காரியஞ் செய்பவர்தினம்வாழி
நாவ லோர்குரு தேசிகர் வாழிசீர் நலந்தரு மறைவாழி. (உஎ)

ஆசை வேரறக் கடிந்துமெய்த் தவம்புரி யருந்தவர் நெறிவாழி
வாச பேயமே முதலிய வாகம மனுநெறி முறைவாழி
வீசு மெய்ப்புகழ் மன்னவர் வாழியர் வித்தகத் தமிழோங்குந்
தேச மெங்கணும் வாழிநீ டூழியுஞ் சிங்கையம் பதிவாழி. ()

முப்பத்தைந்தாவது புராணமகிமைச்சருக்கம் முற்றிற்று.

ஆசத் திருவிருத்தம் (௧௦௦௨அ.)

பாயிரமுன்படத் திருவிருத்தம் (௧௦௦௩௧.)

பாவநாசத் தலபுராணம் முற்றிற்று.

சிவபிரான் றிருவடிவாழ்க.

## முப்பத்தைந்தாவது புராணமகிமைச்சருக்கச்சுருக்க வசனம்.

வேதங்களையுணர்ந்த முனிவர்களே! இந்தப்பாவநாசத்தலத்தின் மான்மியம், பதினெண்புராணத்து ளொன்றாகிய பிரமாண்டபுராணத்தில் உத்தரபாகத்திலே க்ஷேத்திரவைபவ காண்டத்திலே சிவபிரான் திருவாக்கினு லருளிச்செய்யப்பட்டது. இந்தமான்மிய முள்ள புராணத்தைப் படிப்பவர்களும், கேட்பவர்களும் விரும்பிய எல்லாப் போகங்களையும்பெறுவர். பாவமாகிய கடலையுநீந்திச் சிவபிரான் திருவடியாகிய கரையையடைவார்கள்; அன்றியும் வேதத்திலே கூறிய பதினெட்டு வித யாகத்தைச்செய்த பலன்களையுஞ் சிவபூசைசெய்த பலனையும் பெறுவார்கள். இந்தப்புராணம் படிக்குமிடத்தில் நடந்த கதையொன்றுளது அதனைச்சொல்லுகிறேன் கேளுங்கள் முனிவர்களே! யென்று சூதமுனிவர்சொல்லுவார். சிந்துமாநதிக்கரையிலேஒரு சோலைசூழ்ந்த அரதனநகரமென்னும் ஒரு ஊரிலே வித்தியாதரன் என்னும் ஒருபிராமணனிருந்தான்; அவன் அழகிலே மன்மதனையொப்பானவன். ஆதலாலே அவ்வூரிலுள்ள பெண்களெல்லாம் அவனை மனத்திலே நினைப்பாராயினர்.

நினைப்பின் வழியே அப்பெண்கள் பெறும் பிள்ளைகளெல்லாம் அப்பிராமணனைப் போலவேயிருந்தன. அதுகண்டு புருடர்களெல்லாம் சந்தேகித்து அப்பெண்களையும் பிள்ளைகளையும் வெறுத்து விட்டார்கள். பின்பு வித்தியாதரனாகிய அந்தப்பிராமணனையும் ஊரை விட்டு அப்பாலே துரத்தினார்கள். அவனும் அப்பெண்களிற்சிலர் தன்னைத்தொடர்ந்துவர வெளிப்பட்டு வெகுதூரஞ் சென்றலைந்து திரிந்து காசிக்ஷேத்திரத்தை யடைந்து சிலநாளிருந்து அங்குள்ளார் தன்னைநிந்திக்க அப்பாற்சென்று புட்கலநாட்டிலுள்ள அச்சுதநகரத்தையடைந்து அங்குள்ள பிராமணர்கள் (பகீரதனுக்குத்தண்டதரன் சொல்லிய கதைபடித்துக் கொண்டிருக்குமிடஞ்சென்று) பாவங்கள் பலவகையாகச் செய்யப்பட்டவர்களெய்துந் துன்பத்தையெடுத்துப் பிரசங்கஞ்செய்யக்கேட்டுத் தன்னுடைய உயிரை விட்டுவிடும் பொருட்டு உண்ணுதற்காக எட்டிவிரையைத்தேடி ஒரு வனத்திலே போம்போது, அவ்வனத்திலே யிருக்குஞ் சானந்திமுனிவர் பாவநாசத்திலே விராட்டு கேட்பச்சிவபிரான் அருளிச்செய்த மான்மியமுள்ள பாவநாசத்தலத்தைச் சேர்ந்தால் எவ்வகைப்பட்ட பாவமும் நீங்குமென்று பாவநாசத்தலபுராணம் படிக்கக்கேட்டுப் பின்பு பாவநாசத்

தலத்திலே வந்து வேத தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, ஆலயத்தையும் பொதிகை மலையினருவியையும் சந்தனப்பூஞ்சோலையையுங் கண்டு முக்களாலிங்கத்தைத் தரிசித்துப் பேரானந்த பரவசமடைந்து ஆனந்தக்கண்ணீர் பொழியத் தோத்திரஞ்செய்தான்.

உடனே சிவபிரான் கருணைகூர்ந்து இடபாரூடராயெழுந்தருளி வந்து நின்று வித்தியாதரனைப்பார்த்து நீயும் உன்னோடு நின்ற பெண்களும் பிள்ளைகளும் நம்முடைய பதத்திலேவந்து சேருங்களென்று கட்டளையிட்டு இலிங்கத்துள்ளே மறைந்திருந்தனர். உடனே விமானத்திலேறி வித்தியாதரன் பெண்கள் பிள்ளைகளுடன்சென்று திருக்கயிலாச மலையைச்சேர்ந்தான். இவன் பதவியிதுவானால் கிரமமான நியமமுள்ளவர் இப்புராணங்கேட்பரானால் அவர் பெறும்பலனையாராற் சொல்லக்கூடுமென்று சூதமுனிவர் அருளிச்செய்ய மற்றைமுனிவர் பலருங்கேள்வியுற்று ஆனந்தவாரியிலே மூழ்கிச் சூதமுனிவரைவணங்கி அவரவராலியன்ற தக்ஷிணைகொடுத்துத் தோத்திரஞ்செய்து மகிழ்ச்சி யடைந்தார்கள்.

வயிராசலிங்கந்துணை.



# சருக்க அகராதி.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௨ | ௯ | மிடறுரு ... | மிடற்ரு. |
| ௧௬ | ௧௧ | லிங்க் ... | லிங்க. |
| ௧௭ | ௧௫ | மலேத ... | மலேத். |
| ௧௮ | ௧௩ | பரம ... | பரம். |
| ௧௯ | ௫ | வியிரா ... | வயிரா. |
| ௨௦ | ௨௪ | பனே ... | பணே. |
| ௩௪ | ௧௬ | யேர ... | யேசுர. |
| ௫௬ | ௭ | வினம ... | வினம். |
| ௬௦ | ௨௯ | மூகம ... | மூகம். |
| ௬௧ | ௧௫ | விரை ... | வீரை. |
| ௬௩ | ௨௦ | வொங் ... | வோங் |
| ௭௭ | ௧௮ | புகுநது ... | புகுந்து. |
| ,, | ௨௯ | லிங்கா ... | லிங்கர் |
| ௮௩ | ௧௧ | யின ... | யின். |
| ௯௩ | ௮ | பொன்னம ... | பொன்னம். |
| ,, | ௩௦ | திறு ... | திரு. |
| ௯௪ | ௩௩ | திமே ... | தின்மே. |
| ௯௬ | ௨௫ | திரத்த ... | திர்த்த. |
| ௧௦௧ | ௨௦ | சேனே ... | சேனே. |
| ௧௦௫ | ௨௧ | ராமோ ... | ராமே. |
| ௧௦௬ | ௨௩ | பிரக்ஷ ... | பிரதக்ஷ. |
| ௧௦௭ | ௧௭ | தித்தி ... | தித்த. |
| ௧௧௪ | ௨௭ | னவத் ... | வைத். |
| ௧௨௦ | ௧௬ | ஆக்க ... | ஆங்க. |
| ௧௨௫ | ௭ | மூதிதத ... | மூதித்த. |
| ௧௨௬ | ௧௨ | மோகு ... | போகு. |
| ,, | ௨௮ | யாடவ் ... | யாடல். |
| ௧௩௩ | ,, | சர்த்தி ... | சாத்தி. |
| ௧௩௯ | ௩௦ | வநதா ... | வந்தா. |
| ௧௪௭ | ௧ | தித்யா ... | த்தியர். |
| ,, | ௧௫ | யாடிடும ... | யாடும. |
| ௧௬௪ | ௨௪ | திரியா ... | தரிலா. |
| ,, | ௩௧ | துயிர ... | துயிர். |
| ௧௬௭ | ௧௬ | பமபை ... | பம்பை. |
| ௧௭௯ | ௨௧ | கொல் ... | கோல். |
| ௧௮௦ | ௩௨ | சத்தா ... | சததா. |
| ௧௮௮ | ௨௨ | சேனே ... | சேனே. |